# சித்தர்களின் வாழ்வியல் தத்துவம்

சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு
முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காக
அளிக்கப்பெற்ற ஆய்வேடு

ஆய்வாளர்
**சு.இரவீந்திரன்**

நெறியாளர்
**முனைவர் தி.மகாலட்சுமி**
இணைப்பேராசிரியர்
இலக்கியம் மற்றும் சுவடிப்புலம்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்



**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**
இரண்டாம் முதன்மைச் சாலை, சி.ஐ.டி. வளாகம்
தரமணி, சென்னை – 600 113
திசம்பர் 2011

**சு. இரவீந்திரன்**
முனைவர் பட்ட ஆய்வாளர் (முழுநேரம்)
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை - 600 113

# ஆய்வாளர் உறுதிமொழி

'சித்தர்களின் வாழ்வியல் தத்துவம்' என்னும் பொருண்மையில் முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காகச் செய்யப்பட்ட இவ்வாய்வு என் சொந்த முயற்சியால் உருவானது. இதற்குமுன் வேறு எந்த ஆராய்ச்சிப்பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப் பெறவில்லையென உறுதி அளிக்கிறேன்.

இடம் : சென்னை

நாள் : 25. 1. 2012.

**(சு. இரவீந்திரன்)**
ஆய்வாளர்

**முனைவர் தி. மகாலட்சுமி**
இணைப்பேராசிரியர்
இலக்கியம் மற்றும் சுவடிப்புலம்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை - 600 113

# நெறியாளர் சான்றிதழ்

'சித்தர்களின் வாழ்வியல் தத்துவம்' என்ற தலைப்பில் சு. இரவீந்திரன் (முழுநேரம்) அவர்களால் 2003 முதல் 2011 வரையான கல்வி ஆண்டுகளில் ஆராய்ந்து படைத்துள்ள இவ்வாய்வேடு, அவர்தம் முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்கென அவர் செய்த ஆய்வின் விளைவாக அமைந்ததெனவும், இவ்வாய்வு இதற்குமுன் வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கும் அமைந்திலது எனவும், எனது நெறியாளுகையின்கீழ் அவர் தன் சொந்த முயற்சியில் படைத்ததெனவும் சான்றளிக்கிறேன்.

(தி. மகாலட்சுமி)
நெறியாளர்

இடம் : சென்னை

நாள் : 25. 01. 2012.

இயக்குநர் 31/1/2012
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்
தரமணி அஞ்சல், சென்னை–600 113

# நன்றியுரை

உலகச் செம்மொழியாம் தமிழை ஆராய்ச்சி செய்திடவும், பழைமையான ஓலைச் சுவடிகளை ஆய்ந்து, நூலாக்கிப் பதிப்பித்துத் தமிழன்னைக்கு மகுடம் சூட்டிக் கொண்டிருக்கும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் என்கிற தமிழ்த் தேன்கூட்டின் தேனீயாக இன்பமுற என்னை ஆளாக்கிய இந்நிறுவனத்திற்கும், பல்லாயிரக்கணக்கான மாணவச் செல்வங்களை ஈன்றெடுத்து பட்டமளித்துப் பாராட்டி மகிழ்ந்த பெருந்தாயாம் சென்னைப் பல்கலைக்கழகத்திற்கும் எனது மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

எனது இவ்வாய்வுக்கு அனுமதி அளித்த மேனாள் இயக்குநர் முனைவர் சா. கிருட்டினமூர்த்தி அவர்களுக்கும், இயக்குநர் (கூ.பொ.) முனைவர் கா.மு. சேகர் அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என்னை ஆய்வு மாணவராக ஏற்று, எனது ஆய்வில் அவ்வப்போது ஏற்பட்ட தடைகளுக்கும், தொய்வுக்கும் என்னை உற்சாகப்படுத்தி ஐயம் நீக்கிய அன்னையாக இவ்வாய்வேடு நல்லமுறையில் அமைவதற்கு பெரிதும் வழிகாட்டியாகத் திகழும் நெறியாளர் இணைப்பேராசிரியர் முனைவர் தி. மகாலட்சுமி அவர்களுக்குக் காலமுள்ளவரையும் நன்றி உடையவனாயிருக்கின்றேன்.

ஆய்வு நெறி முறைக்குப் பெரிதும் உதவி நல்கிச் சிறிது காலம் எனக்கு நெறியாளராக இருந்து ஓய்வு பெற்ற இணைப்பேராசிரியர் முனைவர் சூ.நிர்மலாதேவி அவர்களுக்கும், வல்லுநர்குழு உறுப்பினர்களாகக் கலந்து கொண்டு எனக்கு வழிகாட்டிய பேராசிரியர் முனைவர் டி. ரெங்கநாதன் அவர்களுக்கும், சென்னை மாநிலக் கல்லூரி, தமிழ் இலக்கியத் துறைப் பேராசிரியர் முனைவர் அர்த்தநாரீசுவரன் அவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

# உள்ளுறை



| இயல் | தலைப்பு | பக்கம் |
|---|---|---|
| | முன்னுரை | 1 |
| ஒன்று | சித்தர்களும் அவர்களின் காலமும் | 10 |
| இரண்டு | சித்தர்களின் வாழ்வியல் நோக்கு | 54 |
| மூன்று | இலக்கியம் படைத்தருளியதும் சித்தர்களின் ஆற்றல்களும் | 78 |
| நான்கு | சித்தர்களின் கடவுள் கொள்கையும் ஆன்மிகப் பணிகளும் | 116 |
| ஐந்து | மரணமிலாப் பெருவாழ்வும் சமாதி நிலையும் | 155 |
| ஆறு | பதினெண் சித்தர்கள் வழிநின்ற ஞானிகளும், பெண் துறவிகளும் சித்தினிகளும் தொண்டும் | 204 |
| | முடிவுரை | 236 |
| | துணை நூற்பட்டியல் | 242 |
| | பின்னிணைப்புகள் | 256 |

இவ்வாய்வேட்டை முடிப்பதற்குச் சிலகாரணங்களால் ஏற்பட்ட நடைமுறைச் சிக்கல்களை நீக்கி ஆய்வுத் தொடர எனக்குப் பக்கபலமாய்த் திகழ்ந்த அன்பு உள்ளத்தார், என் நெஞ்சில் நிறைந்த அன்பர் 'சோதிட மாமணி', 'சோதிட ரத்னா' முனைவர் க.ப. வித்யாதரன் அவர்களுக்கும், கால நீட்டிப்புக்குப் பெரிதும் உறுதுணையாய் நின்ற மதிப்பிற்குரிய திரு.ஞானபிரகாசம் அய்யா அவர்களுக்கும் எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுக்கு பெரிதும் துணைநின்ற நிறுவன கண்காணிப்பாளர் திரு. இராசா அவர்களுக்கும், இயக்குநரின் தனிஉதவியாளர் திரு.ச.குணசீலன் அவர்களுக்கும், அரிய பல நூல்களை அளித்துதவிய நூலகத்தார்கள் திருமதி பார்வதி (ஓய்வு), திரு. பெருமாள்சாமி, திரு. செல்வக்குமார் ஆகியோருக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வேட்டின் பிழைத் திருத்தத்திற்கு உதவிய எனது அன்புச் சகோதரர் திரு. சே. கரும்பாயிரம் அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். எனக்குத் தமிழார்வத்தைத் தூண்டி, என்னை இந்நிலைக்கு ஆளாக்கிய எனது பாசமிகு அய்யா மானாமதுரை தெய்வத்திரு புலவர் அ.சங்கர், புலவர் திருமதி. இரமணிசங்கர் ஆகியோருக்கும், ஆன்மிகத்தில் குருமார்களாகவும், வழிகாட்டிகளாகவும் திகழ்ந்த இருகண்களாம் பிரம்மஸ்ரீ.மரு.ஏ.ஜி. கணபதி அடிகள் அவர்களுக்கும், பிரம்மஸ்ரீ சன்மார்க்கச் செம்மல் கூ. சங்கரய்யா அவர்களுக்கும் என் கனிவான நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஏழ்மையிலும் செம்மையாய் வளர்த்து பெருமைபடச் செய்த எனது தந்தை தெய்வத்திரு உத்திரமேரூர் அ. சுப்பிரமணியம் அவர்களுக்கும் எனது தாயார் ஆண்டாளம்மையார் அவர்களுக்கும் இப்பிறவி முழுதும் நன்றியுடையவனாய் இருக்கின்றேன். என் மக்கட்செல்வங்கள் டாக்டர். இரவி.சுகந்தன், இரவி.இராமலிங்கம் ஆகியோருக்கும் என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன். எனக்குத் துணை நிற்கும் பிரேமாவுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இல்வாழ்வுத் துயரங்களில் துவண்ட எனக்குத் தோள் கொடுக்கும்

தோழராய்த் திகழும் ஆன்மநேயச் சகோதரர் பிரம்மஸ்ரீ பி.வேதாச்சலம், சகோதரி திருமதி. விமலா வேதாச்சலம் அவர்களுக்கும், என்மீது அன்பு காட்டும் அனைத்து உள்ளங்களுக்கும் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனது ஆய்வினைக் கணிப்பொறியில் சிறப்பாக அச்சிட்டு, ஆய்வேடாக உருவாக்கித் தந்த திருவாளர் சு.கண்ணன், திருமதி. கவிதாகண்ணன் அவர்களுக்கும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவன அலுவலர்களுக்கும், பணியாளர்களுக்கும் எனது நெஞ்சம் நிறைந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**சு. இரவீந்திரன்**

## சுருக்க விளக்கம்

| | | |
|---|---|---|
| ப. | – | பக்கம் |
| பா. | – | பாடல் |
| ஆ.இ. | – | ஆண்டு இல்லை |
| ப.ஆ.இ. | – | பதிப்பு ஆண்டு இல்லை |
| ப.இ. | – | பதிப்பகம் இல்லை |
| ப.ஆ. | – | பதிப்பாசிரியர் |
| மேற்படி | – | மேற்சுட்டிய நூல் |
| மொ.பெ.ஆ. | – | மொழிபெயர்ப்பு ஆசிரியர் |
| தி.தெ.சை.சி.நூ.க. | – | திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் |

# முன்னுரை

தமிழ் இலக்கியம் என்பது சித்தர்களுடைய அரிய படைப்புகளையும் உள்ளடக்கியதாகும். சித்தர் இலக்கியம் எனக் குறிப்பிட்டுக் கூறுமளவிற்கு இவர்களின் படைப்புகள் இற்றை நாளில் பெருகிவருகின்றன. மானிட வாழ்வை ஆன்மிக நோக்குடனும், அறிவியல் நோக்குடனும் அணுகினர். அருள்நோக்குடன் உலக மக்களுக்காக, அவர்கள் வாழ்வுச் செம்மையுற இறைத் தத்துவத்தையும், உயிர்த்தத்துவத்தையும், உடலியக்கத் தத்துவத்தையும் பற்றி நூல்களாகப் படைத்தனர். இறப்பினைத் தவிர்த்து மனிதன் மாண்புற வாழும் வாழ்வியல் தத்துவங்களையும் படைத்துள்ளனர். மருத்துவ இயல், வானியல், வேதியல், சோதிடவியல், உளவியல், ஆன்மவியல் போன்ற பல்வேறு துறைகளில் இவர்களின் ஆய்வுகளும் கருத்துகளும் பயன்பட்டு வருகின்றன.

சமுதாயம் நன்னெறியுடனும், தனிமனித ஒழுக்கக் கட்டுபாடுகள் நிறைந்தும் வாழவேண்டும் என்ற பரந்து விரிந்த பார்வையாளர்களாகச் சித்தர்கள் விளங்கி வருகின்றனர். மனிதர்கள் தங்களுக்குள் ஏற்படுத்திக் கொண்ட சாதி, சமயம், மதம் போன்றவற்றின் மூலம் ஏற்படுகின்ற கடவுள் கொள்கையால் வரும் பிரிவினைகளை நீக்கவும், சமநோக்குப் பார்வையுடனும், மனித நேயத்துடனும் வாழவேண்டும் என்ற முற்போக்குக் கருத்துக்களைப் பதிவு செய்துள்ளனர்.

மக்களை வேற்றுமை படுத்துகின்ற நிலையெண்ணி வருந்தினர். அனைவரும் ஒன்றே! எந்த ஊரும் சொந்த ஊரே! எனும் அறிவுத் தெளிவை ஏற்படுத்த மக்களுக்காகப் பாடினர்.

சித்தர்களின்றி, அவர்கள் வழிநின்ற ஞானிகள், பெண் துறவிகள், அவர்களால் சமுதாயம் அடைந்த நன்மைகள் போன்றனபற்றி ஆய்வு செய்யப்பட்டுள்ளது. இம் மண்ணுலகில் நீண்ட நாட்கள் வாழுகின்ற சித்தர் கலைகளையும், அவர்கள் தவ ஆற்றலால் கண்ட வெற்றிகளையும், மன ஒருமைப்பாட்டின் இறுதி நிலையான சமாதி என்னும் ஒடுக்க நிலை குறித்தும் இங்கு ஆய்வு செய்யப்பெற்றுள்ளது.

**ஆய்வுத் தலைப்பு**

'சித்தர்களின் வாழ்வியல் தத்துவம்' என்னும் பொருளில் இவ் ஆய்வேடு அமையப்பெற்று, ஆறு இயல்களாக உட்தலைப்புகளைக் கொண்டுள்ளது.

**தலைப்புத் தேர்வு**

சித்தர்களின் வாழ்வியல் சிந்தனைகளை வெளிக் கொணர்வது நல்லதொரு ஆய்வுப் பணியாக அமையும். சித்தர் பாடல்களிலுள்ள எதார்த்த சிந்தனைகளை, ஆன்மிக இரகசியங்களை அறிவதும், நிலையாமைத் தத்துவங்களை மேலும் மக்கள் உணர்ந்திடச் செய்வதும் நோக்கமாக அமைந்தது. அமைதியற்ற உலகியல் வாழ்வில் மனித மனம் ஒருநிலைப்படாமல், அதற்கு வழிகாண முடியாமல் அலை பாய்கிறது. அதற்குத் தீர்வு காண சித்தர்கள் கண்ட யோக முறைகள், தவ நெறிகள் தக்க வழிகாட்டுதலாக அமையும். அதற்கு ஒரு சிறந்த மார்க்கம் சித்தர் மார்க்கம் ஆகும். ஆதலால் சித்தர்கள் வகுத்த துறவு, தவம், அவர்களின் வாழ்வு முறைகள் போன்றவைப்பற்றி ஆழ்ந்து அறியவும் இவ்வாய்வுச் சிந்தனை உருவாயிற்று. எதிர்வரும் சந்ததியினர் சித்தர் இலக்கியத்தைப் பாதுகாக்கவும், மறைந்துள்ள ஓலைச் சுவடிகளை வெளிக்கொணர்ந்து நூல்களைப் பதிப்பித்து மக்களுக்குப் பயனுறச் செய்யும் எண்ணமும், நோக்கமும் ஆய்வுக்குக் கருப்பொருளாக அமையப்பெற்றது. சித்தர்

இலக்கியங்களில் அமைந்துள்ள பாடல்களில் பொருள் புரியாமையால் மக்கள் முழுப்பயனை நுகர முடியாமல் போய்விடும் நிலை ஏற்படுகிறது. அதனை மக்கள் பயன்பாட்டுக்கு எளிய நடையில் கொண்டுவரும் எண்ணமும் இவ் ஆய்வுத் தலைப்பு உருவாக அடிப்படைக் காரணமாக அமையப் பெற்றது.

சித்தர்கள் என்றால் அவர்கள் துறவுக்கு வழிகோலுபவர்கள், இல்லறவியலுக்கு அப்பாற்பட்டவர்கள் என்னும் தவறான கருத்தினை மக்கள் நெஞ்சங்களிலிருந்து மாற்றவேண்டும். சித்தர்கள் தீய நெறிகளில் செல்லும் உலக மாந்தர்களை நன்னெறிக்கு இட்டுச் செல்லும் ஆசான்களாகவும், குருவாகவும் இருப்பதைக் கண்டும், நோயினால் அழிகின்ற இம்மனித உடலை நோயினின்று காத்து, புத்துயிர் அளித்து நீண்ட நாள் வாழும் நுணுக்கத்தினைச் சொல்லித்தரும் மருத்துவப் பேறறிஞர்களாகவும் திகழ்கின்றனர். சித்தர்களின் வாழ்வியல் தத்துவத்தை மக்கள் உணர்ந்து தெளியவும், எளிய முறையில் அவர்களின் உன்னதக் கருத்துகள் மக்களின் மனங்களை அடையவேண்டும் என்ற பேராவல் ஆய்வுப் பொருளாக அமைந்தது.

## ஆய்வு நோக்கம்

‘சித்தர்களின் வாழ்வியல் தத்துவம்’ என்னும் இவ்வாய்வு சித்தர்கள் யார்? அவர்களின் காலம், அவர்களின் தொண்டு தொட்டு வருகின்ற மரபுகள், படைப்புகள் போன்றவையும் சமூகம் தழைப்பதற்கு அவர்கள் ஆற்றிய அரும்பணிகள் ஆகியவற்றை வகைப்படுத்திக் கூறுவதும் இவ்வாய்வின் நோக்கமாகும்.

## ஆய்வுப் பரப்பு

கற்கால மனிதன் இமய மலையில் வாழ்ந்த காலம் ஆறு இலட்சம் ஆண்டுகளுக்கு முன்பு என்பது தொல்லியல் அறிஞர்களின் கருத்தாக

உள்ளது. அதனை அடிப்படையாக வைத்துப் பார்க்கும்போது சிவபெருமான் என்னும் முதற்சித்தரின் காலம் கி.மு.15000 ஆண்டுகள் என்று கணக்கிட்டுள்ளனர். ஆதிகால மருத்துவம் கி.மு.14000–5000 இல் தொடங்கியது என்றும், சிவன் – சக்தி – முருகன் வழிபாடு கி.மு.5000 ஆம் ஆண்டிலேயே தொடங்கிற்று என்றும் ஆய்வியல் அறிஞர்கள் கருதுவதாலும், சித்தர்களின் கால எல்லையைச் சரியாக கணிக்க முடியாத நிலை உள்ளது. சித்தர் பாடல்கள், கருத்துகள் மூலம் பல ஆயிரம் ஆண்டுகட்கு முன்பே சித்தர்கள் வாழ்ந்திருக்க வேண்டும் என்ற கருத்து அறியப்படுகிறது. அவ்வாறு தொடங்கிய சித்தர்கள் கூட்டம் கணக்கிலடங்காது. எனினும் வெளிவந்துள்ள சித்தர் பாடல்களின் வாயிலாகவும், வரலாறுகள் மூலமும் சித்தர்களின் வாழ்வுக் குறிப்புகள் மூலமும் ஆய்வு எல்லை அமையப்பெற்றுள்ளது.

## ஆய்வுக்களம்

திருமூலரது திருமந்திரம், போகர் 7000, பெரிய ஞானக் கோவை என வழங்கப்படும் சித்தர் பாடல்கள், சித்தர்கள் வரலாறு, சிவவாக்கியர் 1000, சதுரகிரிபுராணம், திருஅருட்பா, திருக்குறள் ஆகிய நூல்களை அடிப்படையாக வைத்து ஆய்வுக்களம் அமையப்பெற்றுள்ளது.

## ஆய்வியல் அணுகுமுறை

ஆய்வுக்குட்பட்ட சித்தர் பாடல்களில் இடம்பெற்றுள்ள கருத்துகள், அவர்களின் வாழ்வுமுறை, மக்களுக்கு அவர்கள் உணர்த்திய வாழ்வியல் நெறிமுறை, தெளிவுரை, உணவுமுறை, யோகநெறி விளக்கம், காய கற்ப மருந்து, போன்றவற்றின் விளக்கங்கள் மக்களிடம் மேலும் சென்றடையவும் அவர்கள் கருத்துகள் சமூக நீதியை அடிப்படையாகக் கொண்டு இருப்பதாலும் விளக்க முறை திறனாய்வுமுறையில் ஆய்வு மேற்கொள்ளப் பெற்றுள்ளது.

## முதன்மை ஆதாரம்

சித்தர்களால் படைத்தருளப்பெற்ற சித்தர் பாடல்களின் தொகுப்புகளை முதன்மையாக வைத்து ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

1. பெரிய ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள்
2. திருமந்திரம்
3. திருக்குறள்
4. போகர் வைத்தியம் 700 மற்றும் போகர் 7000
5. சித்தர்கள் வரலாறு
6. திரு அருட்பா

ஆகியன ஆய்வின் முதன்மை ஆதாரங்களாகக் கொள்ளப் பட்டுள்ளன.

## துணைமை ஆதாரம்

சித்தர் இலக்கியங்கள் குறித்த பல்வேறு ஆய்வுகளும், சித்தர்கள் வாழ்ந்த ஊர்கள், அவர்கள் அமைந்த சமாதிக் கோயில்கள் குறித்த வரலாற்றுச் செய்தி கூறும் நூல்களும், அவர்களின் சமூகம் சார்ந்த சோதிட அறிவியல், இறையியல் நோக்குகள் குறித்த ஆய்வுகளும், தத்துவங்கள் தொடர்பான நூல்களும் துணை ஆதாரமாகப் பயன்படுத்தப் பெற்றுள்ளன. இதோடன்றி நாயன்மார்கள், ஆழ்வார்களின் அருட்பாடல்களான தோத்திர, சாத்திர பாடல்களும் துணை ஆதாரமாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

## ஆய்வேட்டின் அமைப்பு

இவ்வாய்வு முன்னுரை முடிவுரை நீங்கலாக, கீழ்க்காணும் ஆறு இயல்களைக் கொண்டுள்ளது.

1. சித்தர்களும், அவர்களின் காலமும்
2. சித்தர்களின் வாழ்வியல் நோக்கு
3. இலக்கியம் படைத்தருளியதும், சித்தர்களின் ஆற்றல்களும்
4. சித்தர்களின் கடவுள் கொள்கையும், ஆன்மிகப் பணிகளும்
5. மரணமிலாப் பெருவாழ்வும், சமாதி நிலையும்
6. பதினெண் சித்தர்கள் வழிநின்ற ஞானிகளும், பெண் துறவிகளும், சித்தினிகளும், தொண்டுகளும்

## இயல் விளக்கம்

முதல் இயலான 'சித்தர்களும் அவர்களின் காலமும்' என்பதில் சித்தர்கள் – சித்தி ஆகிவற்றிற்கு விளக்கமும், சித்தர்களின் தோற்றமும், சித்தர்களின் எண்ணிக்கையும் அறியப்படுகிறது. வடநாட்டுச் சித்தர்கள், தென்னாட்டுச் சித்தர்கள், நவநாதச் சித்தர்கள், பதினெண் சித்தர்கள் பற்றிய குழு விளக்கங்களும் அகத்தியர், திருமூலர், போகர், பாம்பாட்டிச் சித்தர் போன்ற குறிப்பிட்ட சித்தர்களைப் பற்றிய செய்திகளும், அவர்கள் இயற்றிய நூல்கள் பற்றியும் விளக்கப்பட்டுள்ளது; சித்தர்களின் கால எல்லையை அவர்களின் பாடல் கூற்றுகள் மூலமாகவும் ஓரளவுக்குக் காண முடிந்தது. சித்தர்களின் குரு, சீடர் பாரம்பரியத்தைப் பற்றியும், நாட்டு மக்களிடம் சித்தர்கள் பெற்றிருந்த செல்வாக்கினைப் பற்றியும் விவரிக்கப்பட்டுள்ளன.

'சித்தர்களின் வாழ்வியல் நோக்கு' என்ற இரண்டாம் இயல், சித்தர்களின் பற்றற்றவாழ்வுநிலை பற்றியும், தன்னைத் தானறிந்த சித்தர்கள் தன்வினைகளை (குற்றங்களை) நீக்கிக் கொள்ளுதல், தன்னுள்ளே தெய்வத்தைக் கண்டுணர்வது பற்றியும் விளக்கப்பட்டுள்ளது. வேத, சாத்திரங்களை மறுத்து, கற்சிலையில் அருள்உணர்வு கிட்டாது,

தியானத்தின் மூலமே இறைவனைக் காணலாம் என்பது சித்தர்களின் நோக்கமாக இருந்ததையும், எண்வகை தெய்வ சக்திகள் மனிதனின் எண்வகை குணங்களோடு ஒப்பிட்டுச் சக்திக்கு கோயில் அமைத்ததையும் காணமுடிகிறது. மேலும் மனிதன் பேராசையை வெறுத்து வாழவும், சாதி, பேதங்களை ஒதுக்கி வாழ வலியுறுத்துவதும், நிலையாமையை வலியுறுத்துவதைப் பற்றியும் கண்டறிந்து ஆய்வு செய்யப்பட்டுள்ளன.

மூன்றாம் இயலான 'இலக்கியம் படைத்தருளியதும், சித்தர்களின் ஆற்றல்களும்' எனும் தலைப்பில் யோகக்கலையை முதன்முதலில் தோற்றுவித்தவர் சிவபெருமான் என்பதைக் காணமுடிகிறது. சித்தம் – மனம் பற்றிய விளக்கங்களும், யோகத்தின் பிரிவுகள், யோக உறுப்புகள் தச நாடிகள், எண் வகைப் பேறுகள் (அட்ட சித்திகள்) சித்தர்களின் உணவு முறைகள், சோதிட முறைகள், வர்ம வைத்திய முறைகள், மருத்துவ முறைகள், மருத்துவத்தின் வகைகள், முக்குற்றப் பிணிகள், பிற மருத்துவ முறைகள், காய கற்ப மூலிகைகள், சித்தர்களின் இரசவாதக்கலைகள் போன்றவை குறித்தும் ஆராயப்பட்டுள்ளன.

'சித்தர்களின் கடவுள் கொள்கையும், ஆன்மிகப் பணிகளும்' என்ற நான்காம் இயலில், ஊழ்வினையைப் பற்றியும், மனித உடலின் அமைப்புத் தத்துவம் பற்றியும், மனித மனத்தின் குணவியல்புகள் பற்றியும் அறியப்பட்டது. குருவை அறிந்து கொள்வது, உபதேசம் பெறுவது, குருவைப் பழித்தால் ஏற்படும் தீமைகள் பற்றியும் கண்டறியப்பட்டுள்ளது. இறைவனைப் பற்றியும், சீவன் சிவமாதலை உணர்த்துவது பற்றியும், மாயை இதற்குத் தடையாயிருப்பதையும், மேலும் இறைக்கோட்பாடு, ஆகம, வேத, மந்திரங்கள் பற்றிய வேறுபாடுகளையும் ஆராயப்பட்டுள்ளன. ஓரிறைக் கொள்கைப் பற்றியும் பிற மத நூல்களில் கூறியுள்ள தத்துவங்களையும், இறைவன் ஒளி நிலையில் இருப்பதை அறிவதும், ஞானிகள் இறைவனைக் கண்டவிதத்தைப் பற்றியும் இவ்வியலில் விரிவாக ஆராயப்பட்டுள்ளது.

ஐந்தாம் இயலில் சித்தர்கள் கண்ட ‘மரணமிலாப் பெருவாழ்வும், சமாதி நிலையும்’ என்ற தலைப்பில் இறப்பற்ற நிலையில் பல்லாண்டு காலம் வாழ்ந்து மக்களுக்குத் தொண்டு செய்த சித்தர்களைப் பற்றியும் அவர்கள் காலத்தை வெல்வதற்கு மக்களுக்குப் போதித்த போதனைகளைப் பற்றியும் ஆராயப்பட்டுள்ளது. மனித உடலின் பெருமை, மனிதத் தோற்றம் பற்றிய சித்தர்களின் கருத்து, உடம்பின் உட்கூறுகள், தொன்னூற்றாறு தத்துவங்கள், நோய் – பிணி ஆகியவற்றின் சொல்லாய்வுகள் குறித்தும் ஆராயப்பட்டுள்ளன. நோய் வருதற்கான காரணிகள் பற்றியும், இறப்பு ஏற்படக் காரணங்கள் குறித்தும் அறியப்பட்டது. அண்டத் தத்துவம், பிண்டத் தத்துவம் பற்றியும் ஒன்றுக்கொன்று மாறுபட்டால் உடலுக்கு வரும் கேடுகள் பற்றியும் ஆராயப்பட்டது. ஞானிகளின் ஒடுக்க நிலை குறித்தும், ஞானிகள் தங்கள் உடலை ஒன்பது துண்டங்களாக்கி மீண்டும் சேர்க்கும் நவகண்ட யோகம் குறித்தும், வேற்றுடலில் நுழைவது குறித்தும், அவர்கள் அடைந்த சமாதி நிலைகள் குறித்தும் விரிவாக இதில் ஆராயப்பட்டுள்ளது.

ஆறாவது இயலில், ‘பதினெண் சித்தர்கள் வழிநின்ற ஞானிகளும், பெண் துறவிகளும், சித்தினிகளும் தொண்டுகளும்’ என்பதில் மெய்யுணர்வு என்னும் இறைமையை உணர்ந்து கொள்வதும், பதினெண் சித்தர் குழுவில் இடம்பெறாத சித்தர்கள், ஞானிகள் குறித்தும் செய்திகள் எடுத்துரைக்கப் பட்டன. ஆயுள் வேதம் கண்டறிந்த தன்வந்திரி முனிவரைப் பற்றியும், திருவள்ளுவர் இருவர் இருப்பதுபற்றியும், ஔவையார் பலபேர் உள்ளது பற்றியும், பட்டினத்தார் தத்துவம், வள்ளலாரின் அற்புதச் சித்துக்கள், அவர் அடைந்த பெருநிலைகள் குறித்தும், நாயன்மார்கள், ஆழ்வார்களில் ஸ்ரீராமானுசர், ஆண்டாள் ஆகியோர்களின் அருள்நிலைகள் பற்றியும் ஆராயப்பட்டது. பெண்களில் சித்தினிகள் அவர்கள் அடைந்த பேறுகள் குறித்தும் விரிவாக ஆராயப்பட்டுள்ளது.

மேற்குறித்த ஆறு இயல்களிலும் பதிவுசெய்யப்பெற்ற தகவல் ஆதாரங்களின் அடிப்படையில் காணப்பெற்ற மெய்ம்மைகள், ஆய்வு

முடிபுகளாக எடுத்துக் கூறப் பெற்றுள்ளன. மேலாய்வுக் களங்கள் சுட்டப் பெற்றுள்ளன.

இவ்வாய்விற்குத் துணைநின்ற நூல்களின் பட்டியல் அகரவரிசைப்படி அமைக்கப் பெற்றுள்ளது.

பின்னிணைப்புப் பகுதியில் சித்தர்கள் சீவசமாதி அடைந்த இடங்களும், மலைகளும், சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்பட்டுள்ள சித்தர்களின் காவல் தெய்வமான கொல்லிப் பாவையின் தோற்றமும், சதுரகிரி மலைத் தெய்வமும், குகைகளும் பிற்கால ஞானிகள், சித்தர்களின் நிழற்படங்களும் இணைக்கப்பட்டுள்ளன.

## இயல் – 1

# சித்தர்களும் அவர்களின் காலமும்

தமிழ்ச் சமூகம் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே நாகரிகத்தில் சிறந்து விளங்கியுள்ளது. மக்கள் நாகரிகமாக வாழ்வதற்குப் பல்வேறு நெறிகளைப் பின்பற்றினர். வாழ்வியல் நெறிகளைப் பின்பற்றுவதற்கு அறிவுத்துறையில் மேலோங்கியிருந்த சித்தர்களும் வழிகாட்டியாக இருந்தனர். அவர்கள் இலக்கியம், சோதிடம், மருத்துவம் முதலிய பல்வேறு துறைகளில் ஈடுபட்டனர். அவற்றில் மருத்துவத் துறைக்கு அவர்கள் ஆற்றிய பணி மகத்தானது. இன்றும் நாட்டுப்புற மக்கள் சித்தர்கள் பயன்படுத்திய மருத்துவ முறையைப் பின்பற்றி வருகின்றனர் இதனைச் சித்தமருத்துவம் என்பர். அவர்கள் காலந்தோறும் வாழ்ந்துள்ளனர். அவ்வாறான சித்தர்களின் வாழ்வியலை அறிவது இன்றியமையாததாகும். இவ்வியல் சித்தர்கள் பற்றிய விளக்கம், சித்தர்களின் தோற்ற வரலாறு, எண்ணிக்கை பிரிவுகள், வாழ்வியல் நிலை முதலியவற்றை ஆய்வதாக அமைகிறது.

### சித்தர் - விளக்கம்

சித்தர் என்னும் சொல்லைச் சித்து + அர் = சித்தர் எனப் பிரிக்கப்படுகிறது. சித்து என்னும் சொல்லுக்குக் “கடுந்தவம் செய்து பேறு பெறுவதாகக் கூறப்படும் அற்புத சக்திகள்”[1] என்று க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி கூறுகின்றது. ‘அர்’ என்பது உயர்வு கருதி கூறுவதாகும்.

சித்து என்னும் சொல் சித்தி என்னும் சொல்லோடும் தொடர்புடையதாக உள்ளது. ‘‘சித்தி என்னும் சொல்லுக்கு அணிமா, மகிமா,

கரிமா, லகிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம்''[2] என எட்டுவகையான சித்திநிலைகளைத் தமிழ்ப்பேரகராதி கூறுகின்றது. இதனை 'அட்டமா சித்தி' என்பர்.

க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி சித்தி என்பதற்கு, ''சித்தம் எனவும், முனிவர் போன்றோர் யோகத்தின் மூலம் அடைவதாகக் கருதப்படும் இயற்கையைக் கடந்த சக்தி''[3] எனவும் விளக்கம் தருகிறது.

கடுவெளிச் சித்தர் அட்டசித்தி என்னும் சொல்லை,

*''சீரிலுயர் அட்டசித்தி – யார்க்கும்*
*சித்திக்கு மேசிவன் செயலினால்''*[4]

எனும் பாடல் வரியில் குறிப்பிடுகின்றார்.

''சிலப்பதிகாரத்திற்கு உரையெழுதிய அடியார்க்கு நல்லார் 'சித்தன்' என்னும் சொல்லைக் கையாண்டுள்ளார். அச்சொல்லுக்கு 'கிருத கிருத்தியன்' சித்துக்களை உண்டாக்கியவர், இவர்களே சீவன் முத்தர்கள், பிறப்பறுத்தவர்கள்''[5] என்று இளமதி ஜானகிராமன் விளக்கம் தருகிறார். சமணத்திலும், பௌத்தத்திலும் சித்திகள் செய்வோர் சாரணர் எனப்பட்டனர்; சாரணர் என்பது மனோலயத்தில் சஞ்சரிப்பவர் என்று பொருளாகும். மேற்கூறியவற்றிலிருந்து எட்டு வகையான சித்திகளையும் கைவரப் பெற்றவர்களே சித்தர் எனக் கருதப்படுகிறது. சித்தர் என்னும் பெயர், சித்து → சித்தி ஆகிய சொல்லிலிருந்து தோன்றியது என்பதை அறியமுடிகிறது.

சித்தர் என்ற சொல்லுக்கு, ''பதினென் கணத்துள் ஒரு சாரார், பூரண அருளை அடைந்தோர், அட்டமா சித்தியடைந்தோர்''[6] என்னும் பொருளைத் தமிழ்ப் பேரகராதி தருகிறது.

''தனிப்பட்ட சமயத்தையோ, சமய நூலையோ, சடங்குகளையோ சார்ந்திருக்காத அரிய சக்திகள் கைவரப் பெற்ற யோகி''[7] என்று 'சித்தர்' என்பதற்குக் க்ரியாவின் தற்காலத்தமிழ் அகராதி குறிப்பிடுகிறது.

திருமூலர், சித்தர் என்பவர் யார் என்பதைப் பின்வருமாறு பாடலில் குறிப்பிடுறார்.

> *“யோக சமாதியின் உள்ளே அகலிடம்*
> *யோக சமாதியின் உள்ளே உள ஒளி*
> *யோக சமாதியின் உள்ளே உள சக்தி*
> *யோக சமாதி உகந்தவர் சித்தரே!”*[8]

என்பதன் மூலம் யோகசமாதியின் உள்ளே அகலிடம், ஆன்மஒளி, ஆன்ம சக்தி ஆகியவற்றை உகந்து கூறுகிறவர்கள் சித்தர்கள் என்பதை அறிய முடிகிறது.

திருமூலரைப் போலவே ஒவ்வொரு சித்தரும், ‘சித்தர்’ என்ற சொல்லுக்கு விளக்கம் தந்துள்ளனர்.

1. ‘சாத்திரத்தைச் சுட்டெரித்தால் அவனே சித்தன்’ – அகத்தியர்.
2. ‘தனியிருந்து பார்த்தவனே சித்தன்’ – இராமதேவர்.
3. ‘சிந்தை தெளிந்திருப்பவன் ஆர் அவனே சித்தன்’ – வால்மீகர்.
4. ‘ஆத்தாளைப் பூசித்தோன் அவன்சித்தன்’ – கருவூரார்.
5. ‘ஏகாமல் வாசனையை அடித்தோன் சித்தன்’ – சட்டைமுனி

பகவத் கீதையில் கண்ணன் தன்னைச் சித்தனாகவே நினைத்துக் கொள்வான் எனக் கூறப்படுகிறது. மக்கள் வழக்கில் எல்லா வேலைகளையும் தெரிந்தவனை, ‘சித்தன்’ என்றும் கண்ணைக் கவரும் அற்புதங்கள் நிகழ்த்துவதை, ‘சித்து விளையாட்டு’ என்றும், தந்திர வித்தைகள் செய்வதை, ‘சித்துவேலை’ என்றும் கூறுவதை அறியமுடிகிறது. கடவுளைக் காண முயல்கின்றவர்கள் பக்தர்கள் என்றும், அதனைக் கண்டு தெளிந்தவர்கள் சித்தர்கள் என்றும் வழங்கப்படுகின்றனர்.

## மக்கள் வழக்கில் சித்தர்கள் என்று அழைக்கும் முறை

மக்கள் வழக்கில் சித்தவைத்தியம் செய்பவர், மாந்திரீகம், சோதிடம், நாடி சாத்திரம் (நாடி சோதிடம்), இரசவாதம் (தாழ்ந்த உலோகத்தைப் பொன்னாய் மாற்றுவது) முதலியவற்றில் பயிற்சி உடையவர், கொடிய விலங்குகளைத் தன்வசப்படுத்துவோர், சித்துவேலை செய்பவர், துறவு வாழ்வை மேற்கொள்பவர், நீண்ட தாடி, சடை, காவி உடை அணிந்து நெற்றியிலும் உடல்மீதும் திருநீறு பூசியிருப்பவர் போன்றவர்களைச் சித்தர்கள் என்று அழைப்பதை அறிய முடிகிறது.

மக்கள் வழக்கில் ‘சித்தன் போக்குச் சிவன்போக்கு’ என்று வழங்குவர். சித்தன் என்றால் அவன் வழி தனிவழியாகவும், அவன் வாழ்க்கைமுறை விசித்திரமாகவும் இருந்தது. அவனது அகவாழ்வுக்கும், புறவாழ்வுக்கும் சிறிதும் தொடர்பில்லாதது போன்றும், அவனுடைய போக்கு உலகியல் மாந்தருக்குப் புதிராகவும் காணப்பட்டதால் சிவனையும் அவ்வாறு கூறினர். சித்துபுரிபவன் சிவனென்று புராணம் உணர்த்தும்.

சிவனைப்போல் ஆனைமுகக் கடவுளையும் சித்தி, புத்தி விநாயகன் என அழைப்பதுண்டு, இதேபோன்று சித்தத்தைச் சிவன்பால் வைத்தவர் என்றும், ‘சித்திநீறு’ என்பன போன்ற வார்த்தைகளும் சித்தர்களை முன்னிருத்தியே வந்தவையாக மக்கள் வழக்கில் காணமுடிகிறது.

சித்தர் நெறி கி.பி. 14, 15, 16, ஆம் நூற்றாண்டுகளில் இருவகையான இயக்கமாக வளர்ந்துள்ளது. ஒன்று யோகப்பயிற்சிக்கு முதலிடம் தந்து புறச்சடங்குகளை நீக்கி, முற்போக்கு வழியில் நின்று கோயில்களையும், கோயில் வழிபாடுகளையும் எதிர்த்து, சாதிச்சமய முறை கேடுகளையெல்லாம் தட்டிக் கேட்கும் ஓர் இயக்கமாக எழுந்துள்ளது. அந்த வகையில் எழுந்தவர்கள் சிவவாக்கியர், பாம்பாட்டிச் சித்தர், அகப்பேய்ச் சித்தர், அழுகண்சித்தர் போன்றவர்கள் ஆவர்.

மற்றொன்று சமயச் சடங்குகள், பூசை விதிகள், மாய மந்திர முறைகளைச் சார்ந்து சித்திநிலை எய்தியவர்கள். அவர்களுள் அகத்தியர், போகர், நந்திகேசுரர், சுப்பிரமணியர், கருவூரார், சட்டைமுனி, இராமதேவர், காகபுசுண்டர், உரோமரிசி, காலாங்கிநாதர் போன்றவர் சமயத்திற்கும் சடங்குகளுக்கும் உட்பட்டவராவர்.

மேற்கூறியவற்றிலிருந்து மனிதன் வீடுபேறு அல்லது பேரின்பநிலை அடையவேண்டும் எனும் தணியாத வேட்கையில் கடுந்தவம் புரிந்தான். அவனுக்கு உணவு மறந்தது, ஊன் மறந்தது (தன்னுடல் மறந்த நிலையில்) முடிபாக வீடுபேற்றை அடைந்து தன் தலைவனாகிய இறைவனைக் கண்டு பேரானந்த நிலையினை அடைந்தான், அந்தத் தவத்தின் மூலம் கண்ட பேருண்மைகளை உலகியல் மாந்தர்களுக்குச் சொல்லவந்தவர்கள்தான் 'சித்தர்கள்' என்பதை அறிய முடிகிறது.

## சித்தர்களின் தோற்றம்

சிந்துவெளி நாகரிகம் கி.மு. 3500யைச் சார்ந்தது என்பர். அது நகர நாகரிகம் ஆகும். சிந்துவெளிப் பகுதியில் வாழ்ந்த மக்கள் திராவிடர்கள் என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். திராவிடர் என்பவர் தமிழர் ஆவார். அங்குக் கண்டுபிடிக்கப்பட்ட பொருட்களில் சிவவழிபாடு இருந்ததற்கான சான்றுகளைக் கூறுகின்றனர்.

சிவன், கண்ணன் போன்ற தெய்வங்கள் பழமையான தெய்வங்கள் ஆகும். இவர்கள் புராணங்களோடு தொடர்புடையவர்கள். சிவன் பல திருவிளையாடல்களைச் செய்து சித்தனாக விளங்கியதைப் புராணம் கூறும். கண்ணன் பல சித்துக்கள் செய்ததைப் பாரதக்கதை கூறும். மேற்கூறிய தெய்வங்கள் ஆதிகாலத்தில் சித்தர்களின் குருவாக விளங்கினர் என்பதை அறிய முடிகிறது. ''கண்ணனும் பகவத் கீதையில் தன்னைக் கபில முனியாகவே காட்டிக் கொள்கிறான்''[9] என்பதைக் காணமுடிகிறது.

சிவன், கண்ணன் போன்ற தெய்வங்களின் மதங்கள் முறையே சைவம், வைணவம் ஆகும். இம்மதங்கள் இந்தியா முழுவதும் பரவியிருந்தது, இதைப்போலவே சமணம், பௌத்தம் ஆகிய இரு மதங்களும் இந்தியாவில் தழைத்தோங்கியிருந்தது. இதனால் இந்தியா பல மதங்களை உள்ளடக்கிய நாடு என்பதை அறிய முடிகிறது.

தமிழ்ச்சித்தர்கள் சைவ மதத்தைச் சார்ந்தவர்கள் என்பதை அறிய முடிகிறது. சித்தர்கள் குறிப்பிட்ட மதத்தைச் சார்ந்தவராக இருந்தாலும் அவர்களுடைய கருத்துகள் சாதி, மதம், இனம், மொழி, நாடு என்ற குறிப்பிட்ட கட்டுப்பாட்டுக்குள் அடங்காமல் இருந்தது. அவர்களுடைய சிந்தனை, செயல் அனைத்தும் உலகம் தழுவியதாக இருந்தது. உலகில் எந்தப் பகுதியினராக இருப்பினும் சித்தர்களின் கருத்துகளை மக்கள் ஏற்றுக் கொண்டனர்.

சித்தர்கள் இந்தியாவிலும், பிற உலக நாடுகளிலும் வாழ்ந்துள்ளனர். அதில் தமிழர்கள் பலர் சித்தர்களாக இருந்துள்ளனர். அவர்கள் தோற்றுவித்த யோகம் தாந்திரிக யோகமாகும். இந்த யோக முறை இந்தியாவில் பலபகுதிகளில் பரவியிருந்தது.

“தமிழ்நாட்டுச் சித்தர்கள் [illegible] ஒப்பற்றுத் தனித்து நிற்கும் ஒரு சுய சிந்தனையாளர்களின் தொகுதியினர் அல்லர் என்பது உறுதியாகும். ஏனெனில் அவர்கள் இந்தியா முழுவதும் பரவி நின்ற ஒரு மரபின் (PAN INDIAN TRADITION) பிரிக்க முடியாத ஒரு பிரிவினர்”[10] என்று மோசசு மைக்கேல் பாரடே குறிப்பிடுகிறார்.

பௌத்தர்கள் தாந்திரீக நெறியினைப் பின்பற்றினர் அவர்களைச் சித்தர்கள் என்றும், சித்தாசிரியர்கள் என்றும் அழைத்தனர். இந்த யோக நெறியானது திபெத், பீகார், வங்காளம், முதலிய இடங்களில் இருந்ததாகக் கூறுவர். கி.பி. 10 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சமணர்கள் சித்தர்களாக

வாழ்ந்தனர், அவர்கள் 'முனி' என்ற பட்டத்தைப் பெற்றனர். வாக்கானந்த முனி சமணத்தைச் சார்ந்தவர் என்பதை அறிய முடிகிறது. பௌத்தர்களைப் போலவே வடநாட்டில் வாழ்ந்த சைவர்களும் யோகநெறியைப் பின்பற்றினர். அவர்களைக் 'காண்பட யோகிகள் அல்லது நாத சித்தர்கள்' என்று அழைக்கப்பட்டனர்.

தமிழ்நாட்டுச் சித்தர் மரபானது இந்தியா மட்டுமல்லாது உலக நாடுகளிலும் பரவியிருந்தது. சீன நாட்டுச் சித்தர்களைத் 'தாவோயி' என்றும், அரேபிய நாட்டுச் சித்தர்களைச் 'சூஃபி' என்றும் அழைத்தனர்.

## சித்தர்களின் எண்ணிக்கை

சித்தர்களில் பல பேர்கள், பற்பல இடங்களில் வாழ்ந்துள்ளனர். அவர்களை இருவகைப்படுத்துவர். வடநாட்டுச் சித்தர்களை நவநாத சித்தர்கள் என்றும் தென்னாட்டுச் சித்தர்களைப் பதினெண் சித்தர்கள் என்றும் கூறுவர்.

## நவநாதச் சித்தர்கள்

இவர்கள் 84 பேர் இருந்ததாகக் கூறுவர், அவர்களில் கீழ்க் குறிப்பிடப்பட்டுள்ள 9 பேர் மட்டுமே நவநாதர் என்று அழைக்கப்படுகின்றனர். நவநாத சித்தர்கள் வடநாட்டில் சைவத்தைப் பின்பற்றியவர்களாவர். அவர்களைப் பின்வருமாறு வகைப்படுத்தலாம்.

"1. சத்தியநாதர் 2. சதோதநாதர் 3. ஆதிநாதர்,
4. அனாதிநாதர் 5. வகுளிநாதர் 6. மதங்கநாதர்,
7. மச்சேந்திரநாதர் 8. கஜேந்திரநாதர் 9. கோரக்கநாதர்."[11]

போன்ற நவநாத சித்தர்களில் கோரக்கர், மச்சேந்திரர் ஆகிய இருவரும் முக்கியமானவர்கள். கோரக்கர், மச்சமுனி, பத்திரகிரியார், காலாங்கிநாதர் ஆகியோர் தமிழ்நாட்டுப் பதினெண் சித்தர் பெயர்களிலும் இடம்

பெறுகின்றனர் என்பதை அறிய முடிகிறது. இவர்கள் சிறிது காலம் தமிழ்நாட்டில் இருந்துவிட்டுப் பின் வடநாடு சென்றிருக்கலாம் என்பது போலவும் கருத்து நிலவுகிறது.

### சத்தியநாதர்

நவநாதர்களில் இவரே முதல் சித்தர் ஆவார். இவரைச் சித்தர் இலக்கியங்கள் 'ஞானச் சித்தர்' என்றே அழைக்கின்றன. இவர் கி.பி 16 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவராக இலக்கிய மதிப்பீட்டாளர்கள் கருதுவர். சித்தர்பாடல் தொகுதியில் சத்திய நாதனென்ற ஞானச் சித்தர் பாடல் 35, மெஞ்ஞானம் 12 என்ற பாடல் தொகுப்பும் காணப்படுகின்றன.

இவர் மெய்ஞ்ஞானத்தைப் பற்றி 12 கட்டளைக் கலிப்பாவும் பாடியதாகச் சித்தர் பாடற்தொகுதி தெரிவிக்கின்றது. இவர்பாடல்கள் பெண்ணை மையப்படுத்தி முறையிடுவதாக; வாழத் திரிகிறண்டி, பரிதவித்து நிற்குறண்டி, நின்னருளால் அறிந்து கொண்டேண்டி, போன்று சத்தியிடம் கூறுவதாக அமைகிறது.

### சதோகநாதர்

நவநாத சித்தர்களில் இரண்டாவதாக வைத்துப் போற்றப் படுபவரான சதோகநாதர் கி.பி. 16 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவராகக் கருதப்படுகின்றார். இவர் யோக ஞானம் பற்றி அதிகம் பாடியதால் "யோக சித்தர்" என்றும் குறிக்கப்படுகின்றார்.

*"வாலை யபிராமி மாரிதிரி சூலியருட்*
*பாலை யெனக்கருளும் பார்வதியின் தாள்போற்றி"*[12]

என்று அம்பிகையின் (சத்தியின்) வழிபாட்டினராக உணரப்படுகிறார். யோகசித்தர் கண்ணிகளாக 42ம், யோகசித்தர் ஞான சூத்திரம் 17ம், சர்வரோக நிவாரண பட்சணி எனும் மருந்து கற்பம் முதலியவற்றையும் அருளியுள்ளார்.

## ஆதிநாதர்

நவநாத சித்தர்களில் மூன்றாவது சித்தர் ஆதிநாதர். இவர் வட மொழியிலுள்ள உபநிடதங்கள், வேதங்களின் கருத்துகளைத் தமிழில் பாடியதால் 'வேதாந்தச் சித்தர்' என்று அழைக்கப்பட்டார்.

முப்பத்திரண்டு பாடல்கள் கொண்ட கிளிக்கண்ணியில் நாலுவகை யோனி பேதம், எழுவகைத் தோற்றம், பிரணவம், ஐந்தெழுத்துச் சிறப்பு, ஆறாதாரவடிவம், சமாதி, மண், பெண், பொன்னாசைகளைத் துறத்தல் முதலானவற்றை மையக் கருத்தாகப் பாடியுள்ளார்.

*"தேகம்பொய், தேகி மெய்யே*
*மோகந்தம் விட்டாக்காற்*
*முத்தியடை வாயே!"*[13]

என்று முத்திக்கு வழிகாட்டுகிறார். மேலும் கிளியே! என்று விளிப்பது இவரது பாணியாகும்.

*"பெண்ணாசை பொன்னாசை – கிளியே*
*பூமியின் மீதாசை"*[14]

என்பதன் மூலம் அறிய முடிகிறது.

## அனாதி நாதர் (காலாங்கி நாதர்)

நவநாத சித்தர்களுள் நான்காவது சித்தர் அனாதிநாதர் என்னும் காலாங்கிநாதர் ஆவர். காலாங்கிநாதர் சீன தேசத்தவர். சீன தேசத்திலிருந்து தமிழ்நாட்டுக்கு வந்து திருமூலரைக் குருவாகவும், போகரைச் சீடராகவும் ஏற்றவர்.

காலாங்கிநாதரே பிற்காலத்தில் கமலமுனியாக வந்து பல சித்துக்களைச் செய்து, பல நூல்களையும் இயற்றியதாகக் கூறுவர். காலாங்கி

நாதரின் உபதேசஞானம் 34 பாடல்களால் ஆனது. இதில் சிவலோக ஞானம், முத்தி இரகசியம், தியானம், செபிக்கும் மந்திரம், சுழிமுனை விபரம் முதலான சகல முறைகளைக் கூறி வாசியோக ஞானத்தை உரைக்கின்றார்.

**வகுளி நாதர்**

நவ நாதர்களில் ஐந்தாவதாக வைத்து எண்ணப்படுபவர் வகுளிநாதர். இவர் மௌன உபதேசத்தை அருளியமையால் 'மௌனச் சித்தர்' என்றும் அழைக்கப்படுகிறார்.

உடம்பைக் காய கற்ப உடலாக மாற்றிக் கொண்டதும் சகலமும் பரவெளியென உணர்ந்து சித்தி பெற்ற முத்தர்களைத் தினமும் அறிந்ததாகவும், இத் தவ வாழ்வில் முக்கியமான அம்சம், தானென்ற அகங்காரம் நீக்குதல் என்று உறுதியாகவும், இறுதியாகவும் தன் 'குறவஞ்சிப்பா'வில் கூறுகிறார்.

**மதங்கநாதர்**

நவநாதர்களில் ஆறாவதாக வைத்துப் போற்றப் படுபவரான மதங்கநாதர் "சங்கிலிச் சித்தர்" எனவும் அழைக்கப்படுகின்றார். இவரது, காலம் கி.பி. 15 ஆம் நூற்றாண்டின் இறுதிக்காலம் என்றறியப்படுகிறது. இவர்பாடல் பஞ்சபூதங்களின் இருப்பையும், அகார, உகார, யகார, சிகாரம் ஆகிய எழுத்துகளைப் பற்றியும் காணப்படுகிறது. இவர் பாடல் கும்மிப்பாடலாக அமைந்துள்ளது.

**மச்சேந்திர நாதர்**

இவர் ஏழாவது சித்தர் ஆவார். சிவபெருமான் தாரக மந்திரத்தால் ஞானம் பெற்ற மீன்குஞ்சு மனித வடிவாகி வெளிவந்ததால் "மச்சேந்திரன்" என்று சிவபெருமானால் பெயரிடப்பட்டது. மச்சேந்திரர் பாடிய நொண்டிச்சிந்து பாடல்கள் மிகச் சிறப்படைந்தமையால் நொண்டிச்சித்தர்

என்றும் அழைக்கப்பட்டார். 33 பாடல்கள் கொண்ட நொண்டிச்சிந்தும், 16 பாடல்கள் கொண்ட சிவயோகம் ஒன்றும் சித்தர் இலக்கியத்தில் காணப்படுகின்றது.

### கஜேந்திர நாதர்

நவநாத சித்தர்களில் எட்டாவது சித்தராக வைத்து எண்ணப்படும் கஜேந்திர நாதரை "விளையாட்டுச் சித்தர்" என்றும் அழைப்பர். இவர், வாழ்க்கையில் எல்லாவற்றையும் விளையாட்டாய் எடுத்துக் கொள்ள வேண்டும் என்று போதனை செய்தமையால் இவரை விளையாட்டுச் சித்தர் என்றழைத்தனர்.

*"தாய், தந்தை கூடுவதும் விளையாட்டே*
*பெண்டு பிள்ளை என்பதும் விளையாட்டே"*[15]

*"பிணமாய் யிருப்பதுவும் விளையாட்டே – அதைப்*
*பெற்றோர்கண் டழுவதுவும் விளையாட்டே"*[16]

என்று உலகக் காரியங்கள் அனைத்தும் விளையாட்டு போலவே எண்ணி ஞானம் போதிக்கின்றார். "மெஞ்ஞானம் காணாததும் விளையாட்டே இந்த மேதினியே போதுமெனல் விளையாட்டே" என்று தம்பாடலை முடிக்கின்றார்.

### கோரக்க நாதர்

நவநாதர்களில் ஒன்பதாவது சித்தராகக் கோரக்கநாதர் எண்ணப் படுகிறார். இவர் வசிட்டருக்கு ஒரு குறப்பெண் மூலமாகப் பெற்ற பிள்ளையாகப் போகரால் கூறப்படுகிறார்.

### பதினெண் சித்தர்கள்

தமிழ்ச் சித்தர்களைப் பதினெண் சித்தர்கள் என்று அழைக்கும் மரபு உள்ளது. பதினெட்டு என்ற எண்முறை தமிழர்களிடம் தொன்றுதொட்டு

இருந்து வருகிறது. சங்க இலக்கியத்தில் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகியவற்றைப் பதினெண் மேற்கணக்கு என்றும், சங்கம் மருவிய காலத்தில் தோன்றிய திருக்குறள் முதல் கைந்நிலை வரை உள்ள நூல்களைப் பதினெண் கீழ்க்கணக்கு என்றும் கூறுவர். தமிழில் உள்ள மெய்யெழுத்து பதினெட்டு, புராணங்கள் பதினெட்டு, ஆகமங்கள் பதினெட்டு, மகாபாரதத்தில் போர் நடைபெற்றது பதினெட்டு நாள் முதலியவை அனைத்தும் பதினெட்டு எண்முறை குறித்துள்ளதை அறியமுடிகிறது.

தமிழகச் சித்தர்கள் ஒரே காலத்தைச் சேர்ந்தவர் அல்லர் பல்வேறு அரசர்கள் ஆண்டகாலத்தில் பலர் தோன்றினர் என்பதை வரலாற்றுச் சான்றுகளைக் கொண்டு அறியமுடிகிறது. பதினெண் சித்தர் எனும் கணக்குத் தொகுக்கப்பட்டவர்களின் எண்ணத்தின் அடிப்படையிலும், அல்லது அப்போது அவர்களுக்குக் கிடைத்த எண்ணிக்கையை வைத்தும் தொகுக்கப்பட்டிருக்கிறது. இத்தொகுப்பு முறை 18, 19 ஆம் நூற்றாண்டுகளில் நிகழ்ந்தன. சித்தர் பாடல்கள் தொகுக்கும் காலத்தில் பலர் இருந்திருக்கின்றனர் அல்லது மக்களுக்கு நன்கு அறிந்த அல்லது புகழ் பெற்ற சித்தர்கள் பட்டியலைக் கொண்டு தொகுத்திருக்கலாம் என்பதை அறிய முடிகிறது.

## சித்தர்களின் குழுக்கள்

பதினெண் சித்தர்கள் பட்டியலைப் பின்வருமாறு வகைப்படுத்தலாம். அவை,

“1. நந்திகேசுவரர் 2. திருமூலர் 3. அகத்தீசர் 4. சட்டநாதர் 5. பதஞ்சலி 6. கூனக்கண்ணர் 7. கோரக்கர் 8. கமலமுனி 9. சண்டிகேசர் 10. இடைக்காடர் 11. சிவவாக்கியர் 12. கொங்கணர் 13. போகநாதர் 14. மச்சமுனி 15. புண்ணாக்கீசர் 16. காலாங்கிநாதர் 17. தேரையர் 18. சுந்தரானந்தர் என்பன. இதனை,

*"பார்த்திடவே நந்தீசர் மூலத்தீசர்*

*பண்பான அகத்தீசர் சட்டனாதர்*

*கோர்த்திடவே பதஞ்சலியும் கூனக் கண்ணர்*

*கோரக்கர் கமலமுனி சண்டிகேசர்*

*கூர்ந்திடவே இடைக்காடர் சிவாயசித்தர்*

*கோங்கிணர் அவர்தந்தை போக நாதர்,*

*காத்திடவே மச்சமுனி புண்ணாக்கீசர்*

*காலங்கி தேரையர் சுந்தரரும் காப்பே"*[17]

எனும் இக்காப்புச் செய்யுளிலில் இடம் பெற்றுள்ளோரில் நந்தீகேசுரரை முதன்மையாகவும் திருமூலரை இரண்டாவதாக வைத்தும் பாடப்பட்டுள்ளது. மேலும் ஒரு குழுவையும் கீழ்வரும் பாடல் மூலம் அறியமுடிகிறது.

*"நந்தி அகத்தியர் மூலர் புண்ணாக்கீசர்*

*நற்றவத்துப் புலத்தியரும் பூனைக்கண்ணர்*

*நந்தியிடைக் காடரும் போகர் புலிக்கை யீசர்*

*கருவூரார் கொங்கணவர் காலாஞ்சி*

*சிந்தி எழுகண்ணர் அகப்பேய் பாம்பாட்டி*

*தேரையரும் குதம்பையரும் சட்டைநாதர்*

*செந்தமிழ் சேர்சித்தர் பதினெண்மர் பாதம்*

*சிந்தை யுன்னிச் சிரத்தணியாய்ச் சேர்த்தி வாழ்வாம்!"*[18]

என்பதன் மூலம் இரண்டாம் குழுவின் துதிப்பாடலில் அகத்தியரை நந்திக்கு அடுத்ததாக வைத்துப் பாடப்பட்டுள்ளது. அவை, நந்தி, அகத்தியர், திருமூலர், புண்ணாக்கீசர், புலத்தியர், பூனைக்கண்ணர், இடைக்காடர், போகர், புலிக்கையீசர், கருவூரார், கொங்கணவர், காலாங்கி, அழுகண்ணர், அகப்பேய்ச்சித்தர், பாம்பாட்டிச்சித்தர், தேரையர், குதம்பைச்சித்தர், சட்டநாதர் ஆகியோர் ஆகும்.

"நந்திகேசுரரையும், திருமூலரையும், அகத்தியரையும் தலைவர்களாகக் கொண்டு ஒவ்வொரு குழுவும் செயல்பட்டன"[19] என்று

சித்தமருத்துவ அமுது எனும் நூல் குறிப்பிடுகிறது. திருமுருகனாகிய சுப்பிரமணியர் அருள் பெற்று அவர்தம் தீந்தமிழை உலகிற்கு எடுத்துரைக்க வந்த அகத்திய முனிவர் தமிழ்ப் பணியாற்றியதாகத் தெரியவருகிறது. சமயப் பெரியாராகத் திருமூலரும் திகழ்ந்து வந்திருப்பது தெரிகிறது. மேற்கூறிய செய்திகள் மூலமாகப் பதினெண் சித்தர்கள் குழுவைப் பற்றி அறிய முடிகிறது. சித்தர்கள் மூன்று வகைகளாகப் பிரிக்கப்படுகிறார்கள். அவை 1. ஞானசித்தர் 2. நாதசித்தர் 3. இரசேஸ்வரசித்தர் என்பன. ஞானசித்தர் என்பவர்கள் உண்மையான ஞானநிலையில் நின்றவர்கள் ஆவர். இவர்களைச் சுத்த சன்மார்க்க சித்தர் என்றும் அழைப்பதுண்டு. அகத்தியர், போகர், திருமூலர் முதலானோர் இந்த வகைப் பிரிவைச் சேர்ந்தவர்களாவர்.

நாதசித்தர் என்பவர்கள் பிரணாயாமம், யோகப்பயிற்சி மூலம் சுழுமுனை நாடியில் உண்டாகும் நாதத்தில் தம்மனத்தை ஒடுக்கிச் சமாதி நிலையில் நின்றவர்களாவர். ஆதிநாதர், அநாதிநாதர், சடேந்திரநாதர், கோரக்கநாதர் முதலானோர் இந்த வகைப் பிரிவைச் சார்ந்தவர்களாவர்.

இரசேஸ்வர சித்தர் என்பவர் இரசாயன முறையில் (இரசவாதத்தின் மூலம்) தம் உடம்பைக் காயசித்தி அடைவித்து இறப்பை வென்றவர்களாவர். இதில் மேற்கூறப்பட்டவர்களாகிய போகர், அகத்தியர், காலாங்கி நாதர், கருவூரார், தேரையர், ஆகியோர் அடங்குவர்

சித்தர்கள் வரிசையில் வைத்துப் போற்றப்பட்ட பதினெண் சித்தர்களைப் பற்றித் தனித்தனியே அவர்களின் சிறப்பியல்களைக் கீழ்வருமாறு அறியப்படுகிறது.

**அகத்தியர்**

சித்தர்வரிசையில் முதன்மையாக வைத்துப் பேசப்படுபவர் அகத்திய முனிவர் ஆவார். அகத்தியர் என்ற பெயரில் கி.மு. 16ஆம்

நூற்றாண்டிலிருந்து கி.பி. 19ஆம் நூற்றாண்டு வரையில் 37 பேர் [illegible] வாழ்ந்து தமிழ்த்தொண்டும், மருத்துவம், சோதிடம், ஆன்மிகம் முதலியதொண்டுகளும்ஆற்றியுள்ளமை விளங்குகிறது. அவர்களில், ஒருவர் வடநாட்டிலிருந்து வந்தவர் எனவும் அவர் பொதிகை மலையைத் தலைமையிடமாகக் கொண்டு பணியாற்றியதாகவும் கூறப்படுகிறது. இவரே சிவபெருமான் உமாதேவி திருமண நிகழ்ச்சியில் ஏற்பட்ட வடதிசை தாழ்ந்த நிலையைச் சரிசெய்தவர் எனவும் புராணங்கள் கூறிவருகின்றன. இவருக்குக் கும்பமுனி என்றும் ஒருபெயர் வழங்கி வருகிறது. இவரை ஆரியராகவும் கருதப்படுகிறது. முத்தமிழுக்கு இலக்கணம் எழுதியவர், தேவாரத்தைத் திரட்டிக் கொடுத்தவர், சிவபெருமானிடத்திலும், முருகப் பெருமானிடத்திலும் ஞானத்தையும், தமிழையும் பயின்றவர் எனப் பல செய்திகள் அகத்தியர் பற்றி வழங்கிவருகிறது.

அகத்தியர் பற்றிய குறிப்புகள் ரிக்வேதம், மகாபாரதம், இராமாயணம், பரிபாடல், சிலப்பதிகாரம், மணிமேகலை, இறையனார் அகப் பொருள் உரை முதலிய நூல்களிலும் காணப்படுகின்றது. மேற்கூறியவை அனைத்தும் சித்தரோடு தொடர்புடைய அகத்தியர் அல்ல என்பது புலனாகிறது. அகத்தியர் என்ற பெயரில் சித்தர் இலக்கியங்களில் ஞானம், காயகற்பம், பூசைவிதிகள், தீட்சைவிதிகள், பஞ்சபட்சி சாத்திரம், நாடி சாத்திரம், யோகம், வைத்தியம், இரசவாதம், ஆருடம், வாகடம் போன்ற நூல்கள் நிலவி வருகின்றன.

சித்தர் இலக்கியங்களில் அகத்தியர் என்ற பெயரில் பல நூல்கள் உள்ளன. இந்நூல்கள் பலரால் பாடப்பட்டு ஒருவர் தலையில் சுமத்தப்பட்டி ருக்கலாம், அல்லது ஒரே பெயரில் பல ஆசிரியர்கள் இருந்திருக்கலாம். எனும் கருத்துகள் அகத்தியர் தொடர்பாக எழும்புகின்றன. மேற்கூறிய வற்றிலிருந்து சித்தர் இலக்கியத்திற்கு அகத்தியர் என்ற பெயரில் வாழ்ந்தவர்கள்பங்களிப்பு முக்கியத்துவம் பெறுவதை அறியமுடிகிறது.

"அகத்தியர் அனந்த சயனம் என்ற திருத்தலத்தில் சமாதி அடைந்திருப்ப தாகவும், இத்தலம் திருவனந்தபுரம் அனந்த பத்ம நாபசுவாமி கோவிலாக இருக்கலாம் என்றும் கருதப்படுகிறது. இருப்பினும் சில அகத்தியர் கும்பகோணத்திலுள்ள கும்பேசுவர் கோவிலில் சமாதி கொண்டார்"[20] என்றும் அறிய முடிகிறது. அகத்தியர் பெயரால் ஏராளமான நூல்கள் இருப்பினும் சிலவற்றைப் பின்வருமாறு குறிப்பிடப்படுகிறது பெருநூல் 12000, திருமந்திரம் 1500, வைத்தியகாவியம் 1500 அமுதகலைஞானம் 1200, ஆயுள்வேதம் 1200, சௌமியசாகரம் 1200, பரிபாஷை 500, இரணவாகடம் 500, வைத்தியரத்னச்சுருக்கம் 360, யோக சுருக்கம், ஞானச்சுருக்கம், மாந்திரீகக் காவியம், வல்லாதி, நாடிப்பரீட்சை, வகாரச்சுண்ணம், குணவாகடம் 130, சரக்குவைப்பு 50 அகத்தியர் கன்ம காண்டம், பாலவாகடம், நாடிசாத்திரம், சரநூல் உள்ளடக்கிய சுமார் 90 நூல்கள் வெளிவந்திருப்பதாகவும், பல அச்சேராமல் ஓலைச்சுவடிகளாகக் குகையில் மறைக்கப்பட்டிருப்பதாகவும் கூறப்படுகிறது.

## திருமூலர்

சித்தர்களில் முதலாமவரும், முதன்மையானவருமான சிவனிடமும், நந்திகேசுவரரிடமும் உபதேசம் பெற்றவர். இவர் தம் பாடல்கள் பலவற்றில் சிவனையும் நந்தி என்றே குறிப்பிடுகிறார். மூலன் என்ற மாடுமேய்த்து வந்த இடையன் சர்ப்பம் தீண்டியதால் இறப்புற்று, பசுக்கள் துயரத்தை எண்ணிய சுந்தரர் அவற்றின் துயரத்தைப் போக்க நினைத்தார். அருகிலிருந்த ஒரு மலைக்குகையில் தமது உடலைக் கிடத்திவிட்டு சூக்கும உடலில் திரும்பிவந்து இடையனின் உடலில் புகுந்து மூலன் எனும் பெயரில் வாழ்ந்து வந்தார். இவர் சித்துக் கலைகளில் ஒன்றான கூடுவிட்டு, கூடுபாயும் கலையைக் கற்றிருந்தார் என்பது தெளிவாகிறது. திருமூலர் மூவாயிரம் ஆண்டுகள் வாழ்ந்து ஆண்டுக்கு ஒருபாடல் வீதம் மூவாயிரம் திருமந்திரப் பாடல்கள் பாடியதாகக்

கூறப்படுகிறது. மேலும் திருமூலர் எண்ணாயிரம் திருமந்திரங்கள் இயற்றியதாகவும் கூறுவர்

*"வாருமிது திருமூலர் பாடியதோர் நூல்கேள்*
*வசனித்தார் திருமந்திர மெண்ணாயிரந்தான்"*[21]

இவ்வெண்ணாயிரத்தில் 4000 பாடல்கள் வாதம் பற்றியது. (இரசவாதம்) இதனை வாதக்காடு 4000 என்று அழைக்கப்படுகிறது. மேலும் உபதேசம் 30, மந்திரம் 300, தமிழ் 3000 என்ற நூல்களையும் இயற்றியுள்ளார். திருமந்திரம் மூவாயிரத்திற்குத் தமிழ் மூவாயிரம் என்றே பெயர் ஆகும்.

திருமூலர் தமிழ்நாட்டில் வாழ்ந்த காலம் கிறித்துப் பிறப்பதற்கு முன் இருநூறு ஆண்டுகளுக்கு முன்பாக இருக்கலாம் என்றும், 5 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவர் என்றும் கருதப்படுகிறது. "திருமூலர் மார்கண்டருக்கும், கிருஷ்ணபகவானுக்கும் உபதேசம் செய்தார்"[22] என்று சித்தர் வரலாறு கூறுகிறது.

திருமூலர் பல இடங்களில் பல்வேறு உடல்களில் வாழ்ந்ததாகக் கருதப்பட்டாலும் இவர் தில்லையம்பதியான சிதம்பரத்தில் சமாதி கொண்டுள்ளார். இதனை அமைத்தவர் கருவூர்சித்தராவார் என்பது கீழ் வரும் பாடல் மூலம் அறிய முடிகிறது.

*"சித்தரான கருவூரார் என்றசித்து*
\-------------------
*முத்தான வயததுவும் முன்னூராண்டு*
*மூதுலகில் பாண்டியனுக்கு உகந்தசித்து*
*பக்தியுடன் சிதம்பரமாம் தேவஸ்தானம்*
*பட்சமுடம் நிர்மித்த ஞானசித்து"*[23]

என்று போகர் பாடல் தெளிவிக்கிறது. திருமந்திரம் என்னும் நூல் சைவத்திருமுறையில் 10ஆம் திருமுறையாகச் சேர்க்கப்பட்டுள்ளது.

சேக்கிழார் இவரைச் சித்தி பெற்றுடையார் என்றழைப்பார். திருமூலர் காவியம் 8000, சோதிடம் 30, மாந்திரிகம் 600, வைத்திய காவியம் 1000, கருக்கிடை 1000, வைத்தியச்சுருக்கம், தீட்சைவிதி 8, யோக ஞானம் 16, திருமந்திரம் 3000, ஆகிய நூல்கள் திருமூலரால் இயற்றப்பட்டதாகும். இவரை நாயன்மார்கள் வரிசையிலும் வைத்துப் போற்றப்படுவதுண்டு.

**போகர்**

திருமந்திரம் சிறப்புப் பாயிரம், போகரை மெய்வழி கண்டவர் என்றும், திருமூலருக்கு ஒப்பாக வைத்தும் பேசப்படுவதால் போகமுனிவர் திருமூலர் காலத்தைச் சேர்ந்தவராகத்தான் இருக்க முடியும் என்று கருதப்படுகிறது.

*''கலந்தருள் காலாங்கர் தம்பால் அகோரர்*

---------------------------------

*புலங்கொள் பரமானந்தர் போக தேவர்*

*நிலந்திகழ் மூலர் நிராமயத்தோரே''*[24]

என்னும் சிறப்புப்பாயிர வரிகளின் மூலம் இவரது சிறப்பு விளங்குகிறது.

போகர் தமிழகத்தில் இருந்தவர். பிறகு சீனத்துக்குச் சென்று பல காலம் வாழ்ந்திருந்து சீனமொழிகளிலும் பல நூல்களைச் செய்துள்ளார். தமிழகத்திற்கு மீண்டும் வந்து பழனியில் வாழ்ந்தார். பழனி தண்டாயுதபாணி சிலையை நவபாஷாண கட்டுகள் மூலம் அமைத்துள்ளார். போக முனிவர் தமிழில் ஏராளமான நூல்களை இயற்றியுள்ளார்.

''சீனாவில் அவருக்கு போ—யாங் என்று பெயர் என்றும் வா—ஓ—சியூ என்ற பெயரில் சீனாவின் தலைசிறந்த ஞானியாகவும் கொண்டாடப் படுவதாகவும், போகரைப் பற்றி நீண்ட ஆய்வுகள் செய்துள்ள

இராமையா யோகி, போகர் சத்த காண்டம்”[25] எனும் நூலின் பதிப்புரையில் கூறியுள்ளார்.

போகர் ஒரு சித்தர் குழுவிற்குத் தலைவராகப் போற்றப்படுகிறார். தமிழகத்தில் தவமியற்றிப் பெற்ற ஞானத்தைச் சீனாவிலும் பரப்புவதற்குச் சென்றார் என்றும் கூறப்படுகிறது. போகர் சீனநாட்டுக்குச் செல்வதற்கு முன்பு கொங்கணவர், கருவூரார், இடைக்காடர், சட்டைமுனி போன்ற சீடர்கள் அவருடன் இருந்ததாகக் கருதப்படுகிறது.

போகர் இரசவாதக் கலையில் சிறந்து விளங்கியமை பழனியில் உள்ள முருகனை, நவபாடாணக் கட்டுச் சிலையாக வடித்திருப்பதிலிருந்து தெரிய வருகிறது. இவர் ககனக் குளிகை மூலம் வான் வழியே சென்றவர் என்றும் அறியப்படுகிறது. போகர் மனிதர்களாகிய தம் சீடர்களுக்கு மட்டும் ஞான உபதேசம் செய்ததன்றி சிங்கத்திற்கும், பூனைக்கும்கூட உபதேசித்துள்ளமை விளங்குகிறது. அதோடன்றி பொதிகை மலைச்சாரலில் காராம் பசுவிற்கும் உபதேசித்துள்ளார்.

உரோமாபுரியிலுள்ள இரசக்கிணறு மூலம் இவருக்கு ஆதிரசம் கிடைத்தது. இரசமணியின் மூலம் (ககனக் குளிகை) வான்வெளியில் சஞ்சரித்துப் பல அற்புதங்களை நிகழ்த்தியுள்ளார். போகர் சித்த மருத்துவத்தின் தந்தையாகவும் கருதப்படுகிறார். வேதியலின் கர்த்தாவாகவும் விளங்குகிறார். கற்ப மூலிகைகள் பற்றி இவர் நூல்களில் கூறியுள்ள அறிவியல் உண்மைகள் ஆராய்ச்சிக்குரியதாகும்.

போகர் இயற்றிய நூல்கள் யாவுமே அமுதமாகும் என்று காகபுசுண்டமுனிவர் தமது பெருநூல்காவியத்தில்,

*“வாக்கியென்றால் வாக்கியன் போகநாதன்*
*மாநிலத்திற் சொல்லியது எல்லாம் கேட்டேன்*
*ஆக்கிய நூல் யாவுமே அமுதமாகும்*
*அம்மம்மா வாயாலே சொல்லப் போமோ”*[26]

என்று போகரின் பெருமையை உரைக்கிறது என்று எஸ்.பி. இராமச்சந்திரன் கூறுகிறார்.

போகர் எழுதிய நூல்களில்; போகர் 12,000, சப்தகாண்டம் 7000, நிகண்டு, வைத்தியம், சரக்குவைப்பு, கற்பம் 360, இரணவாகடம் 150 கற்பசூத்திரம் 54, பூஜாவிதி 20 ஆகிய நூல்கள் சிறப்புமிக்கவை. போகரின் இறுதி வாழ்வு பழனியிலும், அவர் சமாதி பழனி தண்டாயுதபாணி (முருகன்) சந்நிதிக்குப் பின்புறமும் அமைந்துள்ளது.

## கொங்கணவர்

கொங்குநாட்டில் பிறந்தவராகையால் இவர் கொங்கணவர் என்றழைக்கப்பட்டார். இவர் கோயம்புத்தூருக்கு அருகில் வாழ்ந்ததாகக் கூறுவர். அங்குள்ள ஊதியூர் மலையில் வாழ்ந்ததால் அம்மலைக்குக் 'கொங்கணகிரி' என்ற பெயரும் வழங்கி வருகிறது.

கொங்கணவருக்குப் போகரும், அகத்தியரும் ஆசிரியர்களாக இருந்து உபதேசம் அருளியுள்ளனர். போகரிடமிருந்து முற்றும் கற்றுணர்ந்த சித்தராக வெளியேறித் தவமியற்றிக் கொண்டிருந்த நேரத்தில் மேலே பறந்து சென்ற கொக்கு இவர்மீது எச்சமிட நிட்டை கலைந்து அதன்மீது பார்வையைச் செலுத்தியதும் அக்கணமே அக்கொக்கு எரிந்து சாம்பலாயிற்று.

உணவுக்காக ஒருநாள் ஓர் இல்லம் முன்நின்று உணவு கேட்டார். அப்போது அந்த இல்லத்தரசி தன் கடமைகளை முடித்துக்கொண்டு வெளியில் உணவெடுத்துவர சற்றுத் தாமதமாயிற்று, கொங்கணவர் அவ் வம்மையாரை விழித்துப் பார்க்க ''கொக்கென்று நினைத்தாயோ கொங்கணவா"[27] என்று கேட்டவுடன் கொங்கணவர் வெட்கித் தலை குனிந்தார்.

திருமூலருக்கும், கொங்கணவருக்கும் நடந்த தர்க்கம் பற்றிய ஒரு பகுதி கொங்கணவர் வாதகாவியம் மூன்றாம் காண்டத்தில் (பா.213) முதலாக அமைந்துள்ளது. திருமூலர் கொங்கணவரைப் பார்த்துக் கேட்கும் பாடலில்,

*"சபித்தாய் நீ கொக்கை அன்று*
*தனிக்கோபம் பெண்ணின் மேலே*
*எபித்தாய் நீ ஏறா தேனோ*
*விதமென்ன ஊணிப் பாரு"*[28]

என்று திருமூலர் கொக்கிடம் வித்தை காட்டியது வாசுகியிடம் பலிக்க வில்லையே! என்று கிண்டல் செய்வதுபோல் இப்பாடல் அமைந்துள்ளது.

கொங்கணவர் மூலிகைச் சாற்றிலிருந்தே செம்பு என்ற உலோகத்தைப் பிரித்து எடுக்கும் இரசாயன முறையில் தேர்ந்தவராக இருந்துள்ளமை விளங்குகிறது.

*"காணப்பா மூலிகையிற் செம்பு சொல்வேன்*
*கலந்தவுரி, ஓரிதழ்த் தாமரையும் கேளு"*[29]

என்று கொங்கணவர் பாடலடி கூறுகின்றது.

கொங்கணவர் திருவேங்கட மலையில் தவமியற்றி, திருவேங்கடத்திலேயே (திருப்பதி) சமாதி கொண்டுள்ளதாகக் கூறப்படுகிறது.

கொங்கணவர் இயற்றிய நூல்களில் சில கீழ்வருமாறு. வாதகாவியம் 3000, வைத்தியம் 200, வாதசூத்திரம் 200, ஞானசைதன்னியம் 109, சரக்குவைப்பு 111, கற்பசூத்திரம் 100, வாலைக்கும்மி 100, முப்புசூத்திரம் 40, சுத்தஞானம் 16 ஆகியன குறிப்பிடத்தக்கவை.

**நந்தீசர்**

சித்தர்களில் முதன்மையானவராகச் சிவபெருமானுக்கு அடுத்த நிலையில் வைத்துப் போற்றப்படுபவர் நந்தீசர் ஆவார். இவர் சிவாலயங்களில் நந்தியாக வீற்றிருப்பவர். இவர் சித்தர்களின் கூட்டத்திற்கே தலைவராகவும், குருவாகவும் விளங்கிவருகிறார். இதனை,

*"குருவான தேவதா ஸ்தலங்கள் தன்னில்*

---------------------------

---------------------------

*திருவான நந்தி ரூபங் கொண்டு மல்லோ*

*சிறப்புடனே வந்துதித்த சித்து தானே"*[30]

என்று போகர் குறிப்பிடுகிறார்.

நந்தீசர் கலைஞானத்தில் (பா.181) தாம் வடநாடு என்னும் கயிலையைச் சேர்ந்தவர் என்றும், வியாச முனிவர் இவருக்குத் தம்பி என்றும், தசரதன் தன் அம்மான் என்றும், தன்வந்திரி தன்பிள்ளை (சீடன்) என்றும், அசுவினி தேவர்கள் பேரர்கள் என்றும், சிவனும் உமையும் தாய் தந்தையரென்றும், தான் கைலாசசித்தன் என்றும் பெயர் பெற்றதைக் கூறுகிறார்.

*"ஆமப்பா வடதேசம் கயிலைதேசம்*

*அப்பனே என்தேசம் உத்தரதேசம்*

*வாமப்பா எனைச் சேர்ந்த சித்தர் சொல்வேன்*

*வளமான தசரதரும் வியாசர் தானும்*

---------------------------

*காமென்ற தேவியுட கிருபையாலே*

*கைலாச சித்தனென்ற பேருண்டாச்சே"*[31]

என்னும் பாடலில் நந்தீசர் கலை ஞானத்தில் தனது பிறப்பிடத்தையும் உடன் இருந்த சித்தர்கள் பற்றியும் விளக்குகிறார்.

சித்தர்கள் சில தேவ இரகசியங்களையும், இரசவாத, மருத்துவ இரகசியங்களையும் கண்டவர்களுக்கும் தெளிவிக்காமல் காத்து வருதல் மரபாகும். இந்த நிலையில் அரனாகிய சிவபெருமான் உமையாகிய பார்வதிக்குச் சொன்ன இரகசியத்தை மறைப்பாகத் தன் சீடர்களுக்கு உரைக்காமல் வெளிப்படையாகச் சொல்லியதால் சிவனின் கோபத்திற்கு ஆளனாதாக நந்தீசரே தான் சண்டீசருக்கு உரைப்பதாக,

*"இட்டேனே இந்நூலும் சிறந்த வாக்காய்*
*இறை உமையும் உரைத்தமொழி தவிர்த்திடாமல்*
*விட்டேனே சண்டீசன் மனமுந்தேற*
*விளம்பினேன்--------------------*
*------------------------------*
*நட்டேனே தமிழ்ப் பயிராய் விளைய வைத்து*
*நன்மைபெற இப்பொருளைக் கூறினேனே"*[32]

என்று நந்திநிகண்டில் காணப்படுவதை அறிய முடிகிறது. சிவனும் தன்கோபம் தணிந்து நந்திவா என்றழைத்துத் தன்முன் நிற்கச் சொல்வதை,

*"சிவனென்னைப் பார்த்துப்*
*பதஞ்சலியாய் நிரஞ்சனமாய்ப் பாதந் தூக்க*
*--------------------------*
*இறங்கினார் அவர்முன்பு மண்டிபோட்டு*
*இருந்தனப்பா எனக்கொருவர் எதிரே இல்லை"*[33]

என்று நந்தீசர் கருக்கிடை (பா.10)ல் கூறுவதாக எஸ்.பி. இராமச்சந்திரன் கூறுகிறார்.

இவ்வாறு நந்தீசர் என்றழைக்கும் நந்திகேசுவரர் திருமூலருக்கு ஆசானாகவும், சமயத்தலைவராகவும் போற்றப்படுகிறார்.

நந்தீசர் முப்பத்திரெண்டு கற்ப மூலிகைகளை நந்தீசர் கலைஞானத்தில் (பா.932) ல் உரைக்கின்றார். இவரது காலம் பதினைந்து அல்லது பதினாறாம் நூற்றாண்டு என்று கருதப்படுகிறது. வைத்திய காவியம் 1200, கலைஞானம் 1000, நிகண்டு 300, கருக்கிடை 300, ஞானசூத்திரம் 100, முப்புசூத்திரம் 37, வைத்தியம் 12, கருக்கிடைசூத்திரம் 33 ஆகிய இவரது நூல்கள் சிறப்பு வாய்ந்தது, நந்தீசர் பெயரால் அற்புதமான நாடி சோதிட நூல் ஒன்று ஓலைச்சுவடிகளாக உள்ளதென்று சித்தர் வரலாறு என்னும் நூல் கூறுகின்றது.

இவர் காசியில் சமாதி அடைந்ததாகக் குறிப்பிடப்படுகிறது.

**சட்டநாதர்**

"சட்டைமுனி என்னும் சட்டநாதர் சிங்கள நாட்டைச் சேர்ந்தவர்"[34] என்று போகமுனிவர் தமது சத்தகாண்டத்தில் (போகர் 7000) கூறுகிறார். இவர் போகரின் மாணாக்கர் ஆவார். சட்டைமுனி சிவபெருமானோடு நெருங்கிய தொடர்புடையவர் என்பதை அவருடைய பெயருடன் அடைமொழியாக, கைலாயக் கம்பளிச் சட்டைமுனி என்று வழங்கப்படுகிறது.

வேதியலிலும் சட்டைமுனி மிகப் பெரிய நிபுணராக விளங்கியவர். போகருடனும், கொங்கணவருடனும் கூடி வாழ்ந்ததால் அவர்களிடமிருந்து இரசவாதத்தைக் கற்றறிந்தார்.

அகத்தியர் 12000 என்னும் நூலில் சட்டைமுனி அசுவனி தேவர்களைப் பார்த்த நிகழ்ச்சிவருகிறது. அசுவனி தேவர்கள் சட்டைமுனியைப் பார்த்து நீ யார்? எனக் கேட்க, சட்டைமுனியோ,

*"ஆரோதான் என்றுமே எண்ண வேண்டாம்*
*அப்பனே போகருட சீடன் என்றார்"*[35]

என்று அகத்தியர் 12000 நூலில் (பா.102) இல் குறிப்பிட்டுள்ளதாகையால் இவர் போகருடைய மாணாக்கர் என்பது விளங்குகிறது. சுந்தரர் சட்டை நாதருக்கு மாணாக்கராக விளங்கியுள்ளமை கீழ்வரும் பாடலில் தெரியவருகிறது.

*"செப்பாத ரகசியம் செப்பினேன் சுந்தரா*
*முப்பான உப்பு மூலரும் காப்பே"*[36]

என்று சட்டைமுனி குருசூத்திரம் கூறுகிறது. இவர் எழுதிய நூல்கள் சட்டைமுனி வாதகாவியம் 1000, நிகண்டு 1200, சரக்கு வைப்பு 500, சட்டைமுனி நவரத்தின வைப்பு 500, வகாரம் 200, தீட்சை 200, கற்பம் 100, ஞானவிளக்கம் 51, குரு சூத்திரம் 25 ஆகியன முக்கியத்துவம் வாய்ந்த நூல்களாகும்.

சட்டை முனி சீர்காழி என்னும் ஊரில் சித்தியடைந்து சமாதியும் அச்சிவாலயத்திலேயே அடங்கியுள்ளது. திருவரங்கத்தில் அரங்கநாதருடன் ஒன்றாகக் கலந்து மறைந்ததாகவும் கூறப்படுவதுண்டு.

**பதஞ்சலி**

வடமொழியில் மகா பாஷ்யம் எழுதிய பதஞ்சலிவேறு, யோக சூத்திரம் (பதஞ்சலி யோக சூத்திரம்) எழுதிய பதஞ்சலி வேறு என்று வேறுபடுத்தியிருப்பது வேதனையளித்தாலும் இரண்டையும் எழுதியது ஒருவர்தான் என்பது விளங்குகிறது. அவர் ஆதிசேடனின் அம்சம் அல்லது அவதாரம் என்று புராணம் கூறுகிறது. தில்லையம்பதியில் வியாக்ரம முனிவருக்கும், பதஞ்சலியாருக்கும் இறைவன் திருநடனம் காணும் பேறு அளித்ததாகவும் கூறப்படுகிறது.

பதஞ்சலி முனிவர் தில்லையில் வாழ்ந்ததாகவும், நிறைய மாணாக்கர்களைப் பெற்றிருந்தமையும், அச்சீடர்களில் ஒருவரே கௌடபாதர் என்பதும் தெரியவருகிறது. இவரின் சீடர் கோவிந்த பகவத்பாதாள் என்பவர் ஆவார். இவரே ஆதிசங்கரரின் ஞானசிரியர் என்பது குறிப்பிடத்தக்கது.

இவர் இயற்றிய நூல் யோகஞான சாஸ்திரத்திரட்டு குறிப்பிடத் தகுந்ததாகும். பதஞ்சலி முனிவரின் சமாதி இராமேஸ்வரம் இராமநாதர் ஆலயத்தில் அமைந்துள்ளது.

**கோரக்கர்**

கோரக்க முனிவர் பற்றி அறிவதற்கு அவருடைய நூலான கோரக்கர் வகார சூத்திரம் 100 என்ற நூலின் முதற்பாடலே சான்றாக விளங்குகிறது.

> *"அருள்பெற்ற நந்தி ஆசான் எனக்குப்*
> *பொருள் பெற்றமூலர் போகர் எனக்குத்*
> *தருவொத்த தோழர் சட்டைமுனியும்*
> *பரமுள கொங்கணர் பச்சம் மிகுதியே!"*[37]

என்னும் பாடலில் நந்திகேசுவர் ஆசானாகவும், திருமூலர் வழிவந்த போகர் தோழர் என்றும் சட்டைமுனியும், கொங்கணவரும் தனக்கு பிரியமுள்ளவர் என்றும் கோரக்கர் கூறுவதாகச் சித்தர்வரலாறு கூறுகிறது.

இவர்தன் சீடர்களான நாகார்ச்சுனர், சாணாக்கிய முனிவர்களோடு சதுரகிரி மலையில் வாழ்ந்ததாகக் கருவூரார் தமது வாதகாவியத்தில் கூறியுள்ளார்.

கோரக்கர் மூலி என்பது 'கஞ்சா' செடியாகும். கோரக்கர் கஞ்சாவை அதிகம் பயன்படுத்தி மருந்துகள், கற்ப மூலிகைகள் செய்ததால் பல சித்தர்களுடைய தொடர்பு இவருக்கு இருந்தது தெரியவருகிறது.

## இவர் எழுதிய நூல்கள்

கோரக்கர் நூல்களில் சந்திரரேகை 200, ரவிமேகலை 75, முத்தாரம் 91, மலைவாகடம், கற்பம் 1000, முத்திநெறி 500, வகாரசூத்திரம் 100, தண்டகம் 50, குருஜெயநீர் 10, பிரம்மஞானம் 20 ஆகியன குறிப்பிடத்தகுந்தவை. இவர் சமாதி கொண்டுள்ள இடம் திருக்கோணமலை ஆகும்.

## கமலமுனி

கமலமுனிவர் சீனாவில் வாழ்ந்ததாக அறிய வருகிறது. கருவூரார் தமது வாத காவியத்தில்,

*"பரமதா யிருந்து இந்தப் பாரினில் வேதை செய்து*
*தரமதாய்க் கற்பம் கொண்டு சடமதை வலுக்கச் செய்தார்"*[38]

என்று கூறுவதன் மூலம் இவர் வேதையில் நிபுணத்துவம் எய்தியதும் அதன்மூலம் முப்பு கற்பம் உண்டு உடலை வேதிக்கச் செய்ததும் விளங்குகிறது.

இவர் நாலாயிரமாண்டு வாழ்ந்ததாகவும், சீனாதான் இவரின் இருப்பிடம் என்றும் போகர் ஏழாயிரத்தில்,

*"பாரேதான் கமலமுனி வயதே தென்றால்*

---------------------------

*நேரேதான் வயததுவும் நாலாயிரந்தான்*
*நேர்மையுடன் முன்னூற்று சொச்சமாகும்*
*சீரேதான் சீனபதி தன்னிலப்பா*
*சிறப்புடனே நெடுங்காலம் இருந்த சித்து"*[39]

என்று கமலமுனிவர் பற்றிப் போகர் கூறியுள்ளார். காலாங்கி நாதரே

கமலமுனி என்றும் கருதுவதுமுண்டு, அதற்குச் சான்றாகக் கமலமுனி சூத்திரம் 76 எனும் நூலில்,

*"கமலம தாயிரத் தெட்டையுங் கண்டபின்*
*கமலமுனியென்றும் காலாங்கி என்றும்*
*விமலுரைத்தார் மெய்ச்சித்த னென்று*
*நிமல னென்நந்தி நேர் கெண்ட வாறே!"*[40]

என்று கூறுவதால் மேற்படி கருத்தை ஓரளவு ஊகிக்க முடிகிறது.

கமலமுனி மதுரையம் பதியில் சமாதியில் வீற்றிருப்பதாகப் போகர் ஜனனசாகரம் எனும் நூல் குறிப்பிடுகிறது.

**இடைக்காடர்**

இடைக்காட்டுச் சித்தர் ஆழமான கருத்துகளையும், இனிய சந்தங்களையும் உள்ளடக்கி, "ஆனந்தக் கோனாரே!" என்றும் 'தாண்டவக் கோனே' என்றும் விளிக்கின்ற ஞானப்பாடல்களை இயற்றியவர். 'பசுவே' என்று விளித்த பாடல்களாலும் இவரை இடையராகவே கருதி விஷ்ணுவின் அவதாரம் என்று கூறுவோரும் உண்டு. இவர் போகரின் மாணவராவார். இவர் சாரீரம் என்னும் நூலும், ஞானசூத்திரம் 70 என்ற நூலும் இயற்றியுள்ளார். கி.பி. 15 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவர் ஆவார். மலையாள நாட்டிலுள்ள 'இடைக்காடு' எனும் ஊரில் பிறந்தவரும், 'ஊசிமுறி' என்னும் நூலை இயற்றியவரும் இவரே என்பாரும் உளர்.

இடைக்காடர் சோதிடத்திலும், வானாராய்ச்சியிலும் வல்லவர் என்பதும் அவர்தம் தனிப்பாடல் மூலம் தெரியவருகிறது.

*"வெகுதான்ய வருடம் மேதினியில் எல்லாம்*
*தருமாரிபின் பெய்யும் தான் முன் – முகில் சோர்ந்து*

*கொஞ்ச மழை பெய்யும் குலவு கழை தழைக்கும்*

*பஞ்சம் பருத்தி உப்பு பாழ்!"*[41]

என்னும் பாடலிலிருந்து வெகுதான்ய ஆண்டின் மழை மிகத் தாமதமாகும் என்பது விளங்குகிறது.

இடைக்காடருக்கு உபதேசித்தவர் போக முனிவராவார். போகர் சமாதி கொள்ளப் போகும் முன்பு புலிப்பாணி முனிவரைப் பழனியிலும், இடைக்காடரைத் திருவண்ணாமலையிலும் இருந்து இறைப்பணி செய்ய கட்டளையிட்டதாகக் கூறப்படுகிறது. இதற்குச் சான்றாக இடைக்காடரின் சமாதி திருவண்ணாமலையில் உள்ளது.

இவரின் எண்ணற்ற நூல்களில் ஊர்வசி பஞ்ச ரத்தினம் சிறப்பு வாய்ந்ததாகும்.

**சிவவாக்கியர்**

பிறக்கும்போதே "சிவ சிவ" என்று சொல்லிக்கொண்டு பிறந்ததால் இவருக்குச் சிவவாக்கியர் என்று பெற்றோர் பெயர்சூட்டி மகிழ்ந்தனர். பிறந்தது முதலே வித்தியாசமான சிந்தனைகளுடன் இருந்து, வளர்ந்து பிற்காலத்தில் சமூகப் புரட்சிக்கும், கடவுள் பற்றிய சிந்தனையிலும் மறுமலர்ச்சியை ஏற்படுத்தியவர் சிவ வாக்கியர் என்று எண்ணப்படுகிறது இதனை,

*"நட்டகல்லை தெய்வமென்று நாலுபுட்பம் சாத்தியே*

--------------------------------

*நட்டகல்லும் பேசுமோ நாதனுள் ளிருக்கையில்"*[42]

என்று கடவுளைப்பற்றி இவர் எழுப்பும் வினா மூலம் தெய்வம் உனக்குள் இருக்கும்போது நீ ஏன் நட்டகல்லைச் சுற்றுகிறாய் நட்டகல் எதுவும் செய்யாது என்று அறிவுறுத்துகின்றார்.

அடுத்து இச்சமுதாயத்தில் சாதி, மதப் பூசல் மலிந்து கிடக்கிறது. இதனால் ஒற்றுமையிழந்த மனிதர்கள் அன்பை இழந்து பகைக்கலாயினர். இதனை,

*சாதியாவதேதடா சலந்திரண்ட நீரெலாம்*

*---------------------------*

*சாதிபேதம் ஓதுகின்ற தன்மையென்ன தன்மையே!"*[43]

என்று மனம் நோகின்றார்.

அரியும் சிவனும் வேறுவேறல்லர் என்று சமய, மத சமரசத்தை வலியுறுத்துவதற்காக,

*"சிந்தை மேவு ஞானமும் தினம் செபிக்கும் மந்திரம்*
*எந்தை ராம ராம ராம ராம வென்னும் நாமமே!"*[44]

என்று மகாவிஷ்ணுவையும்,

*"சிவாய மஞ்செழுத்திலே தெளிந்து தேவராகலாம்*
*சிவாய மஞ்செழுத்திலே தெறிந்து வானமாகலாம்"*[45]

என்று சிவபெருமானையும் பாடியிருப்பதால் இருசமயத்திற்குமுள்ள பாகுபாட்டைக் களைய முற்பட்டிருக்கிறார் என்பது தெளிவாகிறது.

சிவவாக்கியர் பலமுறை சமாதியிலிருந்து மீண்டும் திருமண வாழ்வில் ஈடுபட்டுள்ளதையும் புராணங்கள் கூறுகின்றன. இவர் வாத வைத்தியமான இரசவாதக் கலையிலும், ஞானத்திலும் தேர்ந்திருந்தமை விளங்குகிறது. சிவவாக்கியர் பாடல்கள் சிவாக்கியம் 1000 என்ற நூலாகத் தொகுக்கப்பட்டுள்ளது. சிவவாக்கியர் கும்பகோணத்தில் சமாதி கொண்டுள்ளார் எனக் கருதப்படுகிறது.

### மச்சமுனி

மச்சமுனி ஒரு சித்தர் ஆவார். பிண்ணாக்கீசர் என்பவரால் வளர்த்த பிள்ளை, அவர் மாணவருமாவார். சதாசிவர் கால ஞானத்தை உமாதேவிக்கு உபதேசிக்கும்போது உமாதேவி தூங்கிவிட அப்போது கேட்டுக் கொண்டிருந்த மீனை மச்சமுனியாக ஈசுவரன் உற்பவிக்கச் செய்ததை,

*"பெற்றுடன் வாழ்ந்தா ரிந்தப்பேர் பெரும்மச்சர் தாமும்*
*உற்ற செம்படவர் ஜாதி உலகத்தில் நல்ல சித்தர்*
*கொற்றவனருளா லந்தக் குலம்விட்டு மவருமேகி*
*மற்ற நற்கலைகள் கற்று வகாரத்திற் றிரமானாரே!"*[46]

என்று கருவூரார் வாதகாவியம் தெரிவிக்கிறது.

பிண்ணாக்கீசர் தமக்கு உபதேசம் செய்ததாக மச்சமுனி கூறுகிறார். எனினும் மச்சமுனி ஞான தண்டகம் 97இல் நந்திகேசுரரைக் குருவாகவும், திருமூலரையும், போகரையும் குருவாக வணங்குவதும் கீழ்வரும் பாடலில் உணரமுடிகிறது.

*"குருநந்தி ஆசானைக்கும்பிட்டேன். ஞாலந்*
*திருமூலர் நாமத்தைச் சேவித் – தரு முன்னோன்*
*போககுரு விட்டிமையெப் பூசியருச்சித் தேற்றும்*
*காகநிறத் தந்தி பாதங்காப்பு"*[47]

என்று பாடல் கூறுவதிலிருந்து மேற்கண்ட அனைவரும் மச்சமுனிக்குக் குருவாகவும் இருந்துள்ளமை விளங்குகிறது.

### இவர் இயற்றிய நூல்கள்

மச்சமுனியின் நூல்களுள் மச்சமுனி பெருநூல் காவியம் 800, சரக்குவைப்பு 800, வகாரம் 800, யோகம் 800, வைத்தியம் 800, தீட்சாவிதி

100, தண்டகம் 100, ஞானதீட்சை 50 ஆகியன குறிப்பிதகுந்தவை. மச்சமுனி சித்தர் திருப்பரங்குன்றத்தில் சித்தியடைந்ததாகக் கூறப்படுகிறது.

## புண்ணாக்கீசர் (பிண்ணாக்கீசர்)

பிண்ணாக்கீசர் பாம்பாட்டிச் சித்தரின் சீடர் ஆவார். இவர் நடுவீதியில் கால்மேல் கால்போட்டுப் படுத்துக்கொண்டு ஆகாயத்தைப் பார்த்தவாறு "கோபாலா கோபாலா" என்று கூறியதாக, மக்கள் கண்டிருப்பதாகவும் ஒரு செய்தி இவரைப் பற்றி வழங்கி வருகிறது.

இவரது இருப்பிடம் ஆத்திமரத்தின் பொந்துதான். பசி வந்துவிட்டால் மரப்பொந்துக்குள் இருந்து கொண்டே கோபாலா கோபாலா என்று கூச்சலிடுவார். மக்கள் பால், பழம் முதலியவற்றைக் கொடுத்தால் சாப்பிட்டுவிட்டுப் புன்முறுவல் பூத்தபடி வாழ்த்துவார் என்பது கர்ணபரம்பரைக் கதையாகும்.

இவரது சமாதியும் மரப்பொந்திலேயே அமைந்துவிட்டது. இவர் கேரளத்தில் உள்ள நாங்குனாச்சேரி என்ற ஊரில் சமாதி யோகத்தில் அமர்ந்திருப்பதாகப் போகமுனிவர் தம்பாடலில் கூறுகிறார்.

*"ஆமென்ற பிண்ணாக்கு ஈசர் தாமும்*
*அழகான நாங்குனாச் சேரியிலே யாச்சு"*[48]

என்பது இவரது முப்பு சூத்திரம் 17 என்ற நூல், நந்தீசரே இவருக்குக் குரு என்கிறது.

*"வெருக்கிய மூலர்க்கும் பிள்ளைக்கும் வழிசொன்னேன்*
*குருவெனக்கப்பா நந்தீசராமே!"*[49]

என்னும் பாடலடி மூலம் அறிய முடிகிறது.

## காலாங்கிநாதர்

கால் + அங்கி எனப்பிரித்தால் கால் என்பது காற்றையும் அங்கி என்பது அணிந்து கொள்ளும் ஆடையையும் குறிக்கும். இவர் காற்றையே கருவியாகக்கொண்டு வானில் மிதக்கும் ஆற்றல் பெற்றவர் என்பது பொருளாகும். இவர் சீனநாட்டவர் என்றும் கூறுவர். சீனர்கள் கால்வரை ஆடை அணிவது வழக்கம். அதனால் இப்பெயர் வந்ததாகவும் கூறுவர். இவர் 3000 ஆண்டுகள் வாழ்ந்ததாகப் போகர் கூறுகின்றார்.

இவர் திருமூலருடைய சீடர்களில் முதன்மையானவர். காலாங்கி நாதர் ககன குளிகையின் உதவியால் வான்வழியாகச் சீனநாடு சென்றதை,

*"சித்தான காலாங்கி முனிவர் தானும்*
*சிறப்புடனே சீனபதி தன்னில் சென்று*
*முத்தான காலனது அருளும் பெற்று*
*முனையான சமாதிதனில் இறங்கியல்லோ"*[50]

என்று போகர் பாடல் கூறுவதால் பலமுறை சமாதி கண்டவர் என்பது தெளிவாகிறது. இறுதியாகச் சமாதியடைந்தது காஞ்சிபுரம் என்னும் ஊராகும்.

*"சோதியென்ற காலாங்கி நாதர் தாமும்*
*துலங்குகின்ற காஞ்சிபுரம் தனிலே யாகும்"*[51]

என்று சித்தர் வரலாறு கூறுகிறது.

## எழுதிய நுல்கள்

வைத்திய காவியம் 1000, ஞானசாராம்சம் 500, கற்பவிதி 84, ஞான பூஜாவிதி 80, தண்டகம் 80, இந்திர ஜால ஞானம் 46, ஞானவிந்த ரகசியம் 30, ஞானசூத்திரம் 29 போன்ற நூல்கள் முக்கியமானதாக

விளங்குகிறது. காலாங்கி நாதர் சதுரகிரி மலையில் நீண்டகாலம் தவம் செய்ததாகக் கூறப் படுகிறது; அங்கு ஒரு சமாதி அறையும் உண்டென சதுரகிரி ஸ்தலபுராணம் கூறுகிறது.

### தேரையர்

அகத்தியரின் சீடர்களில் புகழ்வாய்ந்தவர் தேரையர். ஆயுள்வேத மருத்துவத்தின் தூண்களில் இவரும் ஒருவர், சித்த மருத்துவ ஆசான் என்றும் போற்றப்படுகிறார். இவரதுகாலம் 15ஆம் நூற்றாண்டாகக் கருதப்படுகிறது. தேரையர் தமிழகத்தின் தொண்டைநாட்டில் வாழ்ந்தவரென்றும் முத்தமிழும், சோதிடமும், மருத்துவமும் மேலும் பல மொழிகளையும் கற்றுணர்ந்த அறிஞராவார்.

இவர் இயற்றிய நூல்கள், சிகாமணிவெண்பா, நிகண்டு, சேகரப்பா, காப்பியம், தரு, அந்தாதி, மருத்துவப் பாரதம், வண்ணம், கரிசல், நான்மாலை, யமக வெண்பா. ஆகியன முக்கியத்துவம் வாய்ந்தவையாகும். இவர்தம் நூல்களில் தன்னைத் ‘தேரன்’ என்றே (பாடல்களில்) குறிப்பிட்டுள்ளார்.

### தேரையர் பெயர்க்காரணம்

இராமதேவர் என்கிற அகத்தியரின் ஊமைச்சீடனே பிற்காலத்தில் மருத்துவ ஆசானாக தேரன் (அ) தேரையர் எனும் பெயரில் புகழ் பெற்றுள்ளார். திரணாக்கிய முனிவரின் தலையிலிருந்த தேரையைத் தன் அறிவுத்திறனால் வெளியில் எடுக்கவும் அகத்தியரின் பாராட்டுக்கும், புகழுக்கும் ஆளாகியவர் இவர், அன்றுமுதல் இவருக்குக் தேரையர் எனும் பெயர் வழங்கலாயிற்று. இதற்கு ஆதாரமாக அகத்தியரே தம்பாடலில்,

*“தீராக அடியேனும் மனது வந்து*
*தீர்க்கமுடன் தலைதனையே கீறிமைந்தா*

*வீராக ஆயுதத்தால் தேரைதன்னை*

*விருப்பமுடன் தானெடுக்க சென்றிட்டேனே''* [52]

---

*சென்றேனே நோயாளி பக்கம் சென்றேன்.*

*தெளிவாகத் தேரையர் பின்னே நிற்க*

*வென்றிடவே தேரை தன்னை எடுக்கும் போது*

*வேகமுடன் இராமதேவர் செய்த வண்ணம்*

*பையவே தாம்பாளந் தன்னிலப்பா*

*பாலகனே நீரெடுத்துக் காட்டினார்பார்*

*நையவே தேரையது மூளை விட்டு*

*நலமுடனே சலந்தனியே குதிக்கலாச்சே"* [53]

என்று தம் மாணவர் இராமதேவர் எனும் பெயர் கொண்டவர் தேரையராகவும் ஊமை நிலையை மாற்றி உலகறியச் செய்த ஆசானாகவும் அகத்தியர் தமது பாடல் மூலம் தெரிவிக்கின்றார் என்று சித்தமருத்துவ வரலாறு கூறுகிறது. சித்தமருத்துவத்தில் தேரையரின் தைலவர்க்க முறைகள் இன்றும் சிறப்புடையதாகும். பொதிகை மலையில் இவர் சித்தி யடைந்ததாகக் கருதப்படுகிறது.

**சுந்தரானந்தர்**

சுந்தரர் என்றும் சுந்தரானந்தர் எனவும் வழங்கப்படும் இவர் சட்டை முனியின் சீடராவார். அகத்தியர் பூசித்துவந்த லிங்கத்தைச் சதுரகிரி மலையில் பிரதிட்டை செய்து சட்டைமுனிவரோடு வசித்தவராவார். சுந்தரர் ககனக்குளிகைமூலம் விண்வெளிப் பயணத்தில் சிறந்து விளங்கியதைப் போகமுனிவர் தம்பாடலில் சுட்டிக்காட்டியுள்ளார்.

*"நாமேதான் சொன்னபடி குளிகை பூண்டு*

*நலமான கேசரிமேல் சென்ற சித்து*

*போமேதான் வையகத்தில் இருந்துமல்லோ*

*பொங்கமுடன் சமாதிமுகம் சென்றசித்து'*[54]

என்பதன் மூலம் சமாதியில் வீற்றிருந்து, பின்வான்வெளியில் பயணம் மேற்கொண்டு சிவநிலையடைந்தவர் என்பது தெளிவாகிறது.

இவர் சோதிட காவியம், மனையடி சாத்திரம் போன்றவற்றிற்கும், மருத்துவம், இரசவாதம் போன்றவற்றிற்கும் பூசைவிதிகளுக்கும் நூல்கள் இயற்றியவர் ஆவார்.

சுந்தரானந்தர் வைத்தியத்திரட்டு 1500, வகாரம் 200, வாதசூத்திரம் 100, விஷநிவாரணி 100, வாக்கிய சூத்திரம் 66, சுந்தரானந்தர் கேசரி, தீட்சாவிதி, முப்பூ, சிவயோகஞானம், சிவஞானபோதம் ஆகிய நூல்களையும் இயற்றியவர்.

மதுரையம்பதியில் சமாதிகொண்டவர், (மீனாட்சியம்மை திருத்தலத்தில்) இவரது சமாதியுள்ளதாகக் கூறப்படுகிறது.

## தன்வந்திரி

ஆயுள்வேத வைத்தியத்தின் தந்தை என்று போற்றப்படும் தன் வந்திரிமுனிவர் விஷ்ணுவின் அவதாரமாகக் கருதப்படுகிறார். சித்தர்கள் பதினெண்மருமே இவருக்கு உபதேசித்ததாகக் கருத்து நிலவுகிறது.

தேவர்களும் அசுரர்களும் அமுதத்திற்காகத் திருப்பாற் கடலைக் கடைந்தபோது அமுதகலசத்துடன் தோன்றியவர் என்று புராணக் கதையில் கூறப்படுகிறது.

*"மாச்சலென்ற தன்வந்திரி வளப்பங் கூறுவேன்*

*மன்னவனே முற்பிறப்பில் விஷ்ணு வென்பார்*

*பாச்சலுடன் இப்பிறப்பில் தன்வந்திரி தானும்*

*பாலகனே மானிடராய் பிறந்தார் கானே!”*[55]

என்று அகத்தீசர் தம் அகத்தியர் பன்னிரெண்டாயிரத்தில் குறிப்பிடுகிறார்.

தன்வந்திரி முனிவர், வைத்திய சிந்தாமணி 1200, கருக்கிடை 300, வைத்தியகாவியம் 1000, நிகண்டு 300, கலைஞானம் 500, வைத்திய சிந்தாமணிச்சுருக்கம் 73, செயநீர் 50, முப்புசூத்திரம் 48 போன்ற நூல்களை இயற்றியுள்ளார்.

இவர் வைத்தீசுவரன் கோவிலில் சமாதி கொண்டிருப்பதாகக் கூறுவர்.

## யூகிமுனி

யூகிமுனிவர் வீரச்சுண்ணத்தினால் காக்கையை வெள்ளை நிறமாக மாற்றியவர். இவர் வைத்திய சிந்தாமணி, வைத்திய நிகண்டு ஆகிய நூல்களை இயற்றியுள்ளார்.

## உரோமரிசி

உடம்பெல்லாம் உரோமத்துடன் விளங்கியதால் இவர் உரோமரிசி என்று பெயர் பெற்றதாகக் கூறுவர். இவர் வாத வைத்தியத்தில் தேர்ந்த வராகவும், அவ்வாறு உண்மைப் பொருளை அறியாத அறிவிலிகளுக்குக் தம் பாடல் மூலம் கிண்டல் செய்கிறார்.

*“திரட்டினா ருப்புக்கு வெகு நாமங்கள்*

*தேசாதி வழக்கமல்லோ சித்தர் சொன்னார்*

------------------------------

*உருட்டினதே யல்லாமல் நாய்க்குத் தேங்காய்*

*உடைக்கறியு மோவிது தானுவமை அய்யா*

*குருட்டு நாயீசலுக்குத் தாவுகின்ற*

*குணமாச்சு யானைகண்ட குருடர்தானே''*[56]

என்று உரோம குருநூல் சிங்கி (பா.33)மூலம், வாதம் என்கிற வகாரசூத்திரம் அறியாதோரை மேற்கண்டவாறு நையாண்டி செய்கிறார். இவ்வாறு நகைச் சுவையோடும் தக்க உவமைகளோடும் உரோமரிசி வாத வைத்தியங்களைக் கூறியிருக்கிறார்.

**இவர் எழுதிய நூல்கள்,**

உரோமரிசி வைத்தியம் 1000, உரோமரிசி சூத்திரம் 50, அமுதக் கலை ஞானம் 50, பெருநூல் 500, குருநூல் 50, முப்புசூத்திரம் 30, ஜோதி விளக்கம் 27, நாகாரூடம் 114, சிங்கி வைப்பு 100 ஆகியவை இவரது நூல்களாகும்.

இவரது இறுதி நிலைப்பற்றி சரியான முடிவுக்கு வர இயலவில்லை.

**பாம்பாட்டிச்சித்தர்**

திருக்கோகர்ணம் எனும் ஊரில் பிறந்தவர். இவர் 15 ஆம் நூற்றாண்டில் கொங்குநாட்டில் உள்ள மருதமலையில் தவமியற்றியவர். பாண்டிய நாட்டிலிருந்தபோது பாம்புகளைப் பிடித்து விளையாட்டுக் காட்டிக் கொண்டிருந்தவர். ஒருநாள் நாகரத்தினம் எனும் நவரத்தினப் பாம்பைப் பிடிக்கச் சென்றபோது அங்குச் சட்டை முனியைக் கண்டார். அவரின் உபதேசத்தில் சித்தர்நெறியில் நின்று தவம் செய்து, "ஆடுபாம்பே" என விளித்துப் பாடப்பட்ட பாடல்கள் மூலம் ஞானத்தை மக்களுக்கு வழங்கலானார்.

பாம்பு வடிவாக மண்டலித்துள்ள குண்டலினி சத்தியை மேலா தாரத்திற்கு எழுப்பி ஆன்மதரிசனம், பரதரிசனம் செய்யும் முறையை இவரின் பாடல்கள் உணர்த்தும். இவர் செய்த நூல்கள் பாம்பாட்டிச்சித்தர்

பாடல்கள், சித்தராரூடம், வைத்திய நூல்கள் முதலியனவாகும். மருத மலையில் நஞ்சு வைத்திய ஆய்வுக் கூடமே நடத்தியதாகவும் கூறுவர்.

இவரின் சமாதி மருதமலையில் இருப்பதாகக் கூறப்படுறது.

**சித்தர்கள் வாழ்ந்தகாலம்**

சித்தர்கள் பல நூற்றாண்டுகள் வாழ்ந்ததாகக்கூறுவர். தவ யோக முறையில் இயல்பு வாழ்வை வென்று இறப்பற்ற நிலைக்குச் சென்றவர்கள்.

“ஒவ்வொரு சித்தரைப் பற்றியும் தனித்தனியாக அறிந்துணர் வதற்கு அவர்களின் பாடல்களைத் தவிர முழுமையான வரலாறுகளோ அடிப்படைச் செய்திகளோ கிடைக்கவில்லை; அதேபோன்றுதான் அவர்களின் கால எல்லைகளையும் சரியாகக் கணிக்க இயலவில்லை.”[57] என்று தெ. பொ. மீ. கூறுகின்றார்.

சித்தர்கள் அரசர்களைப்பற்றிப் பாட மாட்டார்கள், அவர்கள் மக்களைப் பற்றித்தான் சிந்தித்துப் பாடலாயினர். அவர்களுடைய பாடல்களில் அன்றைய வழக்காறுகள் பதிவாகியுள்ளன. அந்த ஆதாரங்களைக் கொண்டு ஓரளவுக்கு அவர்களின் காலத்தை அறிய முடிகிறது.

தமிழ்ச்சித்தர்களுக்கு வித்திட்ட திருமூலர் 3000 ஆண்டுகள் வாழ்ந்ததாகப் புராணம் கூறும். தஞ்சாவூர் மாவட்டம் திருவாவடுதுறையில் பல ஆண்டுகள் யோகத்தில் ஆழ்ந்து ஆண்டுக்கு ஒருமுறை தவம் கலைந்து மூவாயிரம் பாடல்கள் (திருமந்திரம்) பாடியதாகப் புராணம் கூறுகிறது.

“எண்ணிலி கோடி யுகமிருந்தேனே”[58] என்று திருமூலரும் கூறுவதாகச் சித்தர் வரலாறு கூறுகிறது.

சித்தர்களின் இயல்பும் அவர்களின் காலம் கடந்து பல நூற்றாண்டுகள் வாழும் ஆற்றலும் பெற்றிருந்ததால் அவர்கள் வாழ்ந்த காலம், ஆயுள், போன்றவற்றைப் பற்றி எந்த விதமான ஆதாரக் குறிப்புகளும்

கிடைக்காததால் அவர்களைப்பற்றி முழுமையாக அறிவது இயலாத காரியமாக உள்ளதை அறியமுடிகிறது.

### குருவும் சீடர்களும்

சித்தர்கள் ஓரிடத்தில் பிறந்து மற்றொரு இடத்தில் முக்திபெற்றுச் சமாதி நிலை அடைகின்றனர். ஒரு சித்தரைப் பற்றி அவரே கூறுவதன் மூலமும், அல்லது சீடர்கள் கூறுவதும் இரண்டுக்கும் மாறாக அச்சித்தரின் ஆசிரியரோ அல்லது தோழர்களோ தம்பாடலில் குறிப்பிட்டிருப்பதை வைத்தே ஆதாரமாக எடுத்துக் கொள்ள முடிகிறது.

சீடர் என்பவர் குருவின் நேரடியான மாணவராகவும், அவர்களுக்கு முன் தோன்றிய சித்தர்களின் கருத்துகளை ஏற்று அவரின் மாணவராகவும் இருந்துள்ளனர். குரு சீடர் பரம்பரையில் அகத்தியர், திருமூலர், போகர் முதலியவர்களைக் குறிப்பிடத் தக்கவர்களாகக் கருதப்படுகிறது.

அகத்தியர் பரம்பரையில் தேரையரும், திருமூலர் பரம்பரையில் காலாங்கிநாதரும், கஞ்சமலைசித்தரும் குறிப்பிடத்தகுந்தவர்கள் ஆவார்கள். காலாங்கி நாதரின் மாணவர் போகர் ஆவார். போகர் பரம்பரையில் ஏராளமான மாணவர்கள் உருவாகியுள்ளனர். இவர் மருதமலையில் தங்கியிருந்து, பின்பு பழனிமலையில் தவமியற்றி அம்மலையிலேயே சமாதியும் கொண்டவர். இவருடைய சீடர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் புலிப்பாணிச்சித்தர், கருவூரார், சுந்தரானந்தர், சட்டைமுனி, மச்சமுனி, போன்றோர் ஆவர். கொங்கணவர் பரம்பரையில் இடைக்காட்டுச்சித்தர், கமலமுனி ஆகியோர் அடங்குவர்.

### மக்களிடம் சித்தர்களின் செல்வாக்கு

நாடு விடுதலையடைய சுதந்திரப் போராட்டக் காலத்தில் தோன்றிய புரட்சிகரமான கவிஞர்களைப் போலவே சித்தர்களும் மக்களிடம் எல்லாக் காலத்திலும் செல்வாக்குப் பெற்று இருந்தனர். இதனை,

“நாட்டு மக்களின் சிந்தனையைத் தட்டி எழுப்பக்கூடிய பாடல்களைப் பாடினர், இறைவனுடன் இரண்டறக் கலக்கும் எல்லையிலாப் பேரானந்த நிலைக்கு வழிகாட்டியவர்கள் தமிழ்ச் சித்தர்கள். தாங்கள் கண்ட அனுபவங்களையும், அறிவுரைகளையும், அறநெறிகளையும் யோக, ஞான, உத்திமுறைகளையும் பாடல்களாகப் பாடினர். பாமரர் நெஞ்சங்களில் பதியும் வண்ணம் சுவைபட எளிய தமிழிலே அமைத்துத் தந்தனர். பாடல்களின் இடையில் நுட்பமான தத்துவங்களையும், இருபொருட்படும் சொற்களையும் இலை மறைக்காய்போல் வைத்தனர்”[59] என்று அரு.இராமநாதன் குறிப்பிடுகிறார்.

அக்காலத்தில் சமயங்கள், சாதிகள் போன்றவை மக்கள் இறைவனைக்காணத் தடையாயிருந்தன. இத்தடைகளைக் களைய, கண் மூடித்தனமான கொள்கைகளைச் சாடினர். தெய்வங்களுக்கு உயிர்பலியிடு வதைப் பெரும்பாலாக எதிர்த்தனர். போலித்தனமான சமயவாதிகளைச் சாடினர். மக்களுக்கு உண்மையான கடவுள் கொள்கையை உணர்த்தி, பகுத்தறிவு கொள்கைக்கு வித்திட்டனர். மக்களைச் சுயமாகச் சிந்திக்கச் செயல்படத் தூண்டினர். இறப்பை வெல்லவும், அவர்களுக்கு வருகின்ற நோய்களை நீக்கவும் மருத்துவம் கண்டனர்.

## அறியவருவன

சித்தர் என்னும் சொல்லுக்குப் பல்வேறு தரவுகளைக் கொண்டு விளக்கம் தரப்பட்டது. சித்தர் தோற்றம் பற்றி விளக்கப்பட்டது. சித்தர்களில் வடநாட்டில் தோன்றியவர்களை நவநாத சித்தர் என்றும், தென்னாட்டில் தோன்றியவர்களைப் பதினெண் சித்தர் என்றும் வகைமைப்படுத்தியுள்ளமை அறியபட்டது. சித்தர்களில் குரு சீடர் பரம்பரை, அவர்கள் வாழ்ந்தகாலம், மக்களிடம் பெற்ற செல்வாக்குப் போன்றவற்றை இவ்வியலின் வாயிலாக அறியமுடிகிறது.

## குறிப்புகள்

1. க்ரியாவின் தற்காலத் தமிழ்அகராதி, ப. 574.
2. தமிழ்ப் பேரகராதி, ப. 218.
3. க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப. 192.
4. வானதி திருநாவுக்கரசு (பதி) சித்தர் பாடல்கள், பா. 18.
5. க. இளமதிசானகிராமன், சித்தர்களும் சமூகப்பார்வையும், ப.12.
6. தமிழ்ப் பேரகராதி, ப. 190.
7. க்ரியாவின் தற்காலத் தமிழகராதி, ப. 121.
8. திருமூலர், திருமந்திரம், பா. 1490.
9. பகவத்கீதை, அத்.10–26.
10. மோசஸ் மைக்கேல் பாரடே, தமிழ்ச்சித்தர் பாடல்களும் விவிலியமும், ப. 14.
11. மா. ந. திருஞானசம்பந்தன், சித்தர் ஒரு கண்ணோட்டம், ப. 17.
12. சி. எஸ். முருகேசன், நவநாதச் சித்தர்கள், ப. 114.
13. மேற்படி, ப. 33.
14. மேற்படி, ப. 33.
15. மேற்படி, ப. 118.
16. மேற்படி, ப. 118.
17. எஸ். சிதம்பரதாணுப்பிள்ளை சித்த மருத்துவ அமுது, ப. 16.
18. மேற்படி, ப. 18.
19. எஸ். சிதம்பரதாணுப்பிள்ளை சித்த மருத்துவ அமுது, ப. 17.
20. எஸ். பி. இராமச்சந்திரன், சித்தர்கள் வரலாறு, ப. 203.
21. மேற்படி, ப. 20.
22. மேற்படி, ப. 24.
23. மேற்படி, ப. 33.
24. திருமூலர் – திருமந்திரம் – பாயிரம், 102.

25. இராமச்சந்திரன்.எஸ்.பி., சித்தர்கள் வரலாறு, ப. 47.

26. மேற்படி, ப. 80.

27. மேற்படி, ப. 86.

28. மேற்படி, ப. 86.

29. மேற்படி, ப. 91.

30. மேற்படி, ப. 174.

31. மேற்படி, ப. 174.

32. மேற்படி, ப. 176.

33. மேற்படி, ப. 176.

34. மேற்படி, ப. 117.

35. மேற்படி, ப. 125.

36. மேற்படி, ப. 125.

37. மேற்படி, ப. 246.

38. மேற்படி, ப. 115.

39. மேற்படி, ப. 115.

40. மேற்படி, ப. 116.

41. மேற்படி, ப. 111.

42. சிவவாக்கியம் 1000. தாமரை பதிப்பகம், பா. 638.

43. மேற்படி, பா. 165.

44. மேற்படி, பா. 190.

45. மேற்படி, பா. 490.

46. இராமச்சந்திரன்.எஸ்.பி., சித்தர் வரலாறு, ப. 243.

47. மேற்படி, ப. 244.

48. மேற்படி, ப. 136.

49. மேற்படி, ப. 136.

50. மேற்படி, ப. 35.

51. மேற்படி, ப. 46.

52. மேற்படி, ப. 214.

53. மேற்படி, ப. 214.

54. மேற்படி, ப. 128.

55. மேற்படி, ப. 184.

56. மேற்படி, ப. 263.

57. தெ.பொ.மீ. சித்தர்களைப் பற்றிய கலைக்களஞ்சியம். நான்காம் தொகுதி, ப. 23.

58. இராமச்சந்திரன்.எஸ்.பி., சித்தர்கள் வரலாறு, ப. 26.

59. அரு. இராமநாதன், ஞானக் கோவை என்னும் சித்தர்பாடல்கள், ப.714

# இயல் – 2

# சித்தர்களின் வாழ்வியல் நோக்கு

மனித வாழ்வியலானது இல்லறம், துறவறம் என்ற இருபெரும் பிரிவுகளைக் கொண்டுள்ளன. இல்லறம் என்பது ஒத்த அன்புடைய ஆண், பெண் இருவரும் சேர்ந்து இல்லறம் நடத்தி, குழந்தைச் செல்வங்களைப் பெற்று விருந்தோம்புதல், அறவோர்க்கு அளித்தல், துறவிகளைப் பேணுதல் போன்ற அறப்பணிகளைச் செய்து வாழ்தலைக் குறிக்கும். துறவறம் என்பது உலக வாழ்வியலுக்கான பற்றுக்களைத் துறந்து திருவடிப்பேறு என்னும் பேரின்ப நிலையை அடைதலைக் குறிக்கும். சித்தர்களில் பலர் பெரிதும் துறவற வாழ்க்கையைக் கடைப்பிடித்தனர். அவர்கள் சமுதாயத்தின்மீது அக்கறை கொண்டவர்களாக விளங்கினர். சமுதாயத்தில் சாதி, சமயம், வழிபாடு, சடங்கு முதலிய பண்பாட்டுக் கூறுகள் நிலவுகின்றன. அப்பண்பாட்டுக் கூறுகளில் சில பிற்போக்குத் தனங்களும் காணப்படுகின்றன. அவற்றினைக் களைந்து சாதி, சமயமற்ற சமதர்ம சமுதாயம் உருவாக்குவதற்குச் சித்தர்கள் பெரிதும் பாடுபட்டனர். அதற்காகப் புரட்சிகரமான பல பாடல்களை எழுதினர், அதன்மூலமாக அவர்கள் மக்களுக்கு நல்வழிகாட்டுகின்ற ஆசிரியர்களாகவும், குருவாகவும் விளங்கினர். அவ்வாறான சித்தர்களின் வாழ்வியல் நோக்குப் பற்றி ஆய்வதாக இவ்வியல் அமைகிறது.

### பற்றற்ற வாழ்க்கை வாழ்தல்

மக்கள் பொதுவாக இல்லற வாழ்க்கையை மேற்கொண்டனர். இல்லற வாழ்வு பற்றுகள் அதிகம் கொண்டதாகும், அதனால் சித்தர்கள்

அதனினின்று வேறுபட்டுத் துறவு வாழ்க்கையை மேற்கொண்டனர். அவர்கள் துறவு வாழ்க்கையை மேற்கொண்டதன் நோக்கம் உலக வாழ்வியலின் பற்றுகள் தம்மை ஒட்டிக் கொள்ளக் கூடாது என்று நினைத்தனர்.

*"சேற்றில் திரிபிள்ளைப்பூச்சி சேற்றை நீக்கல்போல்*
*தேகத்தோடு ஒத்துவாழ் வார்கள்"* [1]

என்று கூறுவதன் மூலம் பிள்ளைப் பூச்சியானது சேற்றில் நெளிந்தாலும் அதன்மீது சேறு ஒட்டிக் கொள்வதில்லை. அதைப்போலச் சித்தர்கள் மக்களோடு சேர்ந்து வாழ்ந்தாலும் உலக மக்களுக்கான பற்றுகள் அவர்கள் மீது ஒட்டாதவாறு வாழ்ந்தனர் என்பதை அறிய முடிகிறது.

## தன்னைத் தானறிதல்

சித்தர்கள் தன்னைத் தானறிவதற்குத் தன்னுள் வினாக்களை எழுப்பிக் கொண்டனர். "அவற்றினை ஆத்மவிசாரம், ஆத்ம ஞானம், சுயவழிகாட்டல் என்றவாறு வகைப்படுத்தியுள்ளனர். ஆத்மவிசாரம் என்பது தனக்குள் விசாரனை செய்வதாகும். ஆத்ம ஞானம் என்பது தன்னுணர் வினாக்கள் எழுவதாகும், சுயவழிகாட்டல் என்பது தனக்குள்ளே விளக்கம் காண்பதாகும். மேற்கூறிய இப்பண்புகள் ஆளுமை வளர்ச்சிக்கு அடித்தளம் அமைக்கும். இந்த மூவகையான பண்புகளைக் கொண்டு இறைவனைப் புறத்தில் தேடாமல் தனக்குள்ளேயே தேடிக் கண்டுகளித்தவர்கள் சித்தர்கள்"[2] என்று மா.கி. இரமணன் கூறுகிறார்.

## குற்றங்களை நீக்குதல்

மனித வாழ்வு என்பது எவ்விதக் கட்டுப்பாடுகளுக்குள்ளும் அடங்காத ஒன்று ஆகும். இதனை நன்குணர்ந்த சைவத்துறவிகளும், சமணத் துறவிகளும், சித்தர்களும் தனிமனிதக் கட்டுப்பாட்டையும்,

ஒழுக்கத்தினையும் மேலாகக் கருதினர். உயிரைவிட மேலாக ஒழுக்கத்தினை வள்ளுவர் வலியுறுத்துகிறார். இதனைத் தன் அனுபவத்தில் உணர்ந்த ஞானிகளாகிய சித்தர்கள் இக்கொள்கைகளை மக்கள் பின்பற்றும் வண்ணம் எடுத்துரைத்தனர்.

மனித உடல் பிணி, மூப்பு, மரணம் போன்றவற்றால் அழியக் கூடியது. உடல் அழியினும் உயிராகிய ஆன்மாவுக்கு அழிவில்லை என்று எல்லா மக்களாலும் நம்பப்படுகிறது. மனிதன் வாழ்ந்த காலத்தில் செய்த பாவ புண்ணியங்களுக்குச் சாட்சியாக ஆன்மா திகழ்கிறது. பாவச் செயல்களைத் தான் 'குற்றம்' என்ற பெயரில் சித்தர்கள் அழைக்கின்றனர். குற்றம் என்ற சொல்லுக்கு ஊழ், கர்மவினை, பழவினை முதலிய பெயர்கள் வழங்கப்படுகின்றன. குற்றங்கள் நீங்கியவர்கள் இவ்வுலகத்தில் அனைத்தையும் அறிய முடியும் என்பதைச் சித்தர்கள் அறிந்துள்ளனர். அவர்கள் பஞ்சபூதத் தத்துவங்களைத் தன் கட்டுப்பாட்டுக்குக் கொண்டு வருதல், இறைவனைக் காணுதல் போன்ற செயல்களைச் செய்தனர். திருமூலர் பின்வரும் பாடலடியில் குற்றங்கள் நீங்கிய தன்உடலில் இறைவன் இருக்கிறான் என்று குறிப்பிடுகிறார்.

*"உடம்பினை முன்னம் இழுக்கென்றிருந்தேன்*
*உடம்புளே உத்தமன் கோயில் கொண்டான்"*[3]

என்பதன் மூலம் அறியமுடிகிறது.

## தெய்வத்தைக் காணுதல்

ஆதிகாலத்து மக்கள் இயற்கையோடு இயற்கையாய் வாழ்ந்தனர். இயற்கையின் சீற்றங்களால் பூமியில் பல்வேறு மாற்றங்களும், சிதைவுகளும் ஏற்பட்டன. குறிப்பாக நிலநடுக்கம் ஏற்படுதல், வெள்ளம் வருதல், மலைகள் சரிதல் போன்ற பல்வேறு நிகழ்வுகளின் காரணமாக இயற்கையை எதிர்த்துப் போராட முடியாமல் மக்கள் திணறினார்கள்.

இயற்கையோடு மட்டுமல்லாது கொடிய விலங்குகள், நச்சுத்தன்மை கொண்ட பூச்சிகள், பாம்புகள் முதலியவற்றினால் பெரும் தொல்லை களுக்கும் உயிரை இழக்கும் பரிதாப நிலைக்கும் தள்ளப்பட்டனர். இதற்கெல்லாம் ஒரு சக்தி இருப்பதாக மக்கள் நம்பினார்கள். இதன் விளைவாக சூரியன், சந்திரன், நாகம், பசு முதலியவற்றைத் தெய்வ சக்திகளாக வணங்கினர். சிங்கம், புலி, யானை, காளை, யாளி முதலியவற்றைத் தெய்வத்தின் ஊர்திகளாக அமைத்தனர். இவ்வழிபாட்டின் வளர்ச்சியாகச் சிலைவழிபாடு மலர்ந்தது. இவ்வாறான காலகட்டத்தில் எதில் தெய்வம் இருக்கிறது? எங்கு உள்ளது? என்று தன்னுள்ளே வினா எழுப்பி எந்த முடிவுக்கும் வரஇயலாமல் மக்கள் தவித்தனர். மக்கள் நாகரிகம் அடைந்து பல நூற்றாண்டுகளுக்குப் பிறகும் கூட பழமையான மூட நம்பிக்கைகளும், பழக்கவழக்கங்களும் அவர்களைத் தொடர்ந்த வண்ணம் இருந்தன. பக்திக்கு இழுத்துச் செல்லும் விதமாக உள்ள சமயங்களும், மதங்களும் தெய்வம் எங்கே இருக்கிறது என்ற சரியான பதிலைக் கூறவில்லை. அக்காலக் கட்டத்தில்தான் சித்தர்கள் மக்களின் முன் தோன்றினார்கள். தெய்வத்தைக் காண எங்கும் அலைய வேண்டாம் என்றும், தெய்வம் தன்னுள்ளேயே இருக்கிறது என்றும் அறிவுறுத்தினார்கள்.

*"உள்ளமே பெருங்கோயில் ஊனுடம்பே ஆலயம்"*[4]

என்னும் திருமூலர் பாடலடி தெய்வமானது இருக்குமிடமாக உடம்பையே குறிப்பிடுகிறது. இக்கருத்தின் மூலம் தெய்வத்தைப் புறத்தில் தேடாமல் அகத்தில் தேடுவதற்குத் திருமூலர் வித்திட்டார்.

மேலும்,

*"ஆடுகின்ற எம்பிரானை அங்குமிங்கும் என்றுநீர்*
*தேடுகின்ற பாவிகாள் தெளிந்த தொன்றை ஓர்கிலீர்*
---------------------------------
*நாடி ஓடி உம்முளே நயந்துணர்ந்துப் பாருமே!"*[5]

எனும் சிவவாக்கியர் பாடலின் மூலமும் தெய்வம் புறத்திலில்லை என்பது உறுதியாகிறது.

### வேத சாத்திரங்களை அறிந்து கொள்ளுதல்

வேத, சாத்திரங்கள் என்பது அனைத்து மதப் பிரிவுகளுக்கும் தனித்தனியே உண்டெனினும் குறிப்பாக இந்து மதத்தில் வேதங்கள் புனித நூலாகவும், வாழ்வின் வழிகாட்டியாகவும் திகழ்கிறது. இச்சாத்திரங்களில் சமய வாழ்வியலுக்கான மரபுகளும் மந்திர, தந்திரக் கொள்கைகளும் வலியுறுத்தப்படுகிறது. இதற்குச் சான்றாகப் போகர் தம்பாடலடியில்,

*"கேளப்பா வேதாந்த சாத்திரமே செம்மை*
*கேள்வியற்ற சமயமெல்லாம் பொய் என்று தள்ளி"*[6]

என்று கூறுவதால் வேத, சாத்திரங்கள் கொண்ட சமயமே உண்மையான சமயமென்றும் மற்றவை பொய்யான சமயம் என்றும் சுட்டுகிறார். இதன் வாயிலாகச் சித்தர்களும் ஆகம வேதங்களை வரவேற்பது தெள்ளத் தெளிவாகிறது.

### உருவவழிபாட்டைத் தூற்றுதல் - போற்றுதல்

உருவ வழிபாடு என்பதற்குக் "கடவுளுக்கு வடிவம் அமைத்து வழிபடும் முறை"[7] என க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி விளக்கம் தருகிறது. ஆதி மனிதர்கள் மட்டுமின்றிப் பிற்காலத்து மக்களும் உருவவழிபாட்டை மேற்கொள்கின்றனர். தொடக்க காலத்தில் மக்கள் இறந்தவர்களைப் போற்றும் முகத்தான் அவர்களின் உருவத்தை ஓவியமாகவோ அல்லது சிலைகளாகவோ! அவர்களைப் புதைத்த இடத்தில் வைத்து வணங்கப் பட்டனர். அது இன்றளவும் நீடித்துவருகிறது. குறிப்பாக ஊரின் தலைவன் அல்லது போர்வீரன் ஆகியவர்கள் இறந்தபின் புதைத்து அவ்விடத்தில் கல்நட்டு வழிபாடு செய்தனர். இதனை நடுகல்

வழிபாடு என்பர். இந்நடுகல் வழிபாடு தெய்வ வழிபாட்டுக்கு அடிப்படையாக அமைந்தது. இதன் வளர்ச்சியாகச் சிறுதெய்வம், பெருந்தெய்வம் என வகைப்படுத்தப்பட்டது. அத்தெய்வங்களுக்குப் பல்வேறு புராணக் கதைகள் கூறிப் பல உருவங்கள் கொடுக்கப்பட்டது. அவ்வுருவங்களுக்குப் பூசைசெய்தல், பலியிடுதல் போன்ற சடங்குகள் நடத்தப்பட்டு வந்தன. அச்சிலைகளில் தெய்வம் உறைந்திருப்பதாக மக்கள் நம்பினர். மேலும் மக்கள் அத்தெய்வத்தின்மீது அருள்வந்து சாமிஆடினர். இதை அவர்கள் ‘குறி’ என்றும் தெய்வத்தின் குரல் என்றும் நம்பினர். இதனைச் சித்தர்கள் எள்ளி நகையாடினர். அவர்கள் அத்தெய்வத்திற்குப் பொருள்கள் மற்றும் உயிர்களைக் காணிக்கை செலுத்துவதைப் போலித் தனமான பக்தி என்றும், மக்களை ஏமாற்றும் செயல் என்றும் கருதினர். சில சமயங்களில் இச்செயல்களைக் கண்டு எதிர்க்கவும் துணிந்தனர். பாம்பாட்டிச் சித்தர் கற்சிலையில் உணர்ச்சி உண்டா? என்று வினா எழுப்புகிறார்.

*“உளியிட்ட கற்சிலையில் உண்டோ உணர்ச்சி”*[8]

என்னும் பாடலடியின்மூலம் கற்சிலையில் அருள் உணர்வு கிட்டாது என்பதை விளக்குகிறார். ஆதலால் மனத்தை ஒரு நிலைப்படுத்தித் தியானத்தின் மூலம் இறைவனைக் காணலாம் என்பதே சித்தர்களின் நோக்கமாக இருப்பதை அறிய முடிகிறது.

சித்தர்களில் பெரும்பாலானவர்கள் சமய சடங்குகளில் நம்பிக்கையுடையவர்களாக இருந்துள்ளனர் என்பதை அவர்களது பாடல்கள் எடுத்துரைக்கின்றன. அவர்கள் இறைவனைத் தனக்குள் கண்டனர்; அவர்கள் அகத்தில் கண்ட காட்சியைப் புறத்தில் கோயில்களாகவும் சிலைகளாகவும் அமைத்தனர். அதற்கு ஆகம விதிகளையும், பூசை முறைகளையும், மந்திர முறைகளையும் ஏற்படுத்தினர். மேலும் வசிய முறைகளையும் கூறினர். சித்தர்கள் மனித சமுதாயத்தை

விட்டு காடு, மலை, எனத் தள்ளிப் போனாலும் மீண்டும் சமுதாய அமைப்புக்குள் வந்து பல்வேறு சடங்குகள் மற்றும் மந்திர முறைகளையும் மக்களுக்குக் கூறினர்.

சித்தர்களில் பலர் சிவனை வழிபட்டனர். ஒருசிலர் சக்தி வழிபாடான 'வாலை' என்னும் பெண்தெய்வத்தை வழிபட்டனர். கொல்லிமலைப் பகுதியில் வாழ்ந்த சித்தர்கள் தங்கள் தவத்திற்குத் தீயசக்திகள் மூலம் இடையூறு நேராவண்ணம் "கொல்லிப்பாவை"[9] எனும் பெண் தெய்வத்தை வணங்கியதாகக் கொல்லிமலை இரகசியம் என்னும் நூல் தெரிவிக்கின்றது. இன்றும் கொல்லி மலையில் கொல்லிப்பாவை வழிபாடு நடைபெற்று வருவதை அறியமுடிகிறது.

பெண்தெய்வ வழிபாட்டுக்குச் சான்றாகக் கருவூர்சித்தர்,

*"தானென்ற வாலையிவள் ரூபங்காணச்*
*சமர்த்துண்டோ ஆண்பிள்ளைத் தாணுமுண்டோ?*
*பானென்ற வாமத்துக்குள்ளே யப்பா*
*பராபரையாள் பலகோடி விதமு மாடி"*[10]

என்று கருவூரார் பாடல்வரிகள் பெண்தெய்வ வழிபாட்டால் கிடைக்கும் நன்மைகளை எடுத்துக் கூறுவது குறிப்பிடத்தக்கதாகும்.

கொங்கணவச்சித்தர் 'வாலை' தெய்வத்தை வழிபட்டதாகப் பின்வருமாறு பாடலடியில் குறிப்பிடுகிறார்.

*"வாலையைப் பூசிக்க சித்தரானார் வாலைக்*
*கொத்தாசை யாய்ச்சிவ கர்த்தரானார்"*[11]

என்பதன் மூலம் வாலையாகிய சிவசக்தியைப் பூசிப்பதன் மூலம் சித்தரானதை வெளிப்படையாய் விளக்குகிறார். மேலும் கருவூர்சித்தர் தமது பூசைவிதிப் பாடலில் ஆலய அமைப்பு முறையையும் அதில் பற்பல தெய்வங்கள் சூழ்ந்திருப்பதைப் பற்றியும் சுட்டிக் காட்டுகிறார்.

*"வாழ்ந்திருக்கும் ஈசானன் வடுகன் வீரன்*

*வாகான தென்புறத்தில் தெட்சணா மூர்த்தி*

*ஆழ்ந்திருக்கும் குடதிசையி லைங்கரனும் குகனும்*

*அட்டசத்தி அட்டகெசம் அட்டபாலர்*

*தாழ்ந்திருக்கும் வடபுறத்தில் கணங்கள் காளி"*[12]

என்று கூறுவதன் மூலம் ஆலயத்தில் அமையப் பெற வேண்டிய தெய்வங்களின் பெயர்களையும் குறிப்பிடுகின்றார்.

**எண்வகைச் சக்திகள் மனிதகுணங்கள் பற்றிக் கூறுதல்**

கருவூர்சித்தர் காளிக்குக் கோயில் அமைக்குமிடத்தில் எண்வகையான சக்திகளைப் பற்றிக் கூறுகின்றார். எண்வகை சக்திகளாக முறையே யோகேஸ்வரி, மகேஸ்வரி, வைஷ்ணவி, பிராமணி, கௌமாரி, இந்திராணி, சாமுண்டி, வராகி போன்றவை ஆகும். இந்த எட்டுவகையான சக்திகளுக்கும் ஒவ்வொரு குணம் உண்டு. அந்தக் குணங்கள் முறையே காமம், குரோதம், உலோபம், மடம், மோகம், மாச்சரியம், பைசாசம், அசூயை ஆகும். இந்தக் குணங்கள் மனிதனின் தீயகுணங்களோடு ஒப்பிட்டுக் கூறப்படுகிறது. இந்த மேற்சொன்ன தெய்வங்களைத் தன்வசப் படுத்துவதற்கு மந்திரங்கள், பூசைகள் வசியமுறைகள், செய்யப்பட்டதை கருவூர்சித்தர் பின்வரும் பாடல்களில் குறிப்பிடுகிறார்.

*"பாரப்பா வெண்குன்றி மூலம் வாங்க*

*பாங்கான அமாவாசை பூசை செய்து*

*நேரப்பா மந்திரந்தான் வம்மம் வசவிச*

*நிறை மிருக வசீகரி ஓமென்று போற்றி*

---------------------------------------

*விஞ்சே என்வொரு வெள்ளி காப்புக்கட்டி*

*வீராக மறுவெள்ளி வாங்கும் போது*

*அஞ்சாதே ஓங்கிலீயுஞ் சவ்வு மஹீ*

*அட்சரத்தை யோதியே குளிசமாடி*" [13]

எனவும்,

"_______________________________

*நிச்சயமாய் தேவி வந்து தெரிசிப்பாளே*"

என்றும் பாடல் வரிகள் தெரிவிக்கின்றன.

இவ்வாறு தெய்வங்களை வசியம் செய்ய தச தீட்சை என்னும் பத்து விதமான உபதேச மொழிகளையும் கருவூரார் கூறியுள்ளார்.

இவ்வாறெல்லாம் பூசை, மந்திரம், நிகழ்த்துவதால் மனமடங்குதல், தீய சக்திகள் விலகுதல், மனம் ஒரு நிலைப்படுதல் ஆகியவை ஏற்பட்டுத் தவமியற்ற உதவிபுரியும் என்பது கருவூராரின் நம்பிக்கையாகத் தெரிய வருகிறது.

**சடங்குகளைச் சாடுதல்**

சித்தர்கள் சிலர் தெய்வங்களுக்குச் சடங்குகள் செய்வதை எதிர்த்தனர். அவற்றில் குறிப்பிடத் தகுந்தவர்களாகச் சிவவாக்கியர், பாம்பாட்டிச்சித்தர் போன்றவர்களைக் கூறப்படுகிறது. தெய்வத்திற்குச் சடங்குகள், பூசை செய்தல், வேள்வி செய்தல், வசியம் செய்தல், மந்திரம் சொல்லுதல் போன்றவை தனக்குள் இருக்கின்ற பிரம்மத்தைக் காண இயலாது போய்விடும் என்பது சில சித்தர்களின் கருத்தாகும். காகபுசுண்டர் என்னும் சித்தர் சடங்குகளைக் கண்டு சமுசார வியாபாரம் என்று குறிப்பிடுகிறார்.

"*வாறான தெய்வமென்றும் பூதமென்றும்*

*வையத்தில் வானமென்றும் பூமியென்றும்*

_______________________________

*வீராகத் திரியாமல் மவுனம் பார்த்து*

*வெற்றிபெற இன்னமுந்தான் உரைக்கக்கேளே!*

*-------------------------------*

*காட்டிலென்ன நாட்டிலென்ன மவுனங்கண்டால்*

*காமதேனு கற்பகமும் உனக்கேசித்தி''*[14]

என்று கூறும் பாடலால் சடங்குகளில் ஈடுபட்டு நேரத்தை வீணடிக்காமல் தன்னுள் இருக்கும் இறைவனைத் தேடச் சொல்கிறார். அதோடு சித்தி நிலையும் கிடைக்கும் என்பதை உணர்த்துகிறார். காகபுசுண்டர் சித்தரைப்போலச் சிவவாக்கியரும், இறைவன் உன்னுள்ளில் இருக்கும் போது வாயினால் மந்திரங்களை உச்சரிப்பதனால் ஒரு பயனும் இல்லை என்று சடங்குகள் செய்பவரைச் சாடுகிறார்.

*''கோயிலும் மனத்துளே குளங்களும் மனத்துளே*

*-------------------------------*

*''கோயில் பள்ளி ஏதடா? குறித்து நிற்றல் ஏதடா?*

*வாயினால் தொழுது நின்ற மந்திரங்கள் ஏதடா?''*[15]

என்று கூறுவதன் மூலம் அறிய முடிகின்றது.

பூசாரிகள் தெய்வ வழிபாடு நிகழ்த்துமிடத்தில் யாகம் செய்தல், உயிர்களைப் பலியிடுதல் போன்றவற்றை நிகழ்த்துகின்றனர். இவ்வாறு செய்வதால் தெய்வம் மகிழ்ந்து அருளைப் பொழியும் என்ற நம்பிக்கை மக்களை ஏமாற்றுவதாகும். போலித்தனமானதும் ஆகும். அவ்வாறு செய்வதைச் சித்தர்கள் பலர் எதிர்குரல் கொடுத்துள்ளனர்

*''சாவதான தத்துவச் சடங்கு செய்யும் ஊமைகாள்*

*தேவர் கல்லும் ஆவரோ? சிரிப்பதன்றி என்செய்வேன்''*[16]

என்று சடங்குகள் செய்பவரின் செயலைக் கண்டு சிவவாக்கியர் நகைப்பது தெரியவருகிறது.

## பூசாரிகளைச் சாடுதல்

தெய்வங்களுக்கு வழிபாடு செய்பவர்கள் பூசாரிகள் அல்லது குருக்கள் எனப்பட்டனர். இவர்கள் நாள்தோறும் தெய்வங்களுக்குப் பூசை செய்து மந்திரம் சொல்லி மக்களை ஏமாற்றிப் பொருள் பறித்தனர். இந்த நிலை கண்டு சித்தர்கள் மனம் வெதும்பினர்

*"சட்டையிட்டு மணிதுலங்கும் சாத்திரச் சழக்கரே!*
*பொத்தகத்தை மெத்தவைத்து போதம் ஓதும் பொய்யரே!*
*நிட்டை ஏது? ஞானம் ஏது? நீரிருந்த அட்சரப்*
*பட்டை ஏது? சொல்லுவீர் பாதகக் கபடரே!"*[17]

என்னும் சிவவாக்கியர் பாடலின் மூலம் போலித்தனங்களையும் பொய்யான பூசாரிகளையும் வன்மையாகக் கண்டிப்பதை அறிய முடிகிறது.

## சாதிபேதங்களைச் சாடுதல்

மனிதன் நாகரிகமடைந்தான். அதன்பின் உணவுக்காக வேளாண்மை உற்பத்தியில் ஈடுபட்டான். இதன் விளைவாகச் சமூகத்தில் சாதிகள் தோற்றம் பெறத் தொடங்கியது. சாதிகளின் தோற்றத்தினால் சமூகத்தில் ஏற்றத் தாழ்வுகள், பிரிவினைகள் உண்டாயிற்று; இது குறிப்பாகத் தமிழக வரலாற்றில் சோழர்காலத்திற்குப்பின் சாதிகள் அதிகளவு உருவாகி கொடுமைகள் நிகழ்ந்தன. இந்நிகழ்வு தொழில் செய்யும் இடங்களில் மட்டுமின்றி இறைவழிபாடு செய்கின்ற இடங்களிலும் நடந்தன. இதனைச் சமயவாதிகள் கண்டு கொள்ளாமல் இருந்துவிட்ட காரணத்தினால் சித்தர்கள் இறைவனை வழிபட, சாதிகள் ஏதும் தடையில்லை என்று தங்கள் பாடல்கள் மூலம் எதிர்ப்புத் தெரிவித்ததை அறிய முடிகிறது. இங்கே சிவ வாக்கியச் சித்தர் பாடலில்,

*"சாதியாவது ஏதடா? சலந்திரண்ட நீரெலாம்*
*பூதவாசல் ஒன்றலோ? பூதமைந்தும் ஒன்றலோ?*

*காதில்வாளி வாரைகம்பி பாடகம் பொன் ஒன்றலோ?*

*சாதிபேதம் ஓதுகின்ற தன்மை என்ன தன்மையே''*[18]

என்று கூறுவதன் மூலம் பஞ்சபூதத்தினால் ஆன உடம்பினுள் சாதி ஏது எனவும் நகை வடிவங்கள் வேறாயினும் அது பொன்னால் செய்யப்பட்டது தான் என்பதையும், சாதிபேதம் பார்ப்பதையும், கொடுமைகள் நடப்பதையும் கண்டு வேதனையடைவது தெரிகிறது. ஔவையாரும் 'சாதி இரண்டொழிய வேறில்லை' எனவும் இட்டாரைப் பெரியோராகவும் இடாதாரை இழிகுலத்தோராகவும் சுட்டிக் காட்டுகிறார். பாம்பாட்டிச் சித்தர் பாடலடியில் ''சாதிப் பிரிவினிலே தீமூட்டுவோம்''[19] என்பதன் மூலம் மனம் கொதித்தெழுவதும், வேதனையடைவதும் தெரிகிறது.

**சமயங்களைச் சாடுதல்**

தமிழகத்தில் சமணம்,பௌத்தம், சைவம், வைணம், ஆகிய சமயங்கள் தழைத்தோங்கியிருந்தன. இதனால் சமூகத்தில் சமயச் சண்டைகள் பெருகிற்று. இதன் காரணமாகச் சித்தர்கள் யாவரும் சமயத்தை எதிர்த்தனர்.

*''சமய பேதம் பலவான சாதிபேதங்கள்*

*சகத்தோர்க்கே யில்லாது சாதுக்களுக்கோ?''*[20]

என்று பாம்பாட்டிச் சித்தர் சமயபேதங்கள் எல்லாம் உலகியல் மாந்தர்களுக்கின்றிச் சாதுக்களுக்கும், துறவிகளுக்கும் இல்லை என்று கூறுவதன் மூலம் சாதிப்பிரிவுகள் சித்தர்கள் போன்ற சாதுக்களுக்கு இல்லை என்பது தெரிகிறது.

**பேராசையை வெறுத்தல்**

மனித வாழ்வில் ஆசைபடுவதில் ஒன்றும் தவறில்லை. ஆனால் அவன் சக்திக்கும் தேவைக்கும் ஏற்ப இருக்கவேண்டும். ஆற்றலுக்கு

மீறிய ஆசைதான் பேராசையாக உருவெடுக்கிறது. 'ஆசையே துன்பத்திற்குக் காரணம்' என்று புத்தர் பெருமான் கூறுகிறார். பேராசைக்கு ஒருவன் ஆட்பட்டுக் கொண்டானாகில் களவு, பொய், வஞ்சம், தீமைகள் போன்றவற்றைப் பழகிக் கொண்டு சமூகத்திற்குத் தீங்கிழைப்பான். நீதியை விட்டு அநீதிக்கு ஆளாவான். ஒழுக்கம் கெட்டு அவனது வாழ்வு அழிவை நோக்கிச் செல்லும். ஆதலால் சித்தர்கள் பேராசை கூடாதெனவும், இருப்பதைக் கொண்டு இனிது வாழவும் வழி கூறியதோடு தாமும் எளிமையாக வாழ்ந்து காட்டினார்கள்.

*"மூவாசை விட்டோம் என்றே தும்பீபற—பர*
*முத்திநிலை சித்தியென்றே தும்பீபற!*
*தேவாசை வைத்தோம் என்று தும்பீபற!"* [21]

என்னும் இடைக்காட்டுச் சித்தர் பாடலடியில் மண், பெண், பொன் ஆகியவற்றின் மீதிருக்கும் பற்றுக்களையும், ஆசைகளையும் விட்டுத் தெய்வத்தின்மீது பக்திகொள்ள வலியுறுத்துகிறது.

**பெண்களைப் போற்றுதல்**

சித்தர்கள் துறவு வாழ்க்கையை மேற்கொண்டதால் பெண்களை அடியோடு வெறுத்தொதுக்கவில்லை. அவர்களுடைய தவவாழ்வுக்குப் பெண்ணாசை தடையாக இருந்தது. ஆதலால் பெண்ணாசையை ஒழித்தார்கள். பெண்களை வெறுக்காமல் பெண்மையைப் போற்றினார்கள்

*"மண்ணில் நல்லவண்ணம் வாழலாம்*
*பெண்ணின் நல்லாளொடும் பெருந்தகை யிருந்ததே!"* [22]

என்று ஞானசம்பந்தர் பெண்களைப் புறந்தள்ளி பூமியில் வாழ்வது அரிது எனக் கூறுகிறார்.

துறவை நாடிய பட்டினத்து அடிகளுக்குத் தாயின் பிரிவைத் தாங்க முடியவில்லை. முற்றும் துறந்து பற்றற்ற நிலையிலும் தாயின் மறைவைத் தாங்கிக்கொள்ள இயலாதவராய் இருந்தார்.

*"முந்தித் தவம்கிடந்து முன்னூறு நாள் சுமந்தே*
*அந்திப் பகலாய்ச் சிவனை ஆதரித்து – தொந்தி*
*சரியச் சுமந்து பெற்ற தாயார் தமக்கோ*
*எரியத் தழல் மூட்டுவேன்"*[23]

என்று வேதனையடைவது, அவருடைய தாயன்பை வெளிப்படுத்துகின்றது

சித்தர்கள் பெண்களைத் தெய்வமாக மதித்தனர். குடும்ப மகளிரைப் போற்றினர். ஒழுக்க நெறி தவறிய பெண்களை வேசி என்று வெதும்பினர். பெண்ணாசை வந்துவிட்டால் தவத்திற்குத் தடையேற்படும் என்று நினைத்தனர்.

*"பொண்ணாசையைக் கொண்டு பேணித் திரிந்தக்கால்*
*விண்ணாசை வைக்க விதியிலையே கல்மனமே!"*[24]

என்று பெண்ணாசையை விடுப்பதைத் தன் நெஞ்சோடு பேசுவதாகப் பட்டினத்தடிகள் பாடல் உணர்த்துகிறது.

பெண்ணாசையினால் காமங் கொண்டு திரியும் காமுகர்களைத் தெளிவு படுத்துவதற்காகப் பட்டினத்தடிகள் கீழ்காணும் பாடலிலும் குறிப்பிடுகிறார்.

*"தருக்கிய காமுகர் சாரும் படுகுழி*
*செருக்கிய காமுகர் சேருஞ் சிறுகுழி*
*பெண்ணும் ஆணும் பிறக்கும் பெருவழி*
*மலம் சொரிந்து இழியும் வாயிற்கு அருகே*
--------------------------------
*இத்தை நீங்கள் இனிது என வேண்டா"*[25]

என்று கூறுவதன் மூலம் காமமாகிய சிற்றின்பத்தை நீங்கினால் பேரின்ப மாகிய இறைவன் திருவடியை அடையலாம் என்பது விளங்குகிறது.

மேலும் சமூகத்தில் ஒருசில ஆண்கள் பெண்களை அடிமை போல் நடத்தினர். ஆண்களால் கொடுமை படுத்தப்பட்ட பெண்ணினத்திற்கு ஆதரவுக் குரல் கொடுத்த சித்தர்களும் இருந்தனர். அவர்கள் பெண்கள் ஞான நிலையடைவதற்கும், கோயில்கள் மற்றும் ஆன்மிக வேத பாடல்களைப் படிப்பதற்கும், சமநிலை ஏற்படுவதற்கும் உறுதுணையாக இருந்தனர். மேலும் இறைவனாகிய சிவபெருமானை ''மாதொருபாகன்''[26] என்று கூறி ஆணும் பெண்ணுமாக இறைவன் சரிநிலையில் உறைவதை மக்களுக்கு உணர்த்தினர். மேற்கூறியவற்றிலிருந்து பெண்களைச் சித்தர்கள் ஒருபோதும் வெறுக்கவில்லை என்பது தெளிவாகிறது.

## நிலையாமையை வலியுறுத்தல்

பட்டினத்தடிகள் நிலையாமை தத்துவத்தை உணர்த்திடப் பாடிய, ''காதற்ற ஊசியும் வாராது காணும் கடைவழிக்கே''[27]என்பது இவ்வுலகத்தில் எதுவும் நிலையில்லை என்பதை உணர்த்துகிறது.

இவ்வுலகத்தில் தோன்றிய அனைத்துப் பொருட்களும் என்றாவது ஒருநாள் அழியக்கூடியது அதனைப் பற்றித் திருமந்திரத்தில் கூறியுள்ள கருத்துகள் கீழ்வருமாறு, உடல் நிலையாமை, செல்வம் நிலையாமை, இளமை நிலையாமை, உயிர் நிலையாமை, என்பனவாகும். மேற்கண்ட அனைத்துப் பொருள்களும் சிறிது நாட்களுக்குப் பிறகு அழியக் கூடியதாகும். மனிதனானவன் பெண்சுகம், மண்சுகம், பொன், பொருள் சுகத்திற்காக நெறியில் நின்று பொருள் தேடுவதை விடுவான், தவறான தீய வழிகளில் பொருள் சேர்ப்பான். அதிகாரம் செலுத்துவான். பிறஉயிர்களைத் துன்புறுத்துவான். இவ்வாறான அவல நிலையை எண்ணி சித்தர்களும், புலவர்களும் மனம் நொந்தனர். தீய வழிகளில் ஈட்டிய

பொருள் அவனது அழிவுக்குப் பிறகு ஒரு பயனையும் ஏற்படுத்தப் போவதில்லை என்பதைப் பாடல்கள் வாயிலாக ஞானிகள் உணர்த்தினர்.

*“பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்து வைக்கும்*
*கேடுகெட்ட மானிடரே கேளுங்கள் – கூடுவிட்டு*
*ஆவிதான் போயினபின் யாரே அனுபவிப்பார்.*
*பாவிகள் அந்தப் பணம்”*[28]

என்று நிலையாமையை ஔவையார்பாடல் குறிப்பிடுகிறது.

பட்டினத்தடிகள் மனித உடலானது முதுமை எய்திவிட்டால் தாய் கூடத்தொடத் தயங்குவாள் என்கிறார்.

*“சடக்கே கருவி தளர்ந்து விட்டால் பெற்ற தாயுந் தொடாத*
*தொடக்கே உமைச்சுமந்தேன் நின்னின் ஏது சுகமெனக்கே!”*[29]

என்னும் பாடலடியில் இளமையாய் இருக்கும் வரைக்கும் எல்லோரும் அருகில் இருப்பர். முதுமை வந்த பின்பு யாவரும் அருகில் வர விரும்ப மாட்டார் என்பது தெளிவாகிறது. திருமந்திரப்பாடல் யாக்கை நிலையாமைப் பற்றிக் கீழ்வருமாறு கூறுகிறது.

*“பண்டம் பெய்கூரை பழகி விழுந்தக்கால்*
*உண்ட அப்பெண்டிரும் மக்களும் பின்செலார்*
*கொண்ட விரதமும் ஞானமும் அல்லது*
*மண்டி அவருடன் வழிநட வாதே!”*[30]

என்பதன் மூலம் ஒருவன் இளமையொழிந்து முதுமை அடைந்தால் அவன் மரணமுறும் தருவாயில் இளமையில் அவனோடு உண்டு களித்து வாழ்ந்த மனைவியும், மக்களும் அவன்பின் செல்லமாட்டார்கள். மாறாக அவன் செய்த நன்மையும், தீமையும் மட்டும் உடன் செல்லக் கூடியதாக, திருமந்திர கருத்தின் மூலம் தெளிவாகிறது.

பட்டினத்தடிகளும், ''வீடுவரைஉறவு, வீதிவரை மனைவி, காடுவரை பிள்ளை இறுதிவரையில் யார் வருவார்கள் என்கிறார். மேலும் ஊரும் சதமல்ல! உற்றார் சதமல்ல! செல்வம் சதமல்ல! யாரும் சதமல்ல! எனும் பாடலடி நிலையாமைக் கருத்தினை உணர்த்துகிறார்.''[31]

மேற்கூறியவற்றிலிருந்து சித்தர்கள் நிலையாமையின் உண்மை நிலையை மக்களுக்கு எடுத்துக் கூறியுள்ளதை அறியமுடிகிறது.

## உயிர்களிடம் அன்பு காட்டுதல்

ஆதி மனிதன் உணவுக்காக உயிர்களை வேட்டையாடினான். அதோடு மட்டுமல்லாது அவனைத் துன்புறுத்திய உயிரினங்களையும் கொன்று குவித்தான். நாளடைவில் உயிரினங்கள் கொல்லப்படுவதைக் தடுக்க இரக்கமுள்ள மனிதர்களும் தோன்றினர். அவர்கள் அரிய கருத்துக்களைக் கூறினர். அதன் வழியாக உயிர்களைக் கொல்வது ஓரளவு குறைந்தது. அந்த வகையில் சித்தர்களும் உயிர்கள் கொல்லப்படுவதை வன்மையாகக் கண்டித்தனர். அதற்காக அவர்கள் பல பாடல்களை எழுதினர். அப்பாடல்கள் உயிர்களைக் கொல்லும் இரக்கமற்ற செயல்கள் குறைவதற்குத் துணை நின்றது. அதுமட்டுமின்றி உலகில் தோன்றிய அனைத்து உயிர்கள் மீதும் அன்புகாட்டவேண்டும் என்பது சித்தர்களின் வேண்டுகோளாய் இருந்தது.

பதினெட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த வள்ளலார்;

*"வாடிய பயிர்களைக் கண்டபோதெல்லாம் வாடினேன்"*[32]

என்றார். திருமூலரும் திருமந்திரத்தில் உயிர்களைக் கொல்பவர் நரகத்தில் வீழ்வர் என்கிறார்.

*"கொல்லிடு குத்தென்று கூறிய மாக்களை*

*-----------------------------*

*செல்லிடு நில்லென்று தீவாய் நரகிடை*
*நில்லிடும் என்று நிறுத்துவர் தாமே!"*[33]

என்னும் பாடல் மூலம் உயிர்களைக் கொன்ற பாவச் செயல்களுக்கு நரகத்தில் தண்டனை என்னவென்று அறியமுடிகிறது.

ஐந்தறிவுடைய உயிர்கள் மட்டுமின்றி ஆறறிவான மனிதர்கள் ஏழைகளாயிருப்பின் அவர்கள்மீது இரக்கம் காட்டுதல், பசிக்கு உணவு அளித்தல் போன்ற செயல்கள் சித்தர் இலக்கியத்தில் மட்டுமின்றிச் சங்ககால இலக்கியங்களிலும் சான்றுகள் உள்ளன. அள்ள அள்ளக் குறையாத அட்சயப் பாத்திரம் இருந்ததென்று மணிமேகலைக் காப்பியம் தெரிவிக்கிறது. நாயன்மார்களில் ஒருவரான திருநாவுக்கரசரின் பெயரில் தண்ணீர்ப் பந்தல், அன்னச்சாலை ஆகியன அமைந்திருந்தது தெரிய வருகிறது. வடலூர் இராமலிங்க அடிகள் வடலூரில் **1867** ஆம் ஆண்டு தருமச்சாலையை அமைத்து ஏழைகளுக்கு உணவளித்தார். திருமூலர் உயிர்களின்மீது அன்பு செலுத்தி வாழ்வது இறைவனுக்குச் செய்யும் தொண்டு என "அன்பே சிவம்"[34] என்று கூறினார். மேற்கூறியவற்றிலிருந்து பிற உயிர்கள்மீது அன்பு செலுத்துவது மனித இனத்தின் மாண்பு என சித்தர்கள் கருதினர் என்பதை அறிய முடிகிறது.

## உடலைப் பேணுதல்

மனிதன் நல்வாழ்வு வாழ வேண்டுமெனில் அவன் உடல் நலம் நன்றாக அமைய வேண்டும். அப்போதுதான் அவன் மன நலமும் நன்றாக அமையும். அவன் சில காரணங்களால் உடல் நலத்தைக் கெடுத்துக் கொள்கிறான். உணவுமுறை மாறுபாட்டாலும் அல்லது உணவையே சரிவர உண்ணாமலும் உடல் கெட்டுவிடுகிறது. இதனால் நோய்களும், அதனைத் தொடர்ந்து இறப்பும் ஏற்படுகிறது. இவ்வுடம்பை நோய் நொடியிலிருந்து காப்பாற்றிக் கொள்ள சித்தர்கள் மக்களுக்கு வழிகாட்டிகளாகத் திகழ்ந்தனர்.

இவ்வுடலுக்கு நோயினது தாக்கம் ஏற்பட்டால் மருந்து வேண்டும். அம்மருந்து என்பது உணவாகவும் அமைதல் வேண்டும் என்பதைக் கருத்தில் கொண்ட சித்தர்கள் மூலிகை மருத்துவமான சித்த மருத்துவ முறைகளைக் கண்டனர். ' உணவே மருந்து மருந்தே உணவு' எனும் கருத்து இதனடிப் படையில் உருவானதாகும்.

> *"மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது*
> *அற்றது போற்றி உணின்"*[35]

எனும் குறளும் முன் உண்ணப்பட்ட உணவு சீரணித்த பின்பு மற்றொரு உணவை உட்கொள்ள வேண்டும் என வலியுறுத்துகிறது. நோய் வராமல் இவ்வுடலைப் பேணுவதற்கு ஆரோக்கியமான இயற்கை உணவுகள் மிக அவசியமா கின்றன. வள்ளுவர் புலால் உணவைத்தவிர்த்துச் சைவ உணவை உண்ணுதல் உடலுக்கும், உள்ளத்திற்கும் நலமளிக்கும் என்கிறார்.

இந்தப் பஞ்சபூதக் கலவையில் ஆன இவ்வுடலைப் பாதுகாப்பதன் மூலம் உயிரை வளர்க்க முடியும் என்பது திருமூலர் கருத்தாகும்.

> *"உடம்பார் அழியின் உயிரார் அழிவர்*
> -----------------------
> *உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த்தேனே!"*[36]

என்னும் திருமந்திரப் பாடல் உடம்பு நிலைத்தால் உயிர் நிலைக்கும் என்கிறது. மேற்கூறியவற்றிலிருந்து உடம்பை ஆதாரமாகக் கொண்டுதான் மனித வாழ்வு அமைகிறது. ஆத்மஞானத்தையும், பிறவிப் பயனையும் அடைய முடியும் எனவும் தெரியவருகிறது. ஒருநாளைக்கு ஒருவேளை உணவை உண்ணுவதே சிறந்தது என்று யோகிகள் கருதினர். மூன்று வேளை உணவு உண்டால் நோய் வரும் என்பது சித்தர்களின் உணவுக் கொள்கையாகும். எனவே உணவைச் சரியான முறையில், காலத்திற்கு

ஏற்ப உண்டு வந்தால் உடலில் உள்ள உயிர்ச்செல்கள் அழியாமல் புதுப்பிக்கப்பட்டு உடலானது நீண்ட நாள்நிலைக்கும் என்பது சித்தர்கள் அறிவியல் முறையில் கண்ட செய்தியாக உள்ளதை அறியமுடிகிறது.

**சும்மா இருத்தல்**

சித்தர்கள் உலகியல் வாழ்விலிருந்து நீங்கியதும் தங்கள் பேச்சையும், நடவடிக்கைகளையும், பற்றுக்களையும், குறைத்துக் கொள்கின்றனர். அதற்குக் காரணம் மனதை ஒடுக்குவது ஆகும். உணவு, உடையிலும் எளிமையைக் கடை பிடிக்கின்றனர். தெய்வத்தின்மீது சிந்தையைச் செலுத்துகின்றனர். அவர்கள் பெரும்பாலும் குறைவான ஆடையில்தான் காட்சியளிக்கின்றனர். காய்கனி, இலைகள் போன்றவை அவர்களின் உணவாக அமைகிறது. அவர்கள் உலகத் தேடலை விடுத்து அருள் உலகில் கவனம் செலுத்துகின்றனர். சித்தர்கள் உணவைக் குறைத்து தவத்தில் மனத்தைச் செலுத்தும் செயலை ‘‘சும்மா இருத்தல்’’[37] என்று கூறுவர். அவர்கள் கடும் தவத்தினால் தூக்கத்தையும் மறந்து இரவு பகலற்ற நிலைக்கு ஆளாகினர். ஏறக்குறைய உடலை மரத்த நிலையில் வைத்துக் கொள்கின்றனர். அதனால் உடலானது சமாதி நிலையை அடைய ஏதுவாகிறது. அதன் வழியாகத் தன்னையறிய முற்பட்டனர்.

> *‘‘பேய்போல் திரிந்து பிணம்போல் கிடந்து பெண்ணைத்*
> *தாய்போல் நினைத்து தவம் முடிப்பது எக்காலம்?’’*[38]

என்னும் பாடலில் பத்திரகிரியார், மெய்ஞ்ஞானப் புலம்பலாகப் பாடுகின்றார்.

மேற்கூறிய இவற்றிலிருந்து சித்தர்கள் பேச்சையும், உணவையும் குறைத்துச் சும்மாயிருக்கும் அகத்தேடலுக்கு ஆளாயினர் என்பதை அறிய முடிகிறது.

## வசியம் செய்தல்

வசியம் என்பது தனக்கு எதிரியில்லாத நிலை உருவாக்கப் பிற உயிர்களைத் தன் வசமாக்குதலாகும். குறிப்பாகச் சித்தர்கள் நாகரிக உடையை வெறுத்துச் சடையுடனும், தாடியுடனும் காட்டில் திரிந்தனர். காட்டில் நாய், நரிகளிடமும், சிங்கம் புலிகளுடனும் வாழ முற்பட்ட காலத்தில் தன்னைத் தாங்களே பாதுகாத்துக் கொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டது. அந்நிலையில் சித்தர்கள் அவற்றைத் தன்வசப்படுத்தினர். அதற்குத் தன்பார்வை மற்றும் மூலிகைகளின் வேர்கள் ஆகியவற்றைப் பயன்படுத்தினர். பொதுவாக அவர்களின் தவத்திற்கு இடையூறு நேராதிருக்க “இரசமணி”[39] போன்றவற்றை வைத்திருந்தனர். சித்தர்கள் உலக மாந்தர்களையும் தன்வசப்படுத்தி வைத்திருந்தனர். மக்களின் துன்பங்களை, நோய்களைத் தீர்த்து வைத்தனர். நோய்களை நீக்கவும், பேய்களை விரட்டவும், மந்திரங்களைக்கூறி எதிர் வருகின்ற பேராபத்துக்களையும் முன்கூட்டியே அறிந்து எச்சரித்து வைத்தனர். இதன்வாயிலாகத், தங்களது தேவைகளையும் நிறைவேற்றிக் கொண்டனர். மேற்கூறியவற்றிலிருந்து சித்தர்கள் மனிதர்களை மட்டுமின்றி அனைத்து உயிர்களையும் வசியப்படுத்தி வாழ்ந்தது தெரிய வருகிறது.

மனித வாழ்வானது போற்றுதலுக்குரியதாகும். அவ்வாழ்வை நல்ல நோக்கத்துடனும், நல்ல செய்கையினாலும் நிறைவு செய்து கொள்ள வேண்டும். அதற்கு உடலும், மனமும், அறிவும் நல்ல நிலையில் ஒருங்கே பெற்று அமைதல் வேண்டும். தீய நெறிகளில் மனத்தை செலுத்தாமல் நன்னெறியில் செலுத்த வேண்டும். உடலை நல்ல முறையில் பேணிப் பாதுகாத்து உடலைத் தாக்குகின்ற பிணி, மூப்பு, பயம், துன்பம், இறப்பு, முதலியவைற்றைத் தவிர்த்தல் வேண்டும். இதற்குச் சித்தர்கள் தவத்தின் மூலமாகப் பிறப்பு, இறப்பற்ற பேரின்ப நிலைக்கு மக்களை அழைத்துச் செல்வதை வாழ்வியல் நோக்கமாகக் கொண்டிருந்ததை அறியமுடிகிறது.

அறிய வருவன

சமூகத்தில் இறைநிலையாகிய பேரின்ப நிலைக்குச் செல்ல சில தடைகள் இருந்தன. குறிப்பாகச் சாதி சமயக் கொடுமைகள், மூடபக்தி, பகுத்தறிவுக்கு ஒவ்வாத பிற்போக்குத்தனங்கள் முதலியவற்றைச் சித்தர்கள் சாடியுள்ளதை அவர்கள் பாடல்கள் மூலம் அறியமுடிகிறது. சமுதாயத்தில் அன்பை மறந்து வேற்றுமையை ஏற்படுத்தி, விரோத மனப்பான்மையை வளர்த்துக் கொண்டிருந்த செயலை மாற்றுவதற்கு முயற்சிகள் மேற்கொண்டதை அறிய முடிகிறது. அவர்கள் சமதர்ம சமுதாயமும், நோயற்ற மக்களையும் காண மருத்துவத்தையும் கண்டறிந்தனர். இறப்பற்ற நிலைக்கு மக்களை அழைத்துச் செல்ல நல்ல வழிகாட்டிகளாயிருந்தனர். சமூகம் மேம்பாடு அடைவதற்குப் பெரிதும் உறுதுணையாகச் சித்தர்கள் இருந்ததை உணர முடிகிறது.

## குறிப்புகள்

1. சித்தர் பாடல்கள், வானதி பதிப்பகம், பா.73.
2. மா.கி. இரமணன் வளரும் தமிழ், 'திருவாசகத்தில் தன்னை உயர்த்தும் ஆளுமை,' ப.199.
3. கணபதிசுவாமிகள், ஊன்உம்பு ஆலயம், ப.82.
4. திருமூலர் திருமந்திரம், பா.759.
5. மேற்படி, பா.1050.
6. போகர் 7000, பா.2011.
7. க்ரியா தமிழகராதி, ப.148.
8. சித்தர் பாடல்கள், வானதி பதிப்பகம், பா.92.
9. பாலகுருசாமி, காலாங்கிநாதர்கொல்லிமலை ரகசியம், ப.3.
10. சூ. நிர்மலாதேவி, கருவூரார் பலதிரட்டு, ப.150.
11. சித்தர் பாடல்கள், வானதி பதிப்பகம், பா.12.
12. சூ. நிர்மலாதேவி, கருவூரார் பலதிரட்டு, ப.151.
13. மேற்படி, ப.150.
14. சித்தர்பாடல்கள், வானதி பதிப்பகம், பா.74.
15. மேற்படி, பா.40,41.
16. மேற்படி, பா.175.
17. மேற்படி, பா.30.
18. மேற்படி, பா.121.
19. மேற்படி, பா.236.
20. மேற்படி, பா.42.
21. மேற்படி, பா.123.

22. ஞானசம்பந்தர், தேவாரம், பா.15.

23. சித்தர்பாடல்கள், வானதி பதிப்பகம், பா74.

24. அரு. இராமநாதன், ஞானக் கோவையெனும் சித்தர் பாடல்கள், ப.71.

25. மேற்படி , பா.58.

26. இராதாசெல்லப்பன், விதியை மதியால் வெல்வோம், ப.220.

27. மேற்படி, பா.60.

28. சித்தர் பாடல்கள், வானதி பதிப்பகம், ப.127.

29. மேற்படி, பா.60.

30. திருமூலர், திருமந்திரம், பா.2229.

31. சித்தர் பாடல்கள், வானதி பதிப்பகம், ப.120.

32. வள்ளலார் – திருஅருட்பா, பிள்ளைப் பெருவிண்ணப்பம், பா.58.

33. திருமூலர், திருமந்திரம், பா.724.

34. மேற்படி, பா.680.

35. திருவள்ளுவர் திருக்குறள், 942.

36. திருமூலர் திருமந்திரம், பா.1120.

37. திருப்புகழ், அருணகிரிநாதர், பா.220.

38. போகர் ஏழாயிரம், பா.120.

39. சித்தர் பாடல்கள், வானதி பதிப்பகம், பா.8.

## இயல் – 3

# இலக்கியம் படைத்தருளியதும் சித்தர்களின் ஆற்றல்களும்

மனிதன் படைக்கப்பட்டான் என்பது மதங்கள் கூறும் கருத்தாகும். விலங்குகளிலிருந்து மனிதன் பரிணமித்தான் என்பது அறிவியல் கூறும் உண்மையாகும். சமுதாயத்தில் நீதி நெறியுடனும், பிறந்த உயிரையும், உடலையும் பேணிக்காக்க வேண்டும். மண்ணுலக உயிர்கள் அனைத்தும் ஆண்டவன் திருவடிகளைச் சாரவேண்டும் என்பது துறவோர்களின் போதனைகளாகும். உலகியல்படி வாழ்வை மேற்கொள்வோர் இல்லறத்தார் என்றும் இதிலிருந்து சற்று விலகி வாழ்ந்து அறச்செயல்களாற்றி, அரிய பல காரியங்கள் செய்பவர் துறவறத்தார் என்று அழைக்கப்படுகின்றனர். துறவறம் மேற்கொண்டவர்களில் பெரும்பாலும் சித்தர்களாக இருந்துள்ளனர்.

சித்தர்களின் முதன்மையான நோக்கம் மனித வாழ்வைச் செம்மைபடுத்துவதாகும். அவர்கள் சமூகத்திற்கும், மொழிக்கும் அளித்த கொடையே சித்தர் இலக்கியமாகும். சித்தர்கள் ஏதோ ஓரிலக்கை நோக்கிப் புறப்பட்டதன் விளைவாக அவர்கள் இயற்றிய பல இலக்கியங்கள் காலத்தால் அழியாத செல்வங்களாக மக்களிடையே இன்றளவும் இருந்து வருகின்றன.

உடலை, உணவு மற்றும் மருத்துவம் ஆகியவற்றின் மூலம் பாது காத்து மனத்தை ஒருமுகப்படுத்தி வீடுபேறு எய்திட ஞானிகள் கண்ட உத்திகளில் ஒன்று யோக நெறியாகும். உடலைக் கட்டுக்குள் வைப்பதன்

மூலம் மனத்தைக் கட்டுப்படுத்த இயலும் என்ற அடிப்படைக் கொள்கையில் தான் யோகப் பயிற்சிகள் வகுக்கப்பட்டன. இது மனத்தையும், அறிவையும் தனித்தனியே பிரித்து அதனதன் இயக்கத்தைக் கட்டுப்படுத்துவதாகும். யோகம் என்ற சொல் ஒன்றிணைதல் என்றும் பிரிதல் என்றும் இருவேறு பொருள்களாக ஆன்மிகத்தில் கூறப்படுகிறது. பிரிதல் என்பது பிரகிருதியிலிருந்து புருடன் என்றழைக்கப்படும் ஆன்மாவைப் பிரிப்பதாகும். ஒன்றிணைதல் என்பது மாயை வலையில் சிக்குண்டு அறியாமையில் சிறைபட்டுக் கிடக்கும் ஆன்மாவை பூரணமாய் இருக்கும் பிரம்மத்தில் கலக்கச் செய்வது யோகத்தின் குறிக்கோளாகும். இதனை இணைதல் என்று வேதாந்திகள் விளக்குகின்றனர். சித்தர்கள் பல்வேறுத் துறைகளில் ஆராய்ந்து, தெளிந்து மக்களுக்கு அறிவியல் இலக்கியங்களையும், ஆன்மிக இலக்கியங்களையும், மருத்துவம், சோதிடம் போன்ற கலைகளின் இலக்கியங்களையும் அளித்துள்ளனர்.

அவ்வாறு அருளி அளித்த இலக்கியங்களையும், சித்தர்களின் ஆற்றல்களையும் பற்றி ஆய்வதாக இவ்வியல் அமைகிறது.

**யோகக்கலை**

யோகக்கலையின் தலையாய சித்தர் சிவபெருமான் ஆவார். அவர் இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்னும் எட்டுவகையான யோக முறையை மக்கள் கற்கத் தூண்டினார். அவரே யோகக்கலையின் குரு என்றும் தட்சிணா மூர்த்தி என்றும் அழைக்கப்படுகிறார். இவரது உருவத்தை ஆலமர்ந்த கடவுளாகச் சிவாலயங்களில் தெற்குப்புறமாக வைக்கப்பட்டிருக்கும். சிவபெருமான் வழியாகவும், அவரது முதற்சீடராகிய நந்தியின் வாயிலாகவும் சித்தர்கள் யோகக் கலையைக் கற்றனர் என்பது புராணம் கூறும் செய்தியாகும்.

யோகம், தியானம், தவம் எனும் சொற்கள் துறவுநிலையில் நிற்பவர்களுக்கு மட்டுமே உரியதன்று. சாதாரண மக்களும் இக்கலைகளில் பயிற்சி பெற்று உலகியல் வாழ்வைச் செம்மையாக்கிக் கொள்ள முடியும். மனத்தையும், சித்தம் என்கிற அறிவையும் மேம்படுத்தி அதன் ஆற்றல்களை வெளிப்படுத்தி வாழ்வை வெற்றி கொள்ளச் செய்வது யோகக்கலையின் பயனாகும். துறவறம் மட்டுமே இதன் நோக்கமன்று; குடும்பம், உறவு, ஊர், சமுதாயம் என்னும் அமைப்புக்களுக்குமிடையே இறை நம்பிக்கையோடு மனிதன் வாழ்ந்து மனத்தை அலைபாய விடாமல் பேரின்ப வாழ்வடைதலை இக்கலை வலியுறுத்துகிறது.

## சித்தம் - மனம்

சித்தம், மனம் இவற்றின் வேறுபாட்டினை இத்தலைப்பில் காணலாம். ''மனிதனின் அறிதிறன், ஆசை, செயல் ஆகிய முக் கூறுகளையும் கொண்ட நிலைத்த தொகுதியை, 'சித்தம்' எனலாம். அறிதிறனும், செயலும் கலந்த நிலையை 'மனம்' என்றும்; அறிதிறனும் ஆசையும் கலந்த நிலையை 'அகங்காரம்' என்றும், அறிதிறனும் தன்னைத் தானே ஆராயும் நிலையை உடையதை 'புத்தி' என்றும் கூறுவர். அறிவு, ஆசை, செயல் ஆகிய மூன்றின் கூட்டே 'சித்தம்'[1]'' எனக் கூறப்படுகிறது. அதிர்வுகளுக்கு நிலைக்களனாய் இருக்கும் சித்தத்தை உருக்கிச் செயலிழக்கச் செய்துவிடுதலும், அலைகளில்லா நீர் நிலைபோல் மனிதமனம் இருக்கப் பழகிக் கொள்வதும் பேரானந்த நிலையை அடைவிக்கும். அத்தகைய பேரானந்த நிலையை அடைந்தவர்கள் சித்தர்கள். அவர்களுக்குக் குற்றங்கள் இல்லை, மான அவமானமில்லை, குலங்கோத்திரமும் இல்லை. மேலும் தவத்தின் மூலம் குணக் கேடுகளும், நன்மை தீமைகளும் இல்லாமல் நடுநிலை வகிக்கின்ற இனிய நிலையைச் சித்தர்கள் அடைந்தனர்.

யோக, தியான முறைகளைப் பயின்று வருவோர்களின் மனம் சிறிது சிறிதாக உலக ஆசைகளிலிருந்தும், பற்றுக்களிலிருந்தும் நீங்கும்

நிலையை ஏற்படுத்துகிறது. ஆசையையும், பற்றுக்களையும் ஒழிக்கும் நிலையை அடைந்தவர்கள் குற்றங்களிலிருந்து விலகி விடுகிறார்கள். இக் கலையைச் சித்தர்கள் சமுதாயம் சீர்படவே மக்களுக்கு வழங்கியுள்ளனர். இதனைப் பத்திரகிரியார்;

> *"ஆங்காரத்தையடக்கி ........................*
> *தூங்காமல் தூங்கி சுகம் பெறுவதெக்காலம்"*[2]

எனக் கூறுகிறார். ஆங்காரம் எனும் அகந்தையே மனிதனைக் கீழ்நிலைக்குச் செலுத்திவிடும் என்பது ஞானிகளின் கருத்தாகும்.

## இருவகை யோகம்

யோகத்தைப் பொதுவாக இருவகைப் படுத்தியுள்ளனர் அவை,

1. உடலை அடிப்படையாகக் கொண்டது
2. மனத்தை அடிப்படையாகக் கொண்டது

என்பதாகும். இவ்விரண்டு நிலைகளுக்கும் உடல்தான் துணையாக நிற்கிறது. உடலை அமர்த்துவதும், மூச்சடக்கிப் பயில்வதும், உடலுறுப்புக்களை வளைத்து, நெளித்து, அசைத்து விரல்களில் முத்திரைப் பதித்தும் செய்வது. இது உடலை அடிப்படையாகக் கொண்டு செய்கின்ற யோகமாகும். மற்றொன்று மனத்தைக் கட்டுப்படுத்தி ஒருநிலை அடைவிக்கும் யோக முறையாகும்.

## உடலை அடிப்படையாக கொண்ட யோகமுறை

1. அடயோகம் 2. இலயயோகம் (லயம்) அல்லது குண்டலி யோகம் ஆகும். 3. மந்திரயோகம் அல்லது செபயோகமாகும்.

## மனத்தை அடிப்படையாகக் கொண்ட யோக முறை

1. கர்மயோகம் 2. பக்தியோகம் 3. ஞானயோகம் என வகைப் படுத்துவர்.

**அடயோகம்:- [அதயோகம்]**

பிராணாயாமம் என்று சொல்லப்படும் மூச்சுப் பயிற்சியால் உடலில் ஓடுகின்ற வாயுக்களின் (காற்று) இயக்கங்களை ஒழுங்குபடுத்திச் சுழுமுனை என்னும் புருவ மத்தியில் ஒருங்கிணையச் செய்வது 'அதயோகம்' என்று வடநூலார் கூறியுள்ளனர். இதனைச் சித்தர்கள் 'வாசியோகம்' என்று அழைத்தனர்.

**இலய யோகம் [லயயோகம்]**

மூலாதாரத்தில் முடங்கிக் கிடக்கின்ற குண்டலினிச் சக்தியை யோகப் பயிற்சியால் தூண்டிவிட்டு, மூச்சுப் பயிற்சி என்னும் வாசி யோகத்தின் மூலம் மேலெழும்பச் செய்து 'சிரசுராகாரத்தில்' உள்ள சிவத்தில் கலக்கச் செய்வதைக் குண்டலினி யோகம் என்பர். சிவ—சக்தி இணைப்பால் ஏற்படும் இன்ப வெள்ளத்தில் யோகியர் ஒன்றிவிடுவதால் இதனை 'இலய' யோகம் என்பர். வள்ளுவர் இதனையே பேரின்பமாக காமத்தின் உச்சமாக,

*'ஊடுதற் காமத்திற் கின்பம் அதற்கின்பம்*
*கூடி முயங்கப் பெறின்'*

என்கிறார். இது ஏதோ உடல் இன்பத்திற்குக் கூறாமல் யோக நிலைப் பாட்டில் பேரின்பம் பெற வலியுறுத்துவது தெளிவாகிறது.

**மந்திர யோகம்**

இந்த யோகமுறை உருவவழிபாட்டை அடிப்படையாகக் கொண்டது. அருவமாக எங்கும் நிறைந்திருக்கும் இறைக்கு உருவகம் தந்து அதற்குப் பெயரிட்டு வழிபடுவோர் இந்த யோகமுறையைப் பின்பற்றுகின்றனர். இறைவனின் திருவுருவம், அருவுருவால் விளங்கும் இலிங்கம், எந்திரக் குறியீடுகள் போன்றவை தியானப் பொருள்களாகின்றன.

இறைவனின் திருப்பெயர்களும் அவற்றை உச்சரிக்கும் முறைகளையும் பற்றிக் கூறுவதாகும். காட்டிற்கு, ‘ஓம் சிவாயநம, நமசிவாய’ ‘ஓம் நமோ நாராயணாய நம’ ‘ஓம் சரவணபவாய நம’ ‘ஓம் சக்தியே நம’ என்று கூறுவதும் சிவயநம, நமசிவய என்பதை மாற்றி, மாற்றி ஐம்பத்தொரு அட்சரங்களாக உச்சரிப்பதை மந்திர யோகம் எனவும்,செப யோகம் எனவும் அழைக்கப்படுகிறது.

**கர்மயோகம்**

பகவத் கீதை கர்மயோகத்தை முதன்மை படுத்திக் கூறுகிறது. வினைகள் உடலால் செய்யப்பட்டாலும் அவ்வினைகளுக்கும், வினைகளால் ஏற்படும் விளைவுகளுக்கும் காரணமாய் இருப்பது மனமாகும். மனத்தைப் பக்குவப்படுத்திக் கொண்டு செய்யப்படும் வினைகளால் ஆன்மா இறைமையில் கலந்திட முடியும் என்பது கர்ம யோகத்தின் கொள்கையாகும். எனவே கர்மயோகத்திற்கு மனப்பக்குவமே அடிப்படையாக அமைகிறது.

**பக்தியோகம்**

உருவ வழிபாட்டையும் பக்தரின் உள்ளத்தில் இறைவன்பால் ஊறும் அன்பினையும் அடிப்படையாகக் கொண்டது பக்தியோகமாகும். பக்தி யோகத்திற்குச் சான்றாக மாணிக்க வாசகர் கீழ்க்கண்டவாறு இறைவனைப் போற்றுகின்றார்.

*‘‘இமைப் பொழுதும் என்நெஞ்சில்*
*நீங்காதான் தாள் வாழ்க!’’* [3]

என்னும் பாடலடியில் பக்தி யோகத்திற்கு சான்றாக இருக்கிறார். சைவத்தில் திளைத்த நாயன்மார்களுக்கும், வைணவத்தில் ஆழ்ந்த ஆழ்வார்களுக்கும் பக்தி யோகமுறையே சிறந்ததாகக் கருதப்பட்டது.

### ஞானயோகம்

இவ்வுலகில் இறை ஞானமே நிலையான, மேலான ஞானமாகும். இதனை வேதாந்திகளும், சித்தாந்திகளும் ஏற்றுக் கொள்கின்றனர். இந்த நிலையான ஞானத்தை அடைய முயல்வது ஞான யோகமாகும். இந்த ஞான யோகத்தை ஆழ்ந்தகன்று அறியும் கூரிய சிந்தனை உடையோரால் மட்டுமே அடைய முடியும்.

### வாசியோகம்

மூலாதாரத்தில் உறங்கும் குண்டலினிச் சக்தியை மூச்சுப்பயிற்சி எனும் சரப்பழக்கத்தால் இடகலை, பிங்கலை எனும் இரு நாடிகளின் வழியே நாசியிலிருந்து வெளியாகி வீணாகும் உயிர்க்காற்றை ஒழுங்குபடுத்திக் கட்டுப்படுத்தும் சுழுமுனை நாட்டத்தை வாசிப்பயிற்சி என்றும் வாசி யோகம் என்றும் அழைக்கின்றனர். இதனை திருமூலர் பாடலில்,

> *“புறப்பட்டுப் புக்குத் திரிகின்ற வாயுவை*
> *நெறிப்பட வுள்ளே நின் மலமாக்கில்”*[4]

என்றும் அதனால் புரிசடையோனாகிய ‘உயிர்’ போகாது என்றும் கூறுகிறார்.

### அட்டாங்கயோகம்

அண்டத்திலுள்ளது பிண்டம், பிண்டத்திலுள்ளது அண்டம் என்பது யோகிகளின் கொள்கையாகும். யோகப் பயிற்சியில் வல்லவர்கள் அண்டமாகிய வான்வெளியில் உள்ள அனைத்தையும் தன் பிண்டமாகிய உடலில் கண்டனர். பேரண்டத்தை இயக்கும் சக்திகளின் உருவமாக தெய்வங்களை யோகியர் தம் உடலில் கண்டனர். இன்னொரு வகையான நவகண்ட யோகமுறையில் சித்தர்கள் தன் உடலை ஒன்பதுக் கூறுகளாகப் பிரித்து (வெட்டுப்பட்டதைப் போல்) மீண்டும் ஒன்றாக இவ்வுடலில்

சேர்த்துக் கொள்வர். இம்முறையில் 19ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த வள்ளலார் இராமலிங்கசுவாமிகளும், 20 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஆற்றுச்சுவாமிகள் எனும் பூண்டி மகானும் செய்துள்ளதை மக்கள் நேரில் கண்டிருக்கின்றனர். இந்த யோக நிலையின் பெருமைகளைக் குதம்பைச் சித்தர் பாடல்வரிகள் கீழ்வருமாறு:

*"அட்டாங்க யோகம் அறிந்த மெய்ஞ்ஞானிக்கு*
*முட்டாங்கம் ஏதுக்கடி?–குதம்பாய்*
*முட்டாங்கம் ஏதுக்கடி?"*[5]

என்று அட்டாங்க யோகத்தின் நிலையை விளக்குகிறது.

**நாடிகள்**

உடலில் பத்துவகையான வாயுக்கள் ஓடுகின்றன. இவ் வாயுக்களின் இயக்கம் தசநாடிகள் என்னும் பத்து நாடிகளின் வழியே நடைபெறுகிறது. இந்த நாடிகளைப் பொதுவாக இருவகைப்படுத்துவர். ஒன்று சூரிய நாடி என்னும் பிங்கலையும், இரண்டாவதாக சந்திரநாடி என்னும் இடகலையும் ஆகும். இவ்விருவகை நாடிகளும் அவற்றில் ஓடும் வாயுக்களும் தம் இயல்பால் முரண்பட்டவை, முரண்பட்ட நாடிகளின் இணைப்பாகவும், இயைபாகவும் செயல்படுவது நடுநாடி ஆகும். இதனை, 'சுழுமுனை' நாடி என்றும், 'சூஷ்மநாடி' என்றும் ஞானிகள் கூறுவர்.

**யோக உறுப்புக்கள்**

யோக உறுப்புக்கள் யாதெனின் இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பன.

"**இயமம்** - பிறர்க்குத் தீங்கு செய்யாமலும், பிறரைத் துன்புறுத்தாமலும் வாழ்வது இயமமாகும்.

1. உயிர்களைத் துன்புறுத்தல், 2. பொய் கூறல், 3. களவு செய்வது 4. பிறன்மனைத்துய்த்தல் போன்ற புறம்பான செயல்களிலிருந்து விலகி வாழ்வது இயமமாகும்.

**நியமம்** - செய்ய வேண்டிய நல்லவற்றைத் தொகுப்பது நியமம். தவம் மேற்கொள்ளல், இறைவழிபாடு, ஆன்ம விசாரணை, மந்திரம் ஓதுதல் ஆகியவையாகும்.

**ஆசனம்** - யோகப் பயிற்சிக்கு ஏற்ற வகையில் உடலை இருத்திக் கொள்ளுதல் ஆசனமாகும் (உட்காருதல்) இதனை நான்கு வகையாக கமலாசனம், உபத்திராசனம், குக்கிடாசனம் (கோழி) சிங்காசனம் எனத் திருமந்திரம் கூறுகிறது.''[6]

**பிராணாயாமம்** - உயிர்க்காற்றினை வெளிவிடாமல் சேர்ப்பதை இது குறிக்கிறது. நாசி, மூச்சுக்குழல், காற்றுப்பையாகிய நுரையீரல் வழியாக வாங்கி விடும் மூச்சினை ஒழுங்கு படுத்தும் பயிற்சியின் மூலம் பிராணனின் ஓட்டத்தைக் கட்டுப்படுத்துவது. இதன் மூன்று பிரிவுகளாக முறையே பூரகம் அல்லது அபானன், கும்பகம் அல்லது வியானன், ரேசகம் அல்லது பிராணன் என்று அழைப்பதுண்டு.

**பிரத்தியாகாரம்** :- இது புலனொடுக்கத்தைக் குறிப்பதாகும்.

**தாரணை** :- மன உணர்வுகளைச் சிதறா வண்ணம் குறிப்பிட்ட உறுப்பில் ஒருமுகப்படுத்தி நிறுத்தி வைப்பது தாரணையாகும்.

**தியானம்** :- குறிப்பிட்ட உறுப்பொன்றில் மட்டுமல்லாமல் முழுமையாக மனத்தை ஒருமுகப்படுத்தி நிறுத்துவது தியானமாகும்.

**சமாதி** - பக்குவப்பட்ட ஆன்மா பூரணத்தில் ஒன்றாகி விடும் நிலையைச் சமாதி என்பர். இச்சமாதி பல வகைப்படும்.

## யோகநிலையின் பயன்பாடுகள்

யோகிகள் மேற்சொல்லப்பட்டக் கட்டுப்பாட்டுக்குள் நிலைத்து நின்று தவத்தை மேற்கொள்ளும் நிலையில் அவர்களுக்குச் சித்துகள் என்னும் எண்வகைப் பேராற்றல் கிடைத்தன. அவைகள்;

1. அணிமா – அணுவினுள் நுழைகின்ற ஆற்றல்

2. மகிமா – தன்னுருவைப் பலமடங்காகப் பெருக்கிக் காட்டுவது

3. கரிமா – உடலை யானையைப் போன்று மிகக் கனம் பொருந்தியதாக ஆக்கிக் காட்டுதல்.

4. லகிமா – உடலின் எடையை குறைவாகத் தக்கையைப் போன்று மிகவும் லேசாகச் செய்தல்.

5. பிராப்தி – சூரியன், சந்திரன் ஆகிய கோள்களைத் தன்வசப் படுத்தி கால நிலைகளை மாற்றிடச் செய்தல்.

6. பிரகாமியம் – தன்னுடலை விடுவித்துக் கொண்டு அதன் உயிரை இன்னொரு உடலில் புகுத்துகின்ற ஆற்றல்.

7. ஈசத்துவம் – படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில் புரிகின்ற ஆற்றலை அடைதல்.

8. வசித்துவம் – தெய்வங்களைத் தன்னிடத்தில் வசப்படுத்துகின்ற ஆற்றல். இவையனைத்தும் அட்டாங்க யோகப் பயிற்சியின் மூலம் கிடைக்குமென்று யோகிகள் தமது அனுபவத்தை நூல்களில் குறிப்பிட்டுள்ளனர்.

**உணவு முறைகள்**

சித்தர்கள் 'உணவு மருத்துவம்' என்ற முறைக்கு பல்வேறு வகையான இலக்கியம் படைத்துள்ளனர். குறிப்பாகத் தமிழரின் 'உணவுமுறை உணவே மருந்து, மருந்தே உணவு' என்னும் அடிப்படையில் அமைந்ததாகும். ஆதலால் அறுசுவை உணவு முறையைக் கையாண்டனர் என்பது பதார்த்த குணசிந்தாமணி எனும் நூல் கூறும் செய்தியாகும்.

"தென்னிந்தியா 20,000 ஆண்டுகளுக்கு முன்பே நாகரிகமுற்று விளங்கியது. இங்குதான் முதல் மனித இனம் தோன்றியதாக அறிஞர்கள்

கூறுகின்றனர். இப்பகுதியில் கிடைக்கின்ற இயற்கை உணவு வகைகளான அரிசி, சோளம், கம்பு, கோழ்வரகு, வரகு, தினை, சாமை, மூங்கிலரிசி, கடலை, மல்லி, மிளகு, வெங்காயம், பூண்டு, சீரகம், வெந்தயம், காய்கள், கீரைகள், தேன், பால், தயிர், நெய் போன்றவற்றின் சுவையையும் சுக்கு, திப்பிலி, மஞ்சள் ஆகியவற்றின் மருத்துவப் பயன்களையும் மக்கள் அறிந்திருந்தனர்".[7]

முதன்முதலில் நாகரிகத்திற்கு அடித்தளமாய் விளங்கும் தென்னிந்தியப் பகுதியில்தான் காய், கனி, கிழங்குகள், கொட்டைவகை உணவுகள் கிடைத்தன. இயற்கையில் கிடைத்த இவ்வகை உணவுகளைச் சுவைத்துப்பார்த்து இனிப்பு, துவர்ப்பு, கார்ப்பு, கசப்பு, புளிப்பு, உவர்ப்பு என ஆறுவகைப் படுத்திய ஆதிமனிதன் அவற்றை விகிதாச்சாரப்படி கலந்துண்ணும் வழிவகைகளையும், அவற்றைப் பக்குவமாக வேக வைத்து உண்ணும் நுட்பத்தையும் அறிந்திருந்தான். அதன்பிறகு உணவில் சேருகின்ற இலைகளான கீரை வகைகள் தண்டு, வேர்கள், கிழங்குகள், பட்டைகள், வித்துகள் ஆகியவற்றின் மருத்துவ பயன்பாட்டினையும் அறிந்திருந்தான். அதன்பிறகு மரத்திலிருந்து வடிகின்ற பிசின், மரத்தின்பால், போன்றவையும் மருத்துவம் ஆனதை அறியமுடிகிறது. ஒரு செடி அல்லது கொடியின் ஐந்து உறுப்புகளைப் (பஞ்சாங்கம் (அ) சமூலம்) பயன்படுத்தும் முறையைச் சித்தர்கள் அறிந்து மக்களுக்கும் சொல்லித் தந்துள்ளது தெரியவருகிறது. இவ்வாறாக இயற்கையோடு இயற்கையாக மக்களை வாழத்தூண்டி தட்பவெப்ப நிலைகளுக்கு ஏற்பவும், மக்களுக்கு வருகின்ற நோய்களையும் பெரும்பாலும் உணவைக் கொண்டே நீக்கும் முறைகளையும் சித்தர்கள் அறிவுறுத்தினர். இதனை வள்ளுவரும் குறளின் மூலம் உறுதிபடுத்த,

*'மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது*
*அற்றது போற்றி உணின்'*

என்று முன் உண்ட உணவு செரித்த நிலையில் மற்றொரு உணவை

ஏற்கச் சொல்வது தெரிகிறது. இவ்வாறான உணவு முறையினைக் கையாளுவதன்மூலம் உடலுக்குக் கேடுகள் வராது, மருந்தும் வேண்டுவதில்லை என்பது தெளிவாகிறது.

## இயற்கை உணவு

தமிழர்கள் உணவு உண்ணும் முறையில் சிறந்து விளங்கியுள்ளனர். உடலில் உள்ள நச்சுக் கிருமிகளைக் கொல்லும் ஆற்றலை உடையது பழச்சாறுகள் என்பதையும், உடல் நலத்திற்கு மிகவும் ஏற்றவை என்பதையும், உடல் வளர்ச்சிக்குக் கிழங்குகள், கீரைகள் இன்றியமையாதவைகள் என்றுணர்ந்த மக்கள் இயற்கை உணவுக்கும் (சமைக்கப்படாதது) மாறியுள்ளனர். இன்றும் "அந்தமானில் வாழும் ஆதிகுடிமக்கள் வெறும் தேங்காயை மட்டுமே உணவாகக் கொண்டு வாழ்ந்து வருகின்றனர்"[8] என்று சித்தமருத்துவ வரலாறு என்னும் நூல் கூறுகிறது.

## உணவு தொடர்பான பழமொழிகள்

உணவை அடிப்படையாகக் கொண்டு எழுந்த பழமொழிகள் தமிழர்களிடையே இன்றுவரை வழக்கத்தில் இருந்து வருகிறது அதில் சில எடுத்துக்காட்டு,

*"இளைத்தவனுக்கு எள்ளும்*
*கொழுத்தவனுக்கு கொள்ளும்"*

*"பசிவந்திடப் பத்தும் பறந்து போம்"*

*"உண்டிச் சுருக்குதல் பெண்டிற்கழகு"*

*"அளவுக்கு மிஞ்சினால் அமுதமும் நஞ்சு"*

*"ஆக்கப் பொறுத்தாலும் ஆறப்பொறுத்தல் வேண்டும்"*

போன்ற பழமொழிகள் உணவையே அடிப்படையாகக் கொண்டதாகும்.

## சோதிடக்கலை

சித்தர்கலைகளில் சோதிடக்கலை சிறப்பாக விளங்கிவருகிறது. சோதிடக்கலை சோதியிடத்திலிருந்து பெறுவதாகக் (சோதி+இடம்) கருதப் படுகிறது. இது சோதிடம் காண வந்தவனைச் சோதித்துத் திடப்படுத்து வதாகும். இதனை சித்தர்கள் ஜோதி என்னும் ஞானச் சுடரின் வாயிலாக அறிந்து எதிர்காலத்தைப் பற்றியும், எதிரில் உள்ளவர்களைப் பற்றியும் கூறிவந்தனர். வான் கோள்கள், அதன் இயக்கங்கள் பற்றிய நுணுக்கங்களை அறிந்து மக்கள் வாழ்வு செம்மையடைய அளித்த வாழ்வுக் கலையே சோதிடக்கலையாகும். ஒளிப்பொருட்களான சூரியன், சந்திரன் மற்றும் 27 நட்சத்திரங்களின் இயக்கம் பற்றியும் கூறும் இயலாக சோதிடவியல் அமைகிறது. ''வானத்தில் சோதியாய்ப் புலப்படுகின்ற, அண்டங்களால் உண்டாகின்ற நன்மை, தீமைகளைப் பற்றி முன்கூட்டித் தெரிவிப்பது! இது ஒரு தெய்வீகமான விஞ்ஞானம் (Divine Science), சோதித்துத்திடப் படுத்துவது, நட்சத்திரங்களில் தூது, நேத்திரமென்னும் கண்ணொளி என்ற பல பொருள்களும் சோதிடம் என்பதற்குச் சுட்டப்பெறுகின்றன எனவும், நாராயணீயம் என்பது வேதங்கள் ஆறனுள் ஒன்றாகச் சோதிட நூலைக் குறிக்கிறது என்றும் கூறுகிறார்''[9] க.ப. வித்தியாதரன்.

## சோதிடத்தின் தோற்றம்

சோதிடத்தை ஆதிமுதல் வளர்த்து வந்தவர் வைவசுத மனுவின் பிரதமபுத்திரன் துவாதச ஆதித்தன் என்ற சூரியனே மூலப் புருடனாவார். அவர்கள் வழிவந்தவர்கள் சூரியன், பிதாமகன், வியாசர், வசிட்டர், அத்திரி, பராசரர், காசியபர், நாரதர், கர்க்கர், மரிசி, மனு, ஆங்கிரிஸ், ரோமசர், புலத்தியர், சியவனர், யவனர், பிருகு, சௌனகர் ஆகிய பதினெட்டு சித்தர்களாவார்கள். மேற்கூறியவர்கள் எழுதிய சோதிட சித்தாந்தங்களை ஆய்ந்து அவற்றுக்கு உரை எழுதியவர்களில் ஆரியபட்டர், வராக மிகிரர், சத்தியாச்சாரியார், சாணக்கியர், பீமகுப்தர், வரருசி, ஸ்ரீபதி

ஆகிய 11 பூர்வாச்சாரியார்கள் சோதிட சாத்திரம் நிலைக்க"[10] பெரும் பங்கு வகித்தவர்களாவார்கள் என்று அறியப்படுகிறது.

**சோதிடவியலுக்கு அடிப்படை**

சோதிட வியலுக்கு அடிப்படையாய் விளங்குவது 'காலம்' ஆகும். தருக்க நூலுக்குக் கேள்வியும், சூத்திரமும் போன்று கணித நூலுக்குப் புள்ளியும், எண்ணும், கோடும் வேண்டுவதை அறிய முடிகிறது. வானியலுக்குக் காலமும், கோள்களும், நட்சத்திரங்களும் தேவையாகின்றன. காலம் வானியலுக்கு மிகவும் இன்றியமையாதது. அது கோள்கள், நாள்கள் முதலியவற்றைத் தன்னுள் அடக்கியது. வானவீதியில் கோள்கள் தத்தமது கால நிர்ணயப்படி சுற்றிவர அதனால் பகலிரவும் தோன்றுகிறது. வானில் பல மாற்றங்கள் நிகழவும் காலம் துணை செய்வதால் வானியல் சாத்திரமான சோதிடத்திற்கு அடிப்படையாக "காலம்"[11] விளங்குகிறது.

காலத்திற்கு உருவமில்லை. இதனை இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் என்று தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார். "மறுவில் செய்தி மூவகைக் காலமும் நெறியின் ஆற்றிய அறிவன் தேயமும், என்னும் நூற்பா மூலம் விளங்குகிறது."[12] திவாகர நிகண்டில் 'காலம்' பெறுமிடம் போற்றத்தக்கது. தமிழிலுள்ள நிகண்டுகளில் மூத்தது 'சேந்தன்' திவாகரமாகும். இந்நூல் பெயர்த் தொகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. மேலும் தெய்வப் பெயர்களும் ஆகாயம், காற்று, பனி, தென்றல் போன்ற இயற்கைப் பெயர்களும் சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, இராகு, கேது போன்ற கோள்களின் பெயர்களும் மேடம் முதல் பன்னிரண்டு இராசிகளும், அசுவினி முதலான இருபத்தேழு நட்சத்திரங்களின் பெயர்களும் குறிக்கப்பட்டுள்ளன.

இவ்வாறு சிறப்புப்பொருந்திய வானியல் கோட்பாடான சோதிட சாத்திரத்தை, இத்துறையில் வல்லமை படைத்த வருண முனிவரிடம் அகத்தியர் வான நூல் வேண்டிக் கேட்கும் அகத்தியர் பாடல் பின்வருமாறு:–

"பணியவே வானனூல் சாத்திரங்கள்
பாரினிலே மாணாக்கள் அறியவென்று
துணியவே அருந்ததியினளவு தானும்
சூரியனார் சந்திரனார் குறிப்பு மார்க்கம்
கணித முடன் ஏழுவரை மண்டலங்கள்
கருவான சத்தமேகத் தினேர்மை
மணியவே அண்டத்தின் அளவுதானும்
மார்க்கமுடன் வானநூல் வேண்டும் பாரே!"[13]

என்று வருணரிசியிடம் அகத்தியர் சோதிட நூல் வேண்டுகிறார். மேலும், சோதிடத்தின் நுண்மையறி வதற்கு,

"வேண்டுமே நாள்கிழமை யறிவதற்கு
வெட்டவெளி யாகாசக் கணக்குத் தானும்
தாண்டவம்போல் கிராணத்தின் கணக்குத் தானும்
தகமையுடன் பூமியுட நேர்மை தானும்
ஆண்டு வகை அளவெடுக்கும் சூட்ச வேதம்
அப்பனே கருவி கரணாதி யந்தம்
தூண்டியதோர் கருமான மின்னும் சொல்வோம்
சூட்சாதி சூட்சமதைச் சொல்லுவீரே!"[14]

என்று அகத்திய முனிவர் வேண்டுவதையும் காணமுடிகிறது. அதற்குப் பதிலுரையாக வருணமகரிசி கூறும் பாடலாக,

"பத்தான பூமிநூல் ஆயி ரந்தான்
பண்பான சோதிடமும் எண்ணா யிரந்தான்
சித்தான பரிசித்துக் குபதே சித்த
சிறப்பான சுகர்ப்பதி னெண்ணா யிரந்தான்
முத்தான சுக்கிரனார் எண்ணா யிரந்தான்
மூதுலகில் சிறப்பான நூல்கள் யாவும்

*நித்தமுடன் தானுரைக்கும் பஞ்ச பட்சி*

*நீடான வினாடி யென்ற கிரந்த மாமே!"*[15]

என்று சோதிட நூல்கள் பல ஆயிரம் என்றும், பரிசித்துமகரிசி, சுகர்மகரிசி, சுக்கிரமகரிசி, ஆகியோர்களுக்கு உபதேசித்த சாத்திரமுறை நூல்களும் பஞ்சபட்சி சாத்திர, கிரந்தங்களும் நிறைய உள்ளதென்று வருணமகரிசி, அகத்தியரிடம் கூறுவதைக் இப்பாடலில் காணமுடிகிறது. சோதிடம் தொடர்பான நூல்களும், வகைகளும், அதன் காலத்தையும் கீழ்வருமாறு காணமுடிகிறது.

| ஆண்டு | ஆசிரியர் | நூல் | வகை |
|---|---|---|---|
| 1. "கி.பி.5ஆம் நூற்றாண்டு | ஆரியபட்டர் | ஆரியபட்டம் | சோதிடநூல் |
| 2. கி.பி. 10 " " | ஆரியபட்டர் (வேறு) | ஆரிய சித்தாந்திகா | கணிதசோதிடநூல் |
| 3. கி.பி. 1150 " " | பாஸ்கராச்சாரியர் | சித்தாந்த சிரோண்மணி | – |
| 4. கி.பி. 9 " " | மகாவீராச்சாரியர் | கணிதாச்சாரம் சங்கிரம் | – |
| 5. – | பாஸ்கரர் | லீலாவதி | கணித சாஸ்திரம் |
| 6. – | வராகமிகிரர் | பிரஹத்சமஹிதா | சோதிட நூல்"[16] |

தமிழர்கள், ஆரியர் வருகைக்கு முன்பே வான சாஸ்திரத்தில் சிறந்து விளங்கினார்கள். தமிழகப் பரதவர்கள் சந்திரனை மையமாகக் கொண்டுதான் சந்திரமான காலத்தைக் கணித்திருக்கிறார்கள். தமிழக உழவர்கள் சூரிய சந்திரனை அறிந்து வாழ்வை மேற்கொண்டனர். தமிழர்கள் மேட சங்கிர மானத்தின் அடிப்படையில் தமிழ்வருடப் பிறப்பைக் கொண்டாடினர். சித்திரை முதல் தேதியை புண்ணிய காலமாக் கருதி விழா எடுத்தனர். சூரியன் ஓர் இராசியைக் கடக்க 30 நாளாகிறது. சூரியனைச் சௌரமாதம் என்றும், சந்திரனைச் சாந்திரமாதம் என்றும் கூறிவந்தனர்.

ஆதியில் கார்த்திகை முதல் நட்சத்திரமாக எண்ணப்பட்டது இதற்கு முக்கியக் காரணம் சூரியன் கிருத்திகையில் பிரவேசம் செய்த போது மேஷாணம் (மேடராசி) நேரிட்டது, இதனைப் பிற்காலத்தில் வராக

மிகிரர் என்பவர் மாற்றியமைத்தார். சூரியன் பூமத்திய ரேகையை இரண்டு தடவை கடந்து விடும். ஒன்று மேஷ சங்கிரமானம் (பங்குனி இரண்டாவது வார இறுதியில்) நிகழும். இரண்டாவது துலாசங்கிரமானம் (ஐப்பசி முதல் தேதியில்) நிகழும். ஆதலால் தமிழர்கள் மேஷத்தைத் தமிழ் வருடபிறப்பாகக் கொண்டாடினர்.

## சித்தர்களின் சோதிட நூல்கள்

சோதிட நூல்களில் சித்தர் நூல்கள் பல அழிந்துவிட்ட நிலையில் புலிப்பாணிச்சித்தர் எழுதிய சோதிடகிரந்தம், பஞ்சபட்சி சாத்திரம் போன்ற நூல்கள் உள்ளன. இருந்தாலும் வட நூலார்களின் சாத்திர முறைகளும் கையாளப் பட்டுவருகின்றது. பிற்காலத்தில் ஆரியபட்டம், ஆரிய சந்திரிகா, சித்தாந்த சிரோண்மணி, கணிதாச்சாரம் சங்கிரம், லீலாவதி போன்ற நூல்களும் இக்கலைக்குப் பெரிதும் உதவுகின்றன.

## பஞ்சாங்கம் வளர்ந்த வரலாறு

சந்திரனை அதன் தேய்வு, வளர்ச்சி கொண்டு கணக்கிடும் முறை மிகப்பழமையானது. இதை 7ஆம் நூற்றாண்டில்தான் வராஹமிகிரர் சூரியனைக் கொண்டு கணக்கிடும் முறைக்கு வழி வகுத்தார்.

“சாலியவாகனன் என்ற அரசன் கி.பி.78 இல் பட்டத்திற்கு வந்து சோதிடக்கலைக்குக் கலங்கரை விளக்காக விளங்கியதோடன்றி தமிழ் ஆண்டு 60க்கும் பெயர்சூட்டி இந்தியா முழுவதும் இந்தப் பெயர் வழக்கத்தில் வரும்படி செய்தான். இவன் பெயரிலும் சாலியவாகனன் ஆண்டு நடை முறையில் உள்ளது.”[17]

கி.மு.56 இல் விக்கிரமாதித்தன் ஆட்சியும் சோதிடம் வளர்ச்சி பெற உதவியாய் இருந்தது. கி.பி.40இல் அரசனாக இருந்த போஜன் ஜோதிடர்களையும், ஜோதிட நூல்களையும் போற்றி வளர்த்திருக்கிறான்

அவர்கள் இருவர் பெயரிலும் ஆண்டுகள் வழங்கி வருகிறது. பாஸ்கரன் என்பவர் கி.பி.1150 இல் பாஸ்கரீயம் என்னும் நூல் எழுதினார். கி.பி.1234ல் 'உள்ளமுடையான்' ஜோதிடக் கணிதம் தோன்றியது. கிழமை, திதி, நாள், யோகம், கரணம் ஆகிய ஐந்தும் சேர்ந்தால் 'ஐந்திரம்' எனப்படும். இதற்கு முன்–கிழமை, திதி, நாள் ஆகிய மூன்றையும் வைத்து, 'திரியாங்கம்' மட்டுமே இருந்தது. இப்பஞ்சாங்கம் வந்து 140 ஆண்டுகள்தான் ஆகிறது என்கிறார் பெ. தங்கராஜு.

165 ஆண்டுகளுக்குமுன் யாழ்ப்பாணத்தில் சோமசேகரம் பிள்ளை முத்திறம் கணித்து வெளியிட்டார். அதன்பிறகு 25 ஆண்டுகள் கழித்து யாழ்ப்பாணம் பஞ்சாங்கம், திருநெல்வேலிப் பஞ்சாங்கம், இராமநாதபுரம் பஞ்சாங்கம், கருங்குளம் பஞ்சாங்கம், ஆற்காட்டுப் பஞ்சாங்கம் முதலியவை பல மாறுதலுடன் வெளிவருகின்றன.

திருவையாறு சுந்தரேச சிரௌதி நாவிகர் பஞ்சாங்கத்தை ஆதாரமாகக் கொண்டு கும்பகோணப் பஞ்சாங்கம் கணித்துத் திருக்கணிதப் பஞ்சாங்கம் என வெளியிட்டார். சி.கோவிந்தராச முதலியார் சென்னைக்கு ஆனந்த போதினித் திருக்கணிதப் பஞ்சாங்கம் எனப் பெயர் கொடுத்து தற்சமயம் வெளிவருகிறது.

இன்று நடைமுறையில் உள்ள 'காலண்டர்' எனும் நாட்காட்டி இலத்தீன் மொழியில் கணக்குப் புத்தகம் ஆகும். ஆங்கிலக் காலண்டர் முறை உரோமானியர் காலத்தில்தான் நாட்கள் கணக்கிலிருந்து மாதங்களாகப் பிரிக்கப்பட்டது; இதில் உள்ள ஏற்றத்தாழ்வுகளைத் திருத்தி ஒரே சீரான காலண்டர் உருவாகி 400 ஆண்டுகள்''[18] ஆகிறது.

கலியுகம் என்பது முன்னோர்கள் ஏற்படுத்திய ஒருயுகம் கி.மு.3102 ஆம் ஆண்டு பிப்ரவரி 17ஆம் தேதிக்கும் 18ஆம் தேதிக்கும் மத்தியில் தோன்றியதாகவும் அறியப்படுகிறது. தமிழர் கணக்குப்படி காலை சூரியன்

உதயம் முதல் மறுநாள் சூரியன் உதயம்வரை ஒருநாள் கணக்காகும். கிறித்தவ முறைப்படி இரவு 12 மணிக்குத் தொடங்கி மறுநாள் இரவு 12 மணிவரை ஒரு நாள் கணக்கு ஆகும், முகம்மதியர்களுக்குச் சூரியன் மறையும் நேரம் முதல் மறுநாள் சூரியன் மறையும் நேரம்வரை ஒருநாள் கணக்கு ஆகும்.

## சோதிடரின் பெயர்கள்

"சோதிடக்கலை மக்களுக்கு மட்டுமின்றி முதன்முதலில் அரசருக்கும், நாட்டுக்குமே பயன் அளிக்கும் விதத்தில் இருந்தது. சோதிடனைக் கணியன், அறிவன், காலக் கணிதன், வள்ளுவன், நிமித்திகன், உய்த்துணர்வோன், அறிவாளன், புரிநூல் உத்தமன் போன்ற பல்வேறு பெயர்களால் அழைத்தமை தமிழிலக்கியங்களில்"[19] குறிப்பிடப் பட்டுள்ளன.

## சோதிடரின் பணிகள்

1. பகைவர் நாடுமீது படையெடுக்கும் காலம் குறித்து எச்சரித்தல்.

2. நாட்டின் பருவநிலை அறிவித்தல்.

தமிழர்கள் சோதிட வானியல் ஆய்வைப் பருவகால ஆராய்ச்சிக்கு மட்டுமே பயன்படுத்தினர்.

1. நல்ல நாள் பார்த்து விதை விதைத்தல், நாற்றுநட, அறுவடை செய்யவும் நாள் பார்த்தனர்.

2. திருமணத்தை நல்லநாள் பார்த்துச் செய்தல்.

3. இறைவழிபாடு, விழாக்காலம், முடிசூட்ட, சந்திரகிரஹணம், சூரிய கிரகஹணம் ஆகியவற்றைத் தெரிவித்தல் சோதிடர்களின் பணிகளாக இருந்தது.

## சோதிடத்தின் உட்பிரிவுகள்

1. விரிச்சிகேட்டல், 2. வேலன் வெறியாட்டம், 3. சகுனம், 4. நாள் நிமித்தம், 5. புள்நிமித்தம், 6. பிற நிமித்தம், என்று ஆறுவகையும் கைரேகை, நாடி சோதிடம், பிரசன்ன சோதிடம் என்று பலபிரிவுகளாக இருந்து செயல்பட்டு வருகிறது. மேற்கூறியவற்றிலிருந்து சோதிடக்கலை தமிழரிடம் நம்பிக்கையுடன் இருந்து வருவதை அறியமுடிகிறது.

## அறிவியலும் அமாவாசையும்

பூமி சூரியனையும், சந்திரன் பூமியையும் சுற்றி வருகின்றன. அவ்வாறு சுற்றும் நிலையில் "பூமிக்கும் சூரியனுக்கும் இடையே ஏறக்குறைய ஒரே நேர்க்கோட்டில் சந்திரன் வரும்போது, பூமியை நோக்கியிருக்கும் சந்திரனின் பாகத்தில் ஒளிபடுவதில்லை. எனவே சந்திரனைப் பார்க்க முடியவில்லை. இந்நிகழ்ச்சி நிகழும் நாளையே 'அமாவாசை' என்பர். 'அமா' என்றால் 'அண்மை' என்றும், 'வாசி' என்றால் வசித்தல் என்றும் பொருள் கொள்ள வேண்டும் என்கிறார் அ.சிவபெருமான்."[20]

## அறிவியலும் பௌர்ணமியும்

சூரியனுக்கும், சந்திரனுக்கும் இடையே ஒரே நேர்க்கோட்டில் பூமி வரும்போது பூமியை நோக்கியிருக்கும் சந்திரனின் பாகத்தில் சூரிய ஒளி தெளிவாக்கப்பட்டுப் பிரதிபலிக்கப்படுவதால் பூமியிலுள்ளவர்கள் சந்திரனின் முழு உருவத்தையும் பார்க்க நேரிடுகிறது. சோதிடத்தில் இராசி மண்டலம் 12 ஆகவும் நட்சத்திரங்கள் 27 ஆகவும் பிரித்து சந்திராயன வீடு என்று அமைத்துள்ளனர்.

## வர்மக்கலை

அகத்தியரும் அவரைக் குருவாகக் கொண்ட சித்தர்களும் மருத்தவத் துறைக்கும், மானிட வர்க்கத்திற்கும் மாபெரும் கொடைகளை

நல்கியுள்ளனர். அதில் ஒன்று தான் வர்மக்கலை. மனித உடலை நுணுகி ஆராய்ந்து உயிரின் இரகசியத்தைக் கண்டறிந்தனர். அதைப்போன்று விலங்குகள், பறவைகள் ஆகிய அனைத்து உயிரினங்களையும் ஆராய்ந்து உயிரோட்டத்தின் மர்மங்களையும் கண்டறிந்தனர். அகத்தியரே வர்மக் கலையின் ஆசான், தந்தை எனலாம்.

### வர்மம் - சொற்பொருள்

"வர்மம் என்ற சொல்லை மர்மம் என்ற சொல்லின் திரிபாகக் கொள்ளலாம். மர்மம் என்பது மறைவான பகுதியைக் குறிக்கும், மறைவான பகுதி என்பது இதயத்தோடும் நரம்பு மண்டலத்தோடும் தொடர்புடைய பகுதிகளாகும். இப்படிப்பட்ட சில பகுதிகள் மென்மையாகத் தாக்கப்பட்டாலும் உயிருக்கு ஆபத்தை ஏற்படுத்தும், இதனையே வர்மப் பகுதிகள் என்று வர்மானியர்கள் கூறுவர்."[21]

### வர்மத்தின் மறுபெயர்கள்

"மர்மம், வாசி, புரவி, காற்று, உயிர், மாய்க, பிராணன், கலை, சுவாசம், சரம், யோகம், பரம், சிவம் என்னும் சொற்கள் வர்மத்தின் மறுபெயர்களாகும் என்று 'வர்ம சாஸ்திர சமஹாரம்' என்ற நூல் கூறுகிறது."[22] வர்மப்பிணிகள் அடிபடுதல், எறிவிசைகள், கம்புகள் தட்டல், எதிரிகள் வர்ம இடங்களில் பிடித்தல், விழுதல் போன்ற காரணங்களால் ஏற்படுகிறது. என்பதை 'ஒடிவு முறிவுசாரி' என்ற ஏடு விளக்குவதாக ஆல்பென்ஸ் நதானியேல் விளக்குகிறார்.

### வர்மம் பற்றிக் கூறும் ஏடுகள்

"பிரம்மநிலை சூத்திரம் 25, நரம்பற சூத்திரம் 35, வர்ம அளவுகோல் 36, வர்ம குருநாடி சாத்திரம் 36, வர்மகண்ணாடி 60, பீரங்கி 100, ஒடிவு முறிவு கெட்டு சூத்திரம் 106, வர்ம நரம்பற 108, கெட்டு

முறிவுசாரி 112, ஒடிவு முறிவு சாரி 112, வர்ம சூத்திரம் 136, வர்மசாரி 205, வாகட நிதானம் 350, வர்மநிதானம் 375, வர்மக் கண்ணாடி 500 ஆகிய நூல்களுல் மிகச்சிறந்த நூல் என்று பலராலும் ஏற்றுக்கொள்ளப் படுவது 'பீரங்கி 100'"[22] எனும் நூலாகும்.

வர்மக் கலையினை ஏடுகளில் வடித்துத் தமிழ் உலகுக்கு தந்தவர்கள் சித்தர் பெருமக்களாவர், இக்கலையைப் பெரிதும் பயன்படுத்தி வெற்றி கண்டவர்கள் குமரி மாவட்டத்து ஆசான்களாவர்.

## வர்மத்தின் வகைகள்

வர்மத்தின் மொத்த எண்ணிக்கை 108 எனினும் அவற்றைப் பிரிப்பதில் ஏட்டுக்கு ஏடு வேறுபடுகிறது. அவை படுவர்மம், தொடு வர்மம், தட்டு வர்மம், சூண்டு வர்மம், நோக்கு வர்மம் என ஐந்து வகையாகும். பூரண வர்ம பீரங்கி 100 என்ற ஏடு வர்மத்தைப் படுவர்மம் 12 என்றும் தொடுவர்மம் 96 என்றும் இருவகையாகப் பிரிக்கிறது. மேற்கூறிய வற்றிலிருந்து வர்மக் கலை பற்றிய செய்திகளை அறிய முடிகிறது.

## மருத்துவக்கலை

தொடக்க காலத்தில் உயிரினங்கள் நோய் நொடியில்லாமல் வாழ்ந்தன. நோய்கள் தோன்றிய காலத்தில் பறவைகளும் விலங்கினங்களும் சில மூலிகைகளை உண்டன. புறா உணவு செறிக்க அருகன்புல்லை உண்டது, நாய் வயிற்று வலியைத் தீர்க்க அருகன்புல்லை உண்டது. கீறி பாம்போடு சண்டையிட்ட போது பாம்பின் நஞ்சைப் போக்க சிறியா நங்கை என்னும் மூலிகைச் செடியில் உருண்டு புரண்டது. இதனைக் கண்ட மனிதர்களும் உடல் நச்சுக்களைப் போக்க மூலிகை மருத்துவமுறை களைக் கண்டனர். மேலும் மனிதன் தொடக்க காலத்தில் இயற்கையோடு வாழ்ந்ததால் நோய் தோன்றுவதற்குத் தனக்கு அப்பாற்பட்ட சத்தி இயக்குவதாகக் கருதினான். அவ்வாறன சத்திகள் கடவுளின் கோபம்

மற்றும் அகால மரணமடைந்தவர்களின் ஆவிகள் போன்றவற்றால் ஏற்படுகின்றன என்று நம்பினர். அதனைக் கட்டுப்படுத்த மந்திரங்களைப் பயன்படுத்தினர். மந்திரத்தைப் பயன்படுத்தி உடல் பிணியைத் தீர்த்தவர்களை மந்திரவாதிகள் என்று மக்கள் அழைத்தனர். மேற்கூறியவற்றிலிருந்து நோய் நீக்குவதற்கு இருவகை முறைகளான மருந்து, மந்திரம் பயன் பாட்டில் இருந்ததை அறிய முடிகிறது.

## தமிழ்ச் சமூகத்தில் மருத்துவம்

தமிழ்ச் சமூகத்தில் சங்க காலம் தொட்டு மருத்துவம் தொடர்பான குறிப்புக்கள் காணப்படுகின்றன. நோயின் தன்மைகளுக்கேற்ப மருந்துகளை ஆராய்ந்து கொடுப்பவனை 'அறவோன்' என்று நற்றினை கூறுகிறது. தொல்காப்பியர் மருந்து என்னும் சொல்லை 'உறை' என்ற பொருளில் கையாளுகின்றார். மேலும் திரிகடுகம், சிறுபஞ்ச மூலம், ஏலாதி போன்ற தமிழ் நூல்கள் மருத்துவப் பெயரைக் கொண்டு அமைந்துள்ளன. மேற்கூறிய வற்றிலிருந்து தமிழ்ச்சமூக மருத்துவ வரலாறானது நீண்ட நெடிய பரம்பரியத்தைக் கொண்டது என்பது விளங்குகிறது.

## உலக மருத்துவ வகைகள்

உலகில் பொதுவாக ஆங்கில மருத்துவம், ஆயுள்வேதம், ஓமியோபதி, யுனானி, சீன மருத்துவம் எனப் பல்வேறு மருத்துவ முறைகள் உள்ளன.

சித்த மருத்துவத்தைச் சித்தர்கள் கண்டுபிடித்தனர். இம் மருத்துவ முறையில் நோய் தோன்றிய உடலில் எதிர்ப்பாற்றலை உருவாக்கி அதன் மூலம் நோயைக் குணப்படுத்துவது வருமுன் காக்கும் மருத்துவமாகும்.

ஆயுள் வேதம் வடஇந்தியாவில் தோன்றியதாகும். இம்மருத்துவ முறையில் தன்வந்திரி என்பவர் குறிப்பிடத்தக்கவர் ஆவர். இவரை இம் மருத்தவத்தின் தந்தையென அழைக்கின்றனர்.

ஓமியோபதி செர்மனியில் தோன்றியதாகும். இம் மருத்துவ முறையில் நோய்க் கிருமியே நோயைக் குணப்படுத்தும் என்பதாகும். இதனைத் தோற்றுவித்தவர் செர்மனியைச் சேர்ந்த சாமுவேல் 'ஆனிமன்' என்பவர் ஆவார்.

## மருத்துவ முறைகள்

சித்தர்கள் சொன்ன மருத்துவ முறையில் மாந்தர்களுக்கு, மருத்துவ சிகிச்சை அளிக்கும் முறையில் அதனை மூன்று பிரிவுகளாப் பிரித்தனர். அவை

1. "தேவமருத்துவம். 2. மானிட மருத்துவம் 3. அசுர மருத்துவம் ஆகிய மூன்றுவகையாகும்."[23]

1. **தேவ மருத்துவம்:-** இரசம், கந்தகம், பாடாணம், உப்பு, உலோகம் இவற்றின் வகைகளால் செய்யப்பட்ட பற்பம், செந்தூரம், சுண்ணம், மெழுகு, பதங்கம், கட்டு, உருக்கு, களங்கு முதலியவை உயர்ந்த மருந்துகளாகும் இது தேவ மருத்துவமாகும்.

2. **மானிட மருத்துவம்:-** செடி, கொடி, வேர், இலை, பூ, கிழங்குகளைக் கொண்டு செய்யப்பட்ட குடிநீர், சூரணம், மணப்பாகு, மாத்திரை, இளகம் (இலேகியம்) இரசாயனம் முதலியன மானிட மருத்துவமாகும்.

3. **அசுர மருத்துவம்:-** அசுர மருத்துவம் என்பது வேதனையோடு, உடலில் ஏற்படும் காயங்கள், வெட்டு, குத்துப்பட்ட இடங்களில், எலும்பு முறிந்த நிலையில், அல்லது ஆணி, முள் போன்ற கூர்மையான ஆயுதங்கள் குத்தி உட்சென்ற நிலையில் அதனை அறுவை சிகிச்சை, அல்லது கீறல் முறையில், கீறி குருதிவாங்கி சிகிச்சையளித்து உயிர் வாழ வகை செய்யும் முறையாகும். கடினமும் வேதனையும் மிகுந்தது. ஆதலால் இது 'அசுர' மருத்துவமாகும்.

**நாடி மருத்துவம்**

சித்தர்கள் நோய் நாடல் முறையில் மாந்தர்களுக்கு மருத்துவம் கண்டனர். எவ்வாறெனில் இதயத்தின் இடது சடலம் குவியும்போது இரத்தம் கண்டரையின் வழியாகச் சென்று சகல நாடிகளுக்கும் பாயும் அப்போது நாடிகள் விரியும். மறுபடியும் இடது சடலம் விரியும்போது நாடி நரம்புகளில் இருக்கும் இரத்தம் குறைந்து நாடி சுருங்கும். இவ்விதமாக இதயம் சுருங்கவும், விரியவும் இருப்பதால் இதனுடன் சேர்ந்த நாடி நரம்புகளும் விரிந்து சுருங்கும் தனிமையுடையதாய் இருக்கிறது. இதை நாடி நடையென்று சொல்லப்படுகிறது.

**நாடித்துடிப்பு - முப்பிணிகள்**

சித்தர்கள் தன் மாணவர்களுக்குப் புரியும் படியாக நாடி நடையின் நிதானத்தை அறிய வேண்டியும், நாடியின் வன்மை, மென்மையை நன்குணர்ந்தாலன்றித் தொந்தங்கள் அறியப் படாமை பற்றியும் நாடியின் துடிப்பிற்கு அளவின்னதென்றும் தெளிவித்தனர். குறிப்பாக நாடிகளின் (மாத்திரை) அன்னம், கோழி, தவளை, பாம்பு முதலிய ஜீவ ஐந்துக்களின் நடையை ஒத்திருப்பதால், இதனைக் கீழ்வரும்பாடல் மூலம்

*"வழங்கிய வாதம் மாத்திரை யொன்றாகில்*
*தழங்கிய பித்தந் தன்னி லரைவாசி*
*அழங்குங் கபந்தான டங்கியே காலோடில்*
*பிறங்கிய சீவர்க்குப் பிசகொன்று மில்லையே"* [24]

அதாவது, வாதம்–1, பித்தம் 1/2, கபம் 1/4 என்பது சித்தர்களின் நாடி நிதான கணக்காகும்.

மேலும் அவ்வகை நாடி நடப்பு எவ்விதத்தில் நடக்கும் என்பதை,

*'பாம்பென வாதநாடி பகுப்புடன் சர்ப்பம் போலும்*
*வேம்பெனப் பித்தந்தானும் விரும்பு மண்டூகம் போலும்*
*சாம்பெனச் சிலேத்துமநாடி சடுதியிலன்னம் போலும்*
*நாம்பெனப் பெண்களுக்கு நாடிதானடக்குந்தானே!'*

என்று கூறுவதிலிருந்து

1. வாதம் – காற்று – வளி (சர்ப்பம், தவளை, ஆமை)

2. பித்தம் – நெருப்பு – அழல் (மயில், அன்னம்)

3. சிலேத்துமம் – தண்ணீர் – ஐயம் (கோழி, கொக்கு)

இம்மூன்றில் சொல்லப்பட்டுள்ள அளவுகளில்''[25] ஒன்று மிகுத்தும், அல்லது குறைந்தும் இருப்பின் [illegible] அல்லது ஒன்றை ஒன்று தொந்தித்திருப்பின் நோய்மிகும், இதனையே வள்ளுவர்,

*''மிகினும் குறையினும் நோய் செய்யும் – நூலோர்*
*வளிமுதலா எண்ணிய மூன்று''*[26]

என்று வளியாகிய வாதத்தை முன்வைத்துக் கூறுகிறார்.

இவ்வகை நாடியன்றி மரணநாடியும், சரீர இலட்சணமும், ஜன்னி நாடியும், பூத நாடியும், கருப்ப நாடியும், நிறச் சோதனையும், விழி, பேச்சு, மலம், நீர், நாக்கு போன்ற பார்வை மூலமும் நோயின் தன்மையைக் கண்டறிந்தனர்.

## பிற மருத்துவ முறைகளும், கர்த்தாக்களும்

யுனானி மருத்துவம் அரபு நாட்டில் தோன்றியதாகும். இம் மருத்துவம் மொகலாயர் ஆட்சிக்காலத்தில் இந்தியாவில் அறிமுகம் செய்யப் பட்டது. இன்றும் மக்கள் இம்மருத்துவ முறையைப் பயன்படுத்தி வருகின்றனர்.

அலோபதி என்னும் ஆங்கில மருத்துவமுறை கிரேக்கத் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டதாகும். நவீன மருத்துவத்தின் தந்தையாக 'இப்போகிரேட்ஸ்' எனும் அறிவியல் மேதை கருதப்படுகிறார். இம் மருத்துவ முறையில் நோய்க் கிருமியை அழிப்பதன் மூலம் நோயைக் குணப்படுத்தலாம் என்பதாகும்.

"சீன மருத்துவத்தின் தந்தை என 'சென்நுங்' அழைக்கப் படுகிறார். இவரின் நூல்கள் 'சென் நுங் பென் சாவோ' 'பென்சாவோ காங்மு' என்பதாகும். இந்நூலில் 1892 மருந்துகள் குறிப்பிடப்பட்டுள்ளன. மூலிகைகளும், வேர்களும், உயிர்வர்க்கங்களும் மருந்தாகக் கொள்ளப் பட்டது. சீனர்களும் தமிழர் மருத்துவம், தத்துவம் போன்று 'அண்டத்தின் குறுமையே பிண்டம்' என்ற தத்துவத்தில் மருத்துவம் கண்டனர்."[27] இவர்கள் நாடி மருத்துவமுறையையும் 'அக்குபங்சர்' என்னும் ஊசியை உடம்பில் குத்தும் அலகு மருத்துவத்தையும் கண்டறிந்தனர்.

இதேபோன்று எகிப்து மருத்துவம், மெசபடோமிய மருத்துவம், பாலஸ்தீன மருத்துவம், பெர்சிய மருத்துவம், கிரேக்க மருத்துவம், கிரேக்க – உரோமானியர் மருத்துவம் என்று பல்வேறு நாகரிக முதிர்ச்சிப் பெற்ற நாடுகளின் மருத்துவ முறைகள் கையாளப்பட்டு வருகிறது.

## சித்த மருத்துவத்தோற்றம்

சித்த மருத்துவம் முதற்சித்தரான சிவபெருமானால் தோற்றுவிக் கப்பட்டு மருத்துவ முறைகளை நந்திக்கும், திருமூலருக்கும், அகத்தியருக்கும் தெளிவித்துப் பின்பு போகர், கருவூரார், தேரையர் ஆகியோர்களுக்குக் கூறப்பட்டு மேலும் பல சித்தர்கள் மூலம் போற்றி வளர்த்ததாகும். சித்த மருத்துவ முறையின் நூல்கள் யாவும் தமிழ்மொழியில் ஓலைச் சுவடிகளாக உள்ளன. தமிழர்கள் வாழும் இடமெங்கிலும் இம்முறை நடை முறையில் உள்ளது. இது வேதகாலத்திற்கும் முற்பட்ட மருத்துவமாகும்.

*'பாம்பென வாதநாடி பகுப்புடன் சர்ப்பம் போலும்*
*வேம்பெனப் பித்தந்தானும் விரும்பு மண்டூகம் போலும்*
*சாம்பெனச் சிலேத்துமநாடி சடுதியிலன்னம் போலும்*
*நாம்பெனப் பெண்களுக்கு நாடிதானடக்குந்தானே!'*

என்று கூறுவதிலிருந்து

1. வாதம் – காற்று – வளி (சர்ப்பம், தவளை, ஆமை)

2. பித்தம் – நெருப்பு – அழல் (மயில், அன்னம்)

3. சிலேத்துமம் – தண்ணீர் – ஐயம் (கோழி, கொக்கு)

இம்மூன்றில் சொல்லப்பட்டுள்ள அளவுகளில்''[25] ஒன்று மிகுத்தும், அல்லது குறைந்தும் இருப்பின் [illegible] அல்லது ஒன்றை ஒன்று தொந்தித்திருப்பின் நோய்மிகும், இதனையே வள்ளுவர்,

*''மிகினும் குறையினும் நோய் செய்யும் – நூலோர்*
*வளிமுதலா எண்ணிய மூன்று''*[26]

என்று வளியாகிய வாதத்தை முன்வைத்துக் கூறுகிறார்.

இவ்வகை நாடியன்றி மரணநாடியும், சரீர இலட்சணமும், ஜன்னி நாடியும், பூத நாடியும், கருப்ப நாடியும், நிறச் சோதனையும், விழி, பேச்சு, மலம், நீர், நாக்கு போன்ற பார்வை மூலமும் நோயின் தன்மையைக் கண்டறிந்தனர்.

## பிற மருத்துவ முறைகளும், கர்த்தாக்களும்

யுனானி மருத்துவம் அரபு நாட்டில் தோன்றியதாகும். இம் மருத்துவம் மொகலாயர் ஆட்சிக்காலத்தில் இந்தியாவில் அறிமுகம் செய்யப் பட்டது. இன்றும் மக்கள் இம்மருத்துவ முறையைப் பயன்படுத்தி வருகின்றனர்.

அலோபதி என்னும் ஆங்கில மருத்துவமுறை கிரேக்கத் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டதாகும். நவீன மருத்துவத்தின் தந்தையாக 'இப்போகிரேட்ஸ்' எனும் அறிவியல் மேதை கருதப்படுகிறார். இம் மருத்துவ முறையில் நோய்க் கிருமியை அழிப்பதன் மூலம் நோயைக் குணப்படுத்தலாம் என்பதாகும்.

"சீன மருத்துவத்தின் தந்தை என 'சென்நுங்' அழைக்கப் படுகிறார். இவரின் நூல்கள் 'சென் நுங் பென் சாவோ' 'பென்சாவோ காங்மு' என்பதாகும். இந்நூலில் 1892 மருந்துகள் குறிப்பிடப்பட்டுள்ளன. மூலிகைகளும், வேர்களும், உயிர்வர்க்கங்களும் மருந்தாகக் கொள்ளப் பட்டது. சீனர்களும் தமிழர் மருத்துவம், தத்துவம் போன்று 'அண்டத்தின் குறுமையே பிண்டம்' என்ற தத்துவத்தில் மருத்துவம் கண்டனர்."[27] இவர்கள் நாடி மருத்துவமுறையையும் 'அக்குபங்சர்' என்னும் ஊசியை உடம்பில் குத்தும் அலகு மருத்துவத்தையும் கண்டறிந்தனர்.

இதேபோன்று எகிப்து மருத்துவம், மெசபடோமிய மருத்துவம், பாலஸ்தீன மருத்துவம், பெர்சிய மருத்துவம், கிரேக்க மருத்துவம், கிரேக்க – உரோமானியர் மருத்துவம் என்று பல்வேறு நாகரிக முதிர்ச்சிப் பெற்ற நாடுகளின் மருத்துவ முறைகள் கையாளப்பட்டு வருகிறது.

## சித்த மருத்துவத்தோற்றம்

சித்த மருத்துவம் முதற்சித்தரான சிவபெருமானால் தோற்றுவிக் கப்பட்டு மருத்துவ முறைகளை நந்திக்கும், திருமூலருக்கும், அகத்தியருக்கும் தெளிவித்துப் பின்பு போகர், கருவூரார், தேரையர் ஆகியோர்களுக்குக் கூறப்பட்டு மேலும் பல சித்தர்கள் மூலம் போற்றி வளர்த்ததாகும். சித்த மருத்துவ முறையின் நூல்கள் யாவும் தமிழ்மொழியில் ஓலைச் சுவடிகளாக உள்ளன. தமிழர்கள் வாழும் இடமெங்கிலும் இம்முறை நடை முறையில் உள்ளது. இது வேதகாலத்திற்கும் முற்பட்ட மருத்துவமாகும்.

## சித்த மருந்துகளின் வகைகள்

சித்தர்கள் கண்டுபிடித்த "சித்த மருந்துகளின் வகைகள் 64 ஆகும். அதில் அக மருந்து 32, புறமருந்து 32 ஆகும். இம்மருந்துகள் மனித உடம்பில் 3 மணி முதல் 3000 ஆண்டுகள் வரையிலும் உடல்களில் தங்கியிருந்து செயல்படக் கூடியதாகும் என்று சித்த மருத்துவ வரலாறு கூறுகிறது."[28]

## அகமருந்துகள் 32

அக மருந்தாகிய முப்பத்திரெண்டும் மூலிகை பாடாண வகையாகும் அவை, சுரசம், சாறு, குடிநீர், கற்கம், உட்களி, அடை, சூரணம், பிட்டு, வடகம், வெண்ணெய், மணப்பாகு, நெய், இரசாயனம், இளகம், எண்ணெய், மாத்திரை, கடுகு, பக்குவம், தேனூறல், தீநீர், மெழுகு, குழம்பு, பதங்கம், செந்தூரம், பற்பம், கட்டு, களங்கு, உருக்கு, சுண்ணம், கற்பம், சத்து, குருகுளிகை. (இரசத்தை மூலிகைச் சாறுகள் மூலம் கட்டி மணியாய் செய்தல் குருகுளிகையாகும்) ஆகியனவாகும்.

## புறமருந்து 32

புறமருந்தாகிய முப்பத்திரெண்டும் மூலிகைகள் மூலம் வெளிப் பிரயோகமாகக் கீழ்வருமாறு கையாளப்பட்டு வருகிறது. அவை,

கட்டு, பற்று, ஒற்றடம், பூச்சு, வேது, பொட்டணம், தொக்கணம், புகை, மை, பொடிதிமிர்தல், கலிக்கம், நசியம், ஊதல், நாசிகாபரணம், களிம்பு, சீலை, நீர், வர்த்தி, சுட்டிகை, சலாகை, பசை, களி, பொடி, முறிச்சல், கீறல், காரம், அட்டைவிடல், அறுவை, கொம்புகட்டல், உறிஞ்சல், குருதிவாங்கல், பீச்சு முதலியனவாகும்.

## மருந்து தயாரிக்கும் முறைகள்

சித்தர்கள் மருந்து தயாரிப்பதில் பல்வேறு நுணுக்கமான முறைகளைக் கையாண்டனர். சித்தர்களின் மருத்துவ இலக்கணமாக அமைவது சட்டை முனி வாத காவியத்திலுள்ள பாடல் வரியே ஆகும்.

*"வேர்பாரு தழைபாரு மிஞ்சினக்கால்*
*மெல்ல மெல்ல பற்ப செந்தூரம் பாரே!"*[29]

எனக் கூறுவது போன்று நோய்க் கேற்றவாறு மருந்தளிப்பதாகும்.

சித்தர்களின் மருத்துவப் பயன்பாடுகளில் சிறப்புமுறைகள்

1. ஏகமூலிகைப் பயன்பாடு
2. மாரணப் பயன்பாடு
3. திராவகப் பயன்பாடு
4. செயநீர் பயன்பாடு
5. முப்புச் சுண்ணப் பயன்பாடு

என ஐந்து வகைப்படுத்தியுள்ளனர் அதோடன்றி,

மூலிகைத் தாவரங்களிலிருந்தும், உலோகங்களிடமிருந்தும், பாடாண வகைகளைப் பயன்படுத்தியும், காரசாரங்களைப் பயன் படுத்தியும், உப்புக்களைப் பயன்படுத்தியும் மருந்துகள் தயாரித்ததுடன், தாது ஜீவப் பொருட்கள் என்கிற ஆமை ஓடு, மனித எலும்பு, நாய் எலும்பு, கோழி முட்டை, ஓடுகள், புறா, முயல், மயில் போன்ற உயிர்களின் குருதிகள், மான் கொம்புகள், கஸ்தூரி, கோரோசனை, புனுகு, ஜவ்வாது போன்ற நறுமணப் பொருள்கள் மற்றும் பசுவின் மூத்திரத்திலும், மனிதனின் சிறுநீற்றிலும் மருத்துவம் கண்டனர். முப்பு போன்ற கற்ப மருந்துகளை மூத்திரம் எனும் அமுரி மூலமாகவும், பூநீர் எனும் வழலை மண் மூலமாகவும் மருந்துகள் தயாரித்து மரணத்தையும் வென்று வாழலாயினர்.

சித்தர்கள் மருத்துவமுறையில் ஏக மூலி மருத்துவம் எனும் ‘சிட்கா’ மருந்துகள் சிறப்பு மிக்கதாகும். இதனை ஊர்வசி எனும் பெண் சித்தரால் உருவாக்கப்பட்டு, ‘ஊர்வசி சிட்கா’ எனும் பெயரில் நிலவி வருகிறது.

## கற்ப மூலிகை (காய கற்ப மருந்துகள்)

சித்தர்கள் மனித உடம்பின் கூறுகளையும், தத்துவங்களையும் அறிந்தபின் அதற்கேற்றவாறு உயிரணுக்கள் அழியாதவாறும், இறந்த அணுக்களை நீக்கிப் புது அணுக்களை உருவாக்கியும் மனித உடல் கெடாமலும், நோய், தட்ப வெப்ப நிலைகளால் தாக்காதவாறும் சிகிச்சை மேற்கொண்டனர். வாத, பித்த, கபம் என்னும் முக்குற்றங்கள் தன்னிலையில் மாறாதவாறு மூலிகையிலும் மரணம் மாற்றும் மருந்துகளையும் கண்டறிந்தனர். அவை இராமலிங்க அடிகளின் திருஅருட்பாவில் காய சித்தி மூலிகையாக வகைப்படுத்தப்பட்டுள்ளன. அதனைக் கீழ்க்கண்டவாறு மூலிகைகள்,

1. கல்புகுவெள்ளி. 2. காஞ்சிரம், 3. நாறுங்கரந்தை, 4. சீந்தில், 5. தென்னை, 6. நெபத்திகை, 7. புளியாரை, 8. பொற்றலைக் கையாந்தகரை (கரிசாலை) 9. சர்க்கரை வேம்பு, 10. பேயன்வாழை ஆகியனவும் மேலும் குமரி எனும் கற்றாழை, கஞ்சா, வல்லாரை, போன்ற மூலிகைகளையும் சித்தர்கள் கண்டறிந்துள்ளதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

## தேகசித்தி மூலிகை

மனித உடலை நோய்க்கு ஆளாக்குவதில் முக்குற்றம் எனப்படும் வாத, பித்த, கபத்தின் பங்கு மகத்தானது. அவை தரும் நோய்களுக்குத் தக்கவாறு, உடலைச் சித்தியாக்கவும் மூலிகைகள் கையாளப்பட்டு வந்தது அவை,

1. எருமைக்கனைச்சான், 2. நன்னாரி, 3. கரிசலாங்கண்ணி ஆகியவை உடலிற்கு சித்திபளிப்பதாகவும், மேலும் “1. உரோமவிருட்சி,

2. கருநெல்லி ஆகியவை சகல சித்திகளுக்கும் மருந்தாகக் கூறப்பட்டுள்ளது. நெல்லிக்கனியின் சிறப்பு சங்ககாலத்தில் அதியமான் என்னும் அரசன் ஔவைக்குக் கருநெல்லிக்கனி வழங்கியதிலிருந்து தெரியவருகிறது.''[30]

**சித்தர்களும் அவர்கள் உண்ட காயகற்ப மூலிகைகளும்**

1. திருமூலர் – கரிசாலை (கரிசலாங்கண்ணி)

2. போகர் – குமரி (வான்குமரி எனும் கற்றாழை)

3. காலாங்கி நாதர் – கரந்தை (சிவ கரந்தை, விட்டுணுகரந்தை)

4. கோரக்கர் – கஞ்சா

5. இராமதேவர் – கருநெல்லி

6. சிவயோகிகள் – கரிசாலை, இவைகளின்றி சில மூலிகைகளையும், தன்மைகளையும் கீழே காணலாம்.

திருமூலர் கரிசலாங்கண்ணியை உண்டு காய சித்தி அடைந்ததை,

*'தின்ற கரிசாலை தேகந்திரை போக்கும்*
*தின்ற கரிசாலை சிறந்த நரை போக்கும்'*

என்று திருமந்திரப் பாடலில் குறிப்பிடுகிறார். சுந்தரானந்தர் எனும் சித்தர் வல்லாரையை ஒரு ஆண்டு உண்டு வந்தால் முக்தி கிடைக்கும் என்கிறார்.

*'முக்திபெற வல்லாரை வருடமொன்று*
*நித்தியந்த னொரு பருவங் கொண்ட பின்பு'*

என்கிறார்.

இஞ்சி, சுக்கு, கடுக்காய் சேர்ந்த மருந்துகளை ஒரு காயகற்பம் என்று தேரையச் சித்தர் பாடல் கீழ்வருமாறு,

*"காலையில் இஞ்சி, கடும்பகல் சுக்கு*
*மாலையில் கடுக்காய்*
*மூவேளையும் உண்போர்*
*கோலையும் வீசி நடக்கலாம்*
*விருத்தரும் பாலராகலாம்"* [31]

என்று குறிப்பிடுகிறது. இவ்வாறு சித்தர்கள் மூலிகைகளிலும், கற்ப மருந்து செய்து சாப்பிட்டு உடலை நிலை நிறுத்தினர் என்பது தெளிவாகிறது.

## சித்தர்களின் இரசவாதக்கலை

சித்தர்கள் கலைகளில் தலையாயது யாதெனில் இரசவாதக் கலையைக் குறிப்பிடலாம். ஓடுகின்ற உலோகமான இரசத்தை (மெர்க்குரி) ஓடாமல் கட்டி,'கட்டு' எனும் மருத்துவ முறையில் மணியாக்கி, இரசமணி என்று பெயரிட்டனர். இது நெருப்புக்கு உருகாது நிற்கின்ற ஆற்றல் வாய்ந்ததாகும். இம்மணியை இரசம் மட்டுமின்றி வீரம், பூரம், லிங்கம், தாளகம், வெள்ளைப் பாடாணம் ஆகியவற்றிலிருந்தும் பதங்கமாக்கிச் செய்தனர். 'கட்டு', 'களங்கு' என்னும் மருந்துகளைச் செய்தும், தங்கமாகவும் மாற்றி உள்ளனர். இரசமணி மூலமாக வானிலும், நிலத்திலும் வேகமாக நடக்கின்ற ஆற்றலை பெற்றிருந்ததாக இரசவாதக்கலை தெரிவிக்கிறது. இதை வைத்துக் கொண்டு மூன்று அண்டங்கள் என்னும் மூவுலகையும் சுற்றி வந்ததாகக் கருவூரார் பலதிரட்டு எனும் நூல் குறிப்பிடுகிறது.

*"....பார்பதிக்கு ஈசனங்கே பகர்ந்த வித்தை*
*வித்தாக்கி பணவிடைதான் சூதத்தூட்ட*
*வெண்ணையால் உமிநீரால் மர்த்திச் சாக்கால்*
--------------------------------
--------------------------------
*மூதண்டம் சுத்திவரும் முடிவு மாமே!"* [32]

என்று இதன் மேன்மையைக் கூறுகிறது.

இதிகாசத்தில் இராவணன் என்னும் இலங்கை மன்னன். ஓர் அரிய இரசமணி அணிந்து எட்டுதிக்கும் வென்று வந்ததாக சூ.நிர்மலாதேவி குறிப்பிடுகிறார்.

இரசவாதம் என்பது ஒரு தாழ்ந்த உலோகத்தை உயர்ந்த உலோகமாக (பொன்னாக) மாற்றுவதாகும். இதேபோன்று அழிகின்ற மனித உடலை அழியாமல் காத்தனர். இரசவாதத்தின்மூலம் நரை, திரை, மூப்பினை மாற்றினார்கள். கொங்கணச்சித்தரும், சிவவாக்கியச்சித்தரும், போகரும் இக்கலையில் மிகவும் சிறப்புற்றிருந்தனர் என்பது தெரியவருகிறது. உலோகங்களில் மட்டும் இரசவாதம் செய்யாமல் மூலிகை மூலமாகவும் செம்புச் சத்திளைக் கையாண்டுள்ளனர் என்பதை அறியமுடிகிறது. கீழ்க்காணும் செம்புச் சத்து மூலிகைகளைப் போகர் கூறுகிறார் அவை,

*"காணப்பா மூலிகையிற் செம்பு சொல்வேன்*
*கலந்தவுரி ஓரிதழ்த் தாமரையும் கேளு*
*பூணப்பா புளியரணை கோவை யோடே*
*புகழ் சிவந்த கொடிவேலி சிறிய கீரை*
*ஆணப்பா செந்திராயிப் பிடாரடுக்கி*
*யப்பனே கரிசாலை அங்க பாதி*
*தோணப்பா செவ்வல்லி கறுத்த செம்பை*
*சுகமான செங்கீரை கௌதும்பை யாமே!"* [33]

என்று இப்பாடலில் பதினான்கு வகை செம்புச்சத்துள்ள மூலிகைகளைக் குறிப்பிடுகிறார்.

இவ்வாறாகச் சித்தர்கள் மருத்துவக் கலையில் மட்டுமின்றி இரசவாதக்கலையின் மூலமாகவும் தேர்ச்சி பெற்று உலோக அறிவியலில் சிறந்து விளங்கினர். இம்முறையில் சிறந்து விளங்கிய போகர் நவ

பாடாணங்களின் கூட்டுக் கலவையால் பழனி முருகன் சிலையை வடித்து இன்றும் மக்களால் பூசிக்கப்பட்டு வருகிறது. போகரின் சமாதியும் அங்கே காணப்படுகிது என்பதைச் சித்தர்கள் வாயிலாக அறிய முடிகிறது.

## நோய்களும் மருந்துகளும்

சித்த மருத்துவத்தில் வாத நோய்கள், பித்தநோய்கள், கபநோய்கள் ஆகியவை மனிதனுக்குத் தொல்லை தருவன. அவற்றை நீக்குவதற்குச் சில மூலிகைகள் குறிப்பிடப்படுகிறது.

1. "முசு முசுக்கை என்னும் கொடியின் வேரைப் பசும்பாலில் ஊற வைத்து உலர்த்தி இடித்துச் சூரணித்துப் பசும்பாலில் உட்கொள்ள இருமல் தணியும்.

2. பொன்னாங்கண்ணி ஒரு பங்கு, கரிசலாங்கண்ணி முக்கால் பங்கு ஆகியவற்றை நன்றாக நீரில் வேகவைத்து அந்நீரில் மிளகுப் பொடிச்சேர்த்து, நெய்யிலிட்டுச் சீரகத்தில் தாளித்துச் சாப்பிட உடல் மெலிவு, ஈளை, சுக்கிலக் கெடுதல் போன்றவை குணமாகும்.

3. நீர்க்கோவை என்னும் தலை நீர்யேற்றம், பீனிசத் தலைவலி, வாத பித்த சூலை, மலபந்தம் ஆகியவற்றிற்குச் சுக்கு நல்ல மருந்தாகும். இதனைச் சுண்ணாம்பில் மேல் கவசம் செய்து மீண்டும் மஞ்சள், எருமைச்சாணம் இவற்றிலும் கவசம் செய்து வெயிலில் உலர்த்தி கவசங் கருகச் சுட்டுமேல் தோலை நீக்கி பனங்கற் கண்டு போட்டுக் காய்ச்சி இளஞ்சூடாக அருந்த மேற்கண்ட பிணிகள் நீங்கிவிடும்.

4. உடல் வலிவிற்கு மிளகை, பேயன்வாழைக்கிழங்கு, இளநீர், கரி சாலைச்சாறு, பொன்னாங்கண்ணிச்சாறு, பசுங்கோமயம்,

பசும்பால் ஆகியவற்றில் ஊறவைத்து நிழலில் உலர்த்திப் பசும்பாலில் கற்கண்டு சேர்த்து சாப்பிட உடல் வலிமையாகும்.

5. உடல் சூடு, கண்ணெரிச்சல் போன்றவற்றிற்குக் கஸ்தூரி மஞ்சள், வேப்பம்பருப்பு, வெள்ளை மிளகு, கடுக்காய்த் தோல், நெல்லி வற்றல் இவற்றைப் பாலில் காய்ச்சி அரைத்துத் தலையிலும் உடம்பிலும் தேய்த்துக் கொண்டு குளிக்க மேற்சொல்லப்பட்ட வேதனை நீங்கும்.''[34]

இவ்வாறு மூலிகையின் பண்புகளை அறிந்து கொள்ள முடிகிறது.

**அறியவருவன**

சித்தர்கள் அருளிய நூல்கள் வாயிலாக யோகம், மருத்துவம் முதலிய கலைகளுக்கு ஆதியிலிருந்து முதற்சித்தராகிய சிவபெருமான் தோற்றுவாயாக அமைந்தார் என்பது தெரியவருகிறது. யோகக்கலை உடலையும், மனத்தையும் அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்பட்டது புலனாகிறது. சித்தர்கள் அடயோகம், இலய யோகம், அட்டாங்க யோகம், வாசியோகம் முதலிய யோகப் பயிற்சிகளை மேற்கொண்டு எண் வகைச் சித்திகளையும் ஆற்றல்களையும் பெற்றனர் என்பதை அறிய முடிகிறது.

தமிழர்கள் மருத்துவமான சித்த மருத்துவம் உணவே மருந்து மருந்தே உணவு என்னும் கொள்கையை அடிப்படையாகக் கொண்டது. அறுசுவை உணவைக் கையாள்வதன் மூலம் உடலில் ஏற்படும் நோய்களை நீக்கியதும் தெரியவருகிறது. உடலை மட்டுமல்லாது மனத்திற்கு வருகின்ற துன்பங்களைப் போக்கிக் கொள்வற்கும், வாழ்வைச் செம்மையுறச் செய்யவும் எதிர்காலத்தை அறியவும் சோதிடம் அவசியமான ஒன்றாக விளங்குகிறது. சோதிடக்கலைக்குக் காலம் முக்கியப் பங்கு வகிக்கிறது என்பது தெளிவாகிறது. தமிழர்கள் ஆரியர் வருகைக்கு முன்பே வானவியல் சாஸ்திரங்களை அறிந்திருந்தனர் என்பது விளக்கப்பட்டது.

பஞ்சாங்கம், பிற சோதிட முறைகள் அறியப்பட்டது. வர்மம் என்ற சொல் மர்மம் என்ற சொல்லிலிருந்து தோன்றியதும், அதற்கு வாசி, புரவி முதலிய பெயர்கள் இருந்ததையும் அறிய முடிகிறது.

தமிழ்ச் சமூகத்தில் சங்க காலந்தொட்டு மூதாதையர்களால் மூலிகை மருத்துவமான சித்தமருத்துவம் போற்றப்பட்டு வருகிறது. தமிழர்களின் மருத்துவமான சித்தமருத்துவம் மட்டுமின்றி உலகில் பல்வேறு மருத்துவ முறைகள் இருப்பதையும் அது சித்தமருத்துவத்துடன் தொடர்பான வையாக அமைந்தது என்பதையும் அறியமுடிகிறது.

சித்தர்கள் உடலைப் பேணும் மருத்துவம் கண்டதோடன்றி உயிரை நிலைக்கச் செய்யும் கற்ப மருந்துகளையும் கண்டனர். அதனை மூலிகைகள், உலோகங்கள், பாடாண வகைகளிலிருந்தும் கையாண்டனர் என்பது தெரிய வருகிறது. சித்தர் கலையில் இரசவாதக்கலையான இரச மணி, இரசக் குளிகை, இரும்பைப் பொன்னாக்குதல் போன்ற அரிய வகைச் செய்திகளை பற்றியும் அறியமுடிந்தது. கற்ப மூலிகை வகைகளையும், அதனை முக்கியமாக ஏக மூலிகைப் பயன்பாட்டில் வெற்றிகண்ட சித்தர்களைப் பற்றியும் அறிய முடிகிறது. இவ்வாறாக இறப்பை வெல்ல, உடல் நோயை போக்கிக் கொண்டு நெடுநாள் வாழச் சித்தர்கள் உலக மக்களுக்கு அரிய மருத்துவ நூல்களை அளித்தனர் என்பதையும், அவர்களின் பேராற்றல்களையும் இவ்வியலில் அறிய முடிகிறது.

## குறிப்புகள்

1. Dr.T. ஆனந்தன், சித்தம் – மனம், ப. 20.
2. பத்திரகிரியார், சித்தர்பாடல், பா. 31.
3. மாணிக்கவாசகர், திருவாசகம், பா.வரி. 6.
4. திருமூலர், திருமந்திரம், பா. 2020.
5. குதம்பைச்சித்தர், ஞானக்கோவையெனும் சித்தர் பாடல்கள், பா. 21.
6. திருமூலர், திருமந்திரம், பா. 558.
7. ஆனைவாரி ஆனந்தன், சித்த மருத்துவ வரலாறு, பா. 38.
8. மேற்படி, ப. 92.
9. க.ப. வித்தியாதரன், தமிழர் வாழ்வியல் சோதிடம், ஆய்வேடு, ப. 22.
10. புதிய சூரியன் உதயமாகிறது – பெ. தங்கராஜீ, ப. 36.
11. அ. சிவபெருமான், தமிழரின் வானியல் திறன், ப. 3.
12. மேற்படி, ப. 7
13. அகத்தியர் வாகடம், ப. 24.
14. மேற்படி , ப. 26.
15. மேற்படி, ப. 29.
16. புதிய சூரியன் உதயமாகிறது – பெ. தங்கராஜீ, ப. 29.
17. மேற்படி, ப. 42.
18. மேற்படி, ப. 40.
19. மேற்படி, ப. 20.
20. அ. சிவபொருமான், தமிழரின் வானியல்திறன், ப. 74.
21. மு.ஆல்பென்ஸ் நத்தானியேல், தமிழர் மருத்துவம், ப. 9.

22. மேற்படி, ப. 21.

23. சிவதாணுப்பிள்ளை, சித்தமருத்துவ அமுது, ப. 42.

24. சித்தமருத்துவ வினாவிடை. T.கிருஷ்ணமூர்த்தி, ப. 70.

25. மேற்படி, ப. 75.

26. திருவள்ளுவர், திருக்குறள், பா. 938.

27. ஆனைவாரி ஆனந்தன், சித்தமருத்துவ வரலாறு, ப. 47.

28. சித்தர் கலைக்கல்லூரி பாடநூல், ப. 92.

29. ஆனைவாரி ஆனந்தன், சித்தமருத்துவ வரலாறு, ப. 148.

30. சிதம்பரம் இராமலிங்கம், திரு அருட்பா, ப. 272.

31. தேரையர் கரிசல், பா. 30.

32. சூ.நிர்மலாதேவி, கருவூரார் பலதிரட்டு, ப. 127.

33. போகர், போகர் ஏழாயிரம், ப. 725.

34. Dr.பழனிச்சாமி, Dr.லலிதபாய், சித்த மருத்துவத்தில் வாழ்க்கை நெறிமுறைகள், ப. 70.

# இயல் நான்கு

# சித்தர்களின் கடவுள் கொள்கையும் ஆன்மிகப் பணிகளும்

## இயல் – 4

# சித்தர்களின் கடவுள்கொள்கையும் ஆன்மிகப் பணிகளும்

மனிதரின் பிறவிக்கு அடிப்படையாய் அமைவது அவர் செய்த நல்வினை, தீவினை ஆகிய இரண்டுமாகும். அவர் படுகின்ற துயரத்தின் அச்சம் காரணமாக இறையின்மீது நம்பிக்கை ஏற்பட்டது. வல் வினைகளிலிருந்து விடுபடுவதற்கு பக்தி மார்க்கத்தைப் பலர் ஏற்றனர். இதிலிருந்து சற்று விலகி சித்தமார்க்கமான பற்றற்ற வாழ்க்கையைச் சித்தர்கள் மேற் கொண்டனர். அதன் விளைவாக உடலைப் பற்றியும், மனத்தைப் பற்றியும், சித்தத்தைப் பற்றியும் ஆராய முற்பட்டு வெற்றியும் கண்டனர்.

ஐம்புலன் அடக்கவும், இறைவனைக் காணவும், தவத்தை மேற் கொள்ளவும் சன்யாசிக்குக் குரு தேவைப்பட்டது. அவர்மூலம் உபதேசம் பெற்று தவ வாழ்வான துறவு வாழ்வை ஏற்று, தனது ஆன்மா விளங்கு மிடத்தையும், மெய்ப்பொருளையும் உணர்ந்தனர். மனித வாழ்வில் ஏற்படுகின்ற துன்பத்திற்கு ஆசை எனும் மாயைதான் காரணம் என்பதைக் குரு மூலம் கற்றுணர்ந்து தெளிவானார்கள். சமயம், கடவுள் நம்பிக்கை இதற்கு அடிப்படையாக விளங்கியது. சித்தர்கள் சமயங்களைக் கடந்த நிலையில் உருவ வழிபாட்டையும், வெற்றுச் சடங்குகளையும் கூடப் புறந்தள்ளினர்.

இறைவனை வழிபடுவதற்காக ஆகமங்கள், வேதங்கள், மந்திரங்கள் ஆதியில் உருவானது. இறைவனைச் சிவம் என்றும் விட்ணு

என்றும் பிரித்துப் பார்த்த தன்மையைச் சித்தர்கள் மறுத்தனர். ஓரிறைக் கொள்கையாளர்களாக பெரும்பாலும் சித்தர்கள் வாழ்ந்தனர். உருவத்தில் கண்ட இறைவனை ஒளி நிலையில் கண்டு திளைத்தனர். இவ்வாறு சித்தர்களின் இறைக்கொள்கையும் ஆன்மிகப் பணியும் பற்றி ஆய்வதாக இவ்வியல் அமைகிறது.

### ஊழ்வினை

மனிதர்களின் பிறப்புக்கு அடிப்படைக் காரணங்களாக நல்வினை, தீவினை என்னும் இருவகைச் செயல்கள் அமைகின்றன இதில் 'சஞ்சிதம்' என்பது வினைகளின் தொகுப்பாகும். அதிலிருந்து பறவியின் நுகர்ச்சிக்கு எடுத்துக் கொண்ட வினைப்பகுதி 'பிரார்த்தம்' அல்லது 'ஏன்றவினை' எனப்படும். இதனை 'ஊழ்' எனப் பொதுவாகக் கூறுவர்.

உயிர் என்னும் உணர்வாற்றலை உடம்பு என்னும் கூட்டிற்குள் அடைப்பதைப் பிறப்பு என்பர். எந்த உயிரை எங்குப் பிறக்குமாறு செய்வது என்பது பரம்பொருளாகிய இறைவனின் தீர்ப்பாகும். சில உயிர்கள் பிறவி எடுத்துக் கொண்ட சில நாட்களில் நீங்கி விடும், சில உயிர்கள் இறுதி வரையிலும் நிலைத்து செயல்படுவனவாகும். இதனை வல்வினைகள் என்பர். உயிர் செய்யும் செயலானது வினையாகப் பதிவாகிறது. அந்தப் பதிவுகள் 'சித்தம்' என்கிற 'ஆவணக் களரி' மூலம் பதிவு செய்யப்படுகிறது. அதில் 'மனம்' என்பது விருப்பு வெறுப்பு உணர்வுகளுக்கு ஆதாரமாக அமைகிறது.

“அவரவர் வினைவழி அவரவர் அனுபவம்”[1] என்பது திருமூலரின் கருத்தாகும். இறை நுகர்ச்சி என்னும் பக்தி அல்லது ஆன்மீக நாட்டத்தின் மூலம் ஊழ்வினை கழிகிறது. 'ஆகாமியம்' என்னும் புது வினைகளும் இறைவன் நாட்டங் கொண்ட உயிர்களில் ஏறுவதில்லை. இதனை மாணிக்க வாசகர் “சித்தமலம் அறிவித்துச் சிவமாக்கி எனையாண்ட

அத்தன்"[2] என்னும் பாடலடியில் சித்தத்தினுள் சிவம் மட்டும் நிறைந்திருப்பின் ஊழுக்கு இடமில்லை என்பது தெளிவாகிறது.

*"ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றி*
*தாழாது உஞற்று பவர்"*[3]

என்று திருவள்ளுவர் தவசீலர்களை ஊழ் ஒன்றும் செய்வதில்லை என்பதையும் அதனைத் தவத்தின் வலிமையால் தோல்வியுறச் செய்வர் என்பதையும் கூறுகிறார். ஆக வினைகள் மனிதப் பிறவிக்குக் காரணம் என்பது மேற்கூறிய கருத்துகள் மூலம் தெளிவாகிறது.

வல்வினைகளிலிருந்து நீங்குவதற்கு ஒரேவழி இறைவன் அருளைப் பெறுவது. இறைவன் அருள்பெறச் சித்தர்கள் கடுந்தவம் மேற்கொண்டனர். சித்தர்கள் சமூகத்தில் இயல்பாக இருக்கின்ற பக்திமார்க்கத்தில் இருந்து விலகி கடவுள் கொள்கையில் புதுமையையும், புரட்சியையும் உண்டாக்கினர். பிறவியாகியப் பெருங்கடலை நீந்திக் கரை சேருவதற்கு இறைவனின் திருவடியாகிய பாதங்களில் சரணடைய வேண்டும் என வள்ளுவர் கூறுகிறார். அகப் பேய்ச் சித்தர் பாடலடிகளும்

*'துறவி ஆனவர்கள் அகப்பேய்*
*சும்மா இருப்பார்கள்'*

என்கிறது மேலும்,

*"சும்மா இருந்துவிடு அகப்பேய்*
*சூத்திரம் சொன்னேனே!"*[4]

என்றும் கூறுகிறது சும்மா இருந்த விடத்தில் இறைவன் உறைகிறான் என்றும், அவ்விடத்தில் வினைகள் அதன் விபரீதம் காட்டாது என்றும் அகப்பேய்ச் சித்தர் பாடல் மூலம் அறிய முடிகிறது.

## மனித உடல் அமைப்பு தத்துவம்

மனிதஉடல் பஞ்ச பூதக் கலவைகளான மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் ஆகிய கூட்டுப் பொருளினாலும், தொண்ணூற்று ஆறு தத்துவங் களாலும் ஆனது. இவ்வுடலானது தாயிடமிருந்து தோல், இரத்தம், தசை, கொழுப்பு, இதயம், கல்லீரல், மண்ணீரல், சிறுநீர்ப்பை, சிறுகுடல் ஆகியவற்றையும், தந்தையிடமிருந்து தலைமயிர், நகம், மீசை, உடம்பு, பற்கள், எலும்பு, இரத்தக்குழாய், நரம்பு, தசை நார்கள் ஆகியவற்றையும் பெறுகிறது. மேலும்,

முற்பிறப்புத்திறனால் (பூர்வ சென்ம வாசனையால்) நன்னடத்தை, சூரத்தனம், நினைவுத்திறன் ஆகியவை அமைகிறது மேற்கூறியவை சித்தர்களின் உடல் தத்துவ முறையாகும்.

## மனத்தின் ஆற்றல்

ஐம்புலன்களும் மனத்தினால் செயலாக்கம் பெறுகிறது. மனிதனுக்கு மனம் செயல்படவில்லை என்றால் சிந்தனைத் தெளிவும், செயல்படும் ஆற்றலும் குறைந்துவிடும். கட்டுப்பாடு இல்லாத சிந்தனாசக்தி இம்மனத்திற்கு உண்டு. இதை ஞானிகள் தன் சுயக் கட்டுப்பாட்டில் அடக்கித் தவத்தின் மூலம் வெற்றி கண்டனர். இந்தச் சக்தி வாய்ந்த மனத்தைத் தாயுமான சுவாமி, கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறார்.

> *"அற்பமனமே அகில வாழ்வத்தனையுஞ்*
> *சொற்பனங் கண்டாயுண்மை சொன்னேன் நான்*
> *கற்பனையென் றில்லா விடத்தே எனைச் சும்மா*
> *வைத்திருக்கக் கல்லாய் நீ!"*[5]

என்பதன் மூலம் கனவுக்கும், கற்பனைக்கும் அடித்தளமாய் விளங்குகின்ற மனத்தை சும்மா இருக்கவிடு எனக் கூறுவதை அறியமுடிகிறது. மேலும்,

*“மனத்தாலும் வாக்காலும் மன்னவொண்ணா – மோன*
*இனத்தாரே நல்ல இனத்தார் – கனத்த புகழ்*
*கொண்டவரும் அன்னவரே கூறரிய முத்திநெறி*
*கண்டவரும் அன்னவரே காண்!”*[6]

எனும் பாடலில் ஒரு நிலைப்படுத்தி மோன நிலையெனும் சும்மா இருக்கும் சுகத்தில் திளைத்தவர்கள் சித்தர்கள் எனத் தாயுமானவர் விளக்கமளிக்கிறார். மனத்தை வெல்வதற்கு சித்தர்கள் எட்டுவிதமான தந்திரங்களைக் கையாண்டனர். அவை கீழ்வருமாறு:

1. இயமம் – (நன்னடக்கை) 2. நியமம் – (நற்செயல்) 3. ஆசனம் – (இருக்கை) 4. பிராணாயாமம் – (சரப்பழக்கம்) 5. பிரத்தியாகாரம் – (புலனடக்கல்) 6. தாரணை – மூச்சடக்கல் (மனமடக்கல்) 7. தந்திரம் – தன்னையடக்கல் (யோகம்) 8. சமாதி – இரண்டறக் கலத்தல் (சித்தமும் மனமும் ஒன்றாதல்)

மேற்கண்ட முறைகளில் சித்தர்கள் மனத்தைத் தன்வசமாக்கிப் பொறி புலன்களை வெளியில் செல்லவிடமால் எல்லா உணர்வுகளையும் ஒருங்கிணைத்துச் சிவநிலை எய்தினர். இந்நிலையே தியானம் அல்லது யோகமாகிறது, இதனைத் தனது திரத்தால் வென்றதால் தந்திரம் (தன்+திரம்) என்றனர். மேலும் சித்தர்கள் மணி என்னும் இரசமணியை வாயிலடக்கிக் கொண்டு பல யோக சாதனைகளைப் புரிந்தனர். இம்மணிக்கு இரசக்குளிகை, சூதக்குளிகை, ககனக்குளிகை என்னும் பெயர்களும் உண்டு. இதுவும் மனத்தை அடக்கச் சித்தர்கள் கையாண்ட முறையாகும்.

மேற்கூறியவற்றிலிருந்து மனத்தை அடக்கி, தீய வழிகளில் செல்ல வொட்டாமல் நல்ல நிலையில் வாழவும், நற்செயல்கள் செய்யவும், இறைவன் மீது நாட்டம் கொள்ளவும் மக்களைத் தூண்டியவர்கள் சித்தர்களாவார்கள். என்பதை உணரமுடிகிறது.

## மனத்தினால் தெய்வத்தைக் காணல்

உலகியல் வாழ்வில், கடவுளைக் காண முயன்றவர்கள் பக்தர்கள் என்றும், அதைக் கண்டு தெளிந்தவர்கள் சித்தர்கள் என்றும் மீ.ப.சோமு குறிப்பிடுகிறார். அவ்வாறு கண்டுத் தெளிந்த சித்தர்களின் தெய்வ அனுபவங்கள் அல்லது ஆன்ம அனுபவங்களை உலக மக்கள் அறிந்து கொள்ள அவர்கள் பாடல்களே சான்றாக அமைகிறது. மனித நிலையிலிருந்து தான் தெய்வ நிலை அடையவும், தெய்வீக அனுபவம் பெறவும் கூடும் என்பதைத் தேவாரம் பாடிய திருநாவுக்கரசர், 'மனித்த பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே!' என்று மனிதப் பிறவியின் மாண்பினை உணர்த்துகிறார்.

தெய்வத்தைக் காண்பதற்கு அடிப்படையாக இருப்பது மக்கட் பண்பாகும்.

*"அரம் போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்*
*மக்கட் பண்பில்லா தார்"*[7]

என்னும் குறளில் மக்கட் பண்பில்லாதவரை மரத்திற்குச் சமமாகத் திருவள்ளுவர் ஒப்பிடுகிறார். 'மக்கட் பண்பு' எனும் இவ்வரிய 'மனமாண்பு' செழிக்கவும், மனித உடம்பில் மாக்களாக வாழும் மக்களைச் சிறந்த மனிதனாக மாற்றி தெய்வநிலைக்கு அழைத்துச் செல்லவும் சித்தர்கள் உறுதுணையாய் இருந்தனர்.

## மனிதமனம்

மனித மனத்தில் எத்தனைக் குணங்கள் இருக்கிறது என்பதைச் சிவானந்த போதம் எனும் நூல் கீழ்க்கண்டவாறு தெரிவிக்கிறது.

*"மனிதரிலும் பறவையுண்டு, விலங்குண்டு*
*கல்லுமுண்டு மாரமுமுண்டு;*

*மனிதரிலும் நீர் வாழுஞ் சாதியுண்டு*
*அனேககுல மனித ருண்டு;*
*மனிதரிலும் மனிதருண்டு, வானவரும்*
*மனிதராய் வருவதுண்டு;*
*மனிதரிலே பிறப்பறுக்க வந்ததே*
*அருமையென வகுத்தார் முன்னோர்"*[8]

என்பதன் மூலம் மனித நிலையின் பல்வேறு வகைகளையும், மனிதனின் விலங்குத்தன்மையும், அதிலிருந்து மேம்பட்டு தேவராகவும், வானவராகவும் அடையவும், மனிதப் பிறவிக்குக் காரணமாகிய துன்பத்தை அறுத்து முக்திநிலையடையவும் சித்தர்கள் வழிவகுத்துள்ளனர். மனிதர்கள் செய்கின்ற வினைகளுக்கேற்ப பிறவி அமையும் என்பதைச் சொல்ல வந்த சித்தர் ஒருவர்,

*"முந்த சன்மமாம் புண்ணிய மிகுந்திடில் முக்கிய முண்டாகும்*
*பிந்த சன்மமாம் பாவமே மிகுந்திடில் பெரியதோர் துயராகும்*
*அந்த ரண்டையும் மறுத்திடி லொளிதரும் அரன்கழல் –*
*துணையாகும்"*[9]

என்ற பாடல் வரிகளின் மூலம் வினைக் கேற்றவாறு பிறப்பின் நிலைகள் உள்ளதை உணரமுடிகிறது.

## குருவை மனத்தினால் அறிதல்

மனிதன் பிறக்கிறான், வளர்கிறான், அதனை அவனின் தோற்றத்தில் காணலாம். அவனுடைய உள்ள செயல்பாட்டை அவன் அறிவு செயல்படுவதன் மூலம் அல்லது அறிவற்றுச் செயல்படுவதன் மூலம் அறிந்து கொள்ளலாம். உலகத்தில் எத்தனையோ கல்வி முறைகளைக் கற்றுத் தேர்ந்தவர்கள் ஆன்ம பக்குவம் என்கிற மெய்ப்பாட்டியலைக் கற்க இயலாமல் உள்ளனர். ஆன்மாவின் வளர்ச்சியானது தெய்வீக நிலையை

உணர்த்துகிறது. இக்கல்வியில் தேர்ச்சி பெறுவதற்கு ஒரு ஆன்மகுரு அல்லது மெய்ஞ்ஞான குரு தேவைப்படுகிறார். அம்மெஞ்ஞானத்தைப் போதிப்பவர் எதிலும் பற்றின்றி, எதையும் எதிர்பாராமல் நடுநிலையோடு அருளாற்றல் பெற்று விளங்க வேண்டும். அப்படிப்பட்ட சிறப்புகள் வாய்ந்தவர் 'சற்குரு' அல்லது 'மெய்க்குரு' என்று போற்றப்படுகிறார். குருவானவர்கள் உபதேசிக்கும் முறையை நான்காக வகைப்படுத்தலாம். அவை:

1. உடம்பின் இயல்புகளைப் பொதுநோக்கில் கூறி உள்ளம், உயிர் ஆகிய இரண்டின் தன்மைகளைப் பற்றி எல்லோர்க்கும் புரிகின்ற மொழியில் வெளிப்படையாகப் பேசுவார். அனைவரும் ஒழுக்கத் தோடு வாழவேண்டும் என்று நெறிப்படுத்துவார்.

2. உடலையும் உள்ளத்தையும் பாதுகாத்து நலத்துடன் வாழும் வழிமுறைகளையும், பொய் கூறாமை, புறங்கூறாமை, பிறன்மனை நயவாமை, தீய எண்ணங்களுக்கு இடமளிக்காமை போன்றவற்றை உடன்பாட்டு முறையாகவும், எதிர்மறையாகவும் சொல்லி அறிவுறுத்துவார்.

3. மூன்றாவது முறையானது கல்விமுறை ஆகும். இது சற்றுக் கடினமானது. மிக ஆழமான கருத்துகளை உருவக மொழிகளில் பேசுவார்கள். ஒவ்வொருவர் உள்ளத்திலும் பேராற்றல் செயல்படுவதை 'இருட்டறை மூலை' என்றும் உயிரை அல்லது ஆன்மாவைப் பற்றிச் சொல்லும்போது 'குருட்டுக் கிழவன்' என்றும், உள்ளத்தைக் 'குமரி' என்றும் வாலை என்றும் பற்பல மறை பொருட்களால் உணர்த்துவர்.

4. நான்காம் முறையானது புறப்பொருள்களை நிகண்டில் கண்டு தெளிவதுபோல அகப்பொருளான மெய்ஞ்ஞான நுட்பங்களைக் குருமூலம் நேரிடையாகக் கண்டு, கேட்டுத் தெளிவதாகும்.

இதனைப் பின்வரும் பழமொழி உணர்த்துகின்றது 'தொட்டுக் காட்டாத வித்தைச் சுட்டுப் போட்டாலும் வராது' என்பதாகும். இம்முறையைக் குரு, ஞான நாட்டமுள்ள மாணவருக்கு ஞானம் விளங்கும் இடங்களையும், அதன் அனுபவங்களையும் நேரில் சுட்டிக் காட்டுவதாகும்.

இவ்வாறு ஆன்மிகப் பயிற்சியை விளக்கும் குரு இறைவனுக்கு நிகராகப் போற்றப்படுகிறார். ஞான குருவாகிய பேராசனுக்கு மிக முக்கியத்துவமும், பொருமையையும் ஞானிகள் கொடுத்துள்ளனர்.

*"மறை சொலும் பொருளும்*
*மனித வேடமாய் வந்தது"*[10]

என்னும் பாடலடி குருவின் செயல்பாட்டை எடுத்துக் கூறுகிறது. சிவ பெருமானைக் குரு தட்சிணாமூர்த்தியாகவும், முருகப் பெருமான் சிவனுக்குப் பிரணவ மந்திரம் உபதேசித்ததாகவும் புராணங்கள் கூறுகின்றன. கீதை சொன்ன கண்ணனை உலக மாந்தர்கள் இறைவனாகப் போற்றுகின்றனர். அவ்வாறான குரு நேர்மை நிலையற்றவராகவும் பொய்யானவராகவும் இருந்து விட்டால் தவறுகளும், விபரீதங்களும் ஏற்பட்டு விடும் என்று திருமந்திரப் பாடல் சுட்டிக் காட்டுகிறது.

*"குருட்டினை நீக்கும் குருவினைக் கொள்ளார்*
*குருட்டினை நீக்கா குருவினைக் கொள்வர்;*
*குருடும் குருடும் குருட்டாட்ட மாடிக்*
*குருடும் குருடும் குழிவீழ மாறே!"*[11]

என்று கூறுவதன் மூலம் தெளிவைக் காணவந்த மாணவர் தெளிவில்லாத குருவிடம் சென்றால் தவறுதலாக மெஞ்ஞானத்தை அறிந்து கொண்டு கீழ்நிலைக்குச் செல்ல ஏதுவாகிவிடும் என்பதை உணரமுடிகிறது.

## குருவின் உபதேசம்

குரு உபதேசம் என்பது வாய்பேசாமல், உணர்வின் மூலம் உணர்ந்து கொள்ளவும், உள்ளத்துக்குள்ளே அதிரவும் செய்வதாகும். அது நுட்பமான ஒலி அதிர்வுமாகும். இது மனத்திற்குள் நிகழும் நிகழ்வு. ஆதலால் இதனைக் கொங்கணவச்சித்தர் கீழ்வருமாறு குறிப்பிடுகிறார்.

*"குரு இருப்பது நெஞ்சுக்குள்ளே -- மனக்*
*கோணல் அறுப்பதும் தன்னுக்குள்ளே!*
*பொருள் இருப்பதும் அறியாமல் -- புடம்*
*போடுவதெப்படி ஞானப் பெண்ணே!"*[12]

என்பதன் மூலம் குரு உறையுமிடம் மாணவரின் நெஞ்சு என்றும் அதை அறிந்து ஞானம் தேட வேண்டும் என்றும் கூறுவதை அறியமுடிகிறது.

## குரு என்பதற்கு ஞானிகளின் கருத்துரைகள்

ஆன்மிக ஞானத்தைப் போதிக்கும் குரு எவ்வாறு இருக்க வேண்டும் என்பதைப் புத்தரிடம் அவருடைய மாணவர்கள் வினவுகின்றனர். அதற்கு புத்தர் கீழ்வருமாறு,

*"நான் உங்களை விட்டுப் போன பிறகு என்னால்*
*பயிற்றுவிக்கப்பட்ட போதனையும், சங்கமுமே*
*உங்களுக்கு குரு"*[13]

என்று மொழிகிறார். இதன் மூலம் பயிற்றுவிக்கப்படும் மெய்க் குருவின் போதனைகளும் அவர் சார்ந்த சங்கமும் இங்குக் குருவாக நிற்றலை உணர முடிகிறது.

சித்த சமாஜ நிறுவனர் சுவாமி சிவானந்த பரமஹம்சர் சித்த வேதம் (மோட்ச சூத்திரம்) எனும் நூலில் தன்னிடம் வருகிற சீடர் கேட்கும்

கேள்வியான 'குரு' என்பது யார் என்ற கேள்விக்கு அவர் கீழ்வருமாறு விளக்கம் அளிக்கிறார்.

"உலகென்ற சங்கற்பம் எங்கிருந்து உண்டாயின என்றும், அது மனத்திலிருந்துதான், மனத்திற்கு மட்டுமே சங்கற்பச் சக்தி உள்ளது என்றும்; உன் மனமே உனக்கு குருவாகும் என்றும். மனமில்லையெனில் யாதொன்று மில்லை எல்லாம் மனத்திலிருந்து தான் உண்டாகிறது. அதனால் மனமே குருவாகும்"[14] என்று கூறுவதன் மூலம் குருவாய் வந்து அருள்வது அவரவர் செய்த நன்மை தீமைகளுக் கேற்ப குருவும், மனநிலைகளும், இறைவனை உணர்வதும் இங்குத் தெளிவாகிறது.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் 'ஜென்' தத்துவத்தை மக்களிடம் போதித்த தந்திரா ஆன்மிகத்தின் தந்தை என்று போற்றப்படும் 'ஓஷோ' கீழ்வருமாறு குரு உபதேசத்தை விளக்குகிறார்.

*"தன்னைத்தானே பட்டைத் தீட்டிக் கொள்வதே தியானம்*
*தன் எண்ணங்களைக் கடந்துச் செல்வதே தியானம்*
*தன்னை அழித்து, உருக்கி ஓடச் செய்வதே தியானம்*
*நீ மறைய வேண்டும், எப்போது, நீ இல்லாமல்*
*போகிறாயோ அப்போது இயற்கையின் அருள்*
*உன்மீது பொழியும், இந்த வெறுமையில் தான்*
*உனக்கு முழுமையான மேலான உணர்வு கிட்டுகிறது"*[15]

மேலும் 'தந்திராவின் பொருள் யாதெனில், நீ கடந்து செல்வதற்குரிய ஒன்றாகக் காமத்தைப் பயன்படுத்தலாம் என்றும், காமத்தை நீ முழுமையாக புரிந்து கொண்டுவிட்டால் ஞானிகள் போற்றிய பேரின்பம், எல்லையற்ற ஆனந்தம் ஆகியவற்றை நீ அடைய முடியும்' என்று கூறுவதிலிருந்து காமம் காமமாக நின்று விடுதல் கூடாது. அது அன்பாக மலரவேண்டும். அன்பு அன்பாக நின்று விடாமல் அது தியானமாக மாறி, அது ஒளியாக,

தியானத்தின் அனுபவமாக, ஆன்மிகத்தின் இறுதிச் சிகரமாக மாற வேண்டும் என்று ஓஷோ வலியுறுத்துகிறார்.

மேற்கூறியக் கருத்தின் அடிப்படையில் தான் சிற்றின்பம் பேரின்பத்திற்கு அடித்தளம் என்றும் இல்லறம் நல்லறமாகி ஆன்மா வீடுபேறு அடைய முடியும் என்று வலியுறுத்துவதை அறிய முடிகிறது.

## குருவைப் போற்றுதல்

பிறவிகள் தோறும் துன்பப்படும் மக்களுக்கு ஆன்ம விழிப்பை ஏற்படுத்தி இறை நிலைக்கு வழிகாட்டியாகத் திகழும் குருவைப் போற்றுவதும் அவர்களது பெயரை மறவாமலிருக்க வேண்டும் என்றும், குரு தெளிவித்தக் கருத்துகளை எண்ணி அவர்களை வணங்க வேண்டும் எனவும் திருமூலர் பாடல் கீழ்வருமாறு தெளிவுறுத்துகிறது.

*"தெளிவு குருவின் திருமேனி காண்டல்*
*தெளிவு குருவின் திருநாமம் செப்பல்*
*தெளிவு குருவின் திருவார்த்தைக் கேட்டல்*
*தெளிவு குருவுரு சிந்தித்தல் தானே!"*[16]

என்பதன் மூலம் குருவின் உருவைக் காண்பதும், அவர் திருவார்த்தைகளைக் கேட்ட மாத்திரத்தில் புலன்கள் ஐந்தும் தன் வசப்பட்டுத் தியானம் கைகூடுவதையும் அறியமுடிகிறது.

## குருவைப் பழித்தல்

மிகச் சாதாரண அறிவில் இருக்கின்ற உலகியல் மனிதனை அவன் வந்த விதத்தையும், உலக வாழ்விலிருந்து விடுபட வழிகூறியும், அவன் பேரறிவாளனாகத் திகழ வேண்டுமெனவும் நினைப்பவர் 'குரு' ஆவார். அவரை ஞானகுரு என்றும் தந்தையென்றும் போற்றப்படுபவர்.

அவரிடம் பயின்ற மாணவன் தனக்கு எல்லாம் தெரிந்ததுபோல் ஆணவத்தின் காரணமாகக் குருவைப் பழித்துப் பேசுவதும் உண்டு. அவருக்கு இடையூறு விளைவிக்கும் மாணவர் படும் துயர்களைத் திருமூலர் உணர்த்துகிறார்.

*“ஒரெழுத் தொருபொருள் உணரக் கூறிய*
*சீரெழுத் தாளரைச் சிதையச் செப்பினோர்*
*ஊரிடைச் சுணங்கனாய்ப் பிறந்தங் கோருகம்*
*பாரிடைக் கிருமியாய் மாய்வர் மண்ணிலே!”*[17]

என்றும்,

*“மந்திரம் ஒரெழுத் துரைத்த மாதவர்*
*சிந்தையில் நொந்திடத் தீமைகள் செய்தவர்*
*நுந்திய சுணங்கனாய்ப் பிறந்து நூறுரு*
*வந்திடும் புலையராய் மாய்வர் மண்ணிலே!”*[18]

என்னும் பாடல்களில் குருவைப் பழித்தவர் நாயாய்ப் பிறந்து அவர் பெற்ற ஞானமும் தங்காமல் மறந்துபோய், பஞ்சத்திலும் வீழ்வர் என்றும் குருவை மதியாதவர்க்கு ஏற்படும் துன்பங்களாய் இப்பாடல்கள் உணர்த்துகின்றன.

## மெய்ப்பொருளை அறிதல்

மெய்ப்பொருள் என்பது தெய்வத்தின் உண்மைப் பொருளை அறிவதாகும். மெய்ப்பொருளானது இறைவன் எங்கும் நீக்கமற நிறைந்து எல்லாவற்றையும் விளக்கம் செய்வதாகும். அப்பொருள் எந்நிலையிலும் மாறுபாட்டிற்கு உட்படாததாகும். எக்காலத்திலும், எவ்விதத்திலும் அழிவு ஏற்படாமல் நிலைத்து நிற்கின்ற தன்மையுடையதை ‘மெய்ப்பொருள்’ என்று கூறலாம்.

## இறைவனும் - ஆன்மிகமும்

மனிதன் தெய்வமாகி இறைவனோடு இரண்டறக் கலப்பதற்கு ஆன்மா பக்குவ நிலையடைய வேண்டும். ஆன்மாவானது மிகச் சிறியதாக உள்ளதாகும் இது உயிரின்பால் இறைவன் காட்டிய சீவகாருண்யமாகும். ஆன்மா சிறிய சோதி (சிற்றொளி) எனில் ஆண்டவன் பெருஞ் சோதியாகியப் பேரொளி ஆகும். இதையே அன்பும் சிவமாவது ஆரும் அறிந்திலர் என்று திருமூலர் குறிப்பிடுகிறார். இதனால் சீவன்தான் சிவமாக ஆவது தெளிவாகிறது. இந்தச் சூட்சுமத்தை ஓர் அருட்குரு வந்து காட்டி அதனை உணரும்வரை சீவர்கள் ஆசையின் வெளிப்பாட்டில் அழிந்து கொண்டு இருப்பர். அன்பு என்னும் தூய வெம்மையே இவ்வுடம்பை வேதிக்கவல்லதாகும். இதை மாணிக்கவாசகர்,

> *“ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி*
> *உவப்பிலா ஆனந்த மயமான தேனினைச் சொரியும்”*[19]

என்னும் பாடல்வரியில் ஆண்டவனையும், ஆன்மாவையும் உணர்ந்து கொண்ட சித்தர்கள், ஞானிகள் பேரின்பம் அடைவதைத் தெளிவுறுத்துகிறார்.

## சீவனின் வடிவம்

சிவமாகப் போகின்ற சீவனின் வடிவத்தைத் திருமூலர் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறார்.

> *“மேவிய சீவன் வடிவது சொல்லிடில்*
> *கோவின் மயிரொன்று நூறுடன் கூறிட்டு*
> *மேவிய கூறது ஆயிரமானால்*
> *ஆவியின் கூறு நூறாயிரத் தொன்றே!”*[20]

என்று கூறுவதன் மூலம் சீவனாகிய ஆத்மாவின் வடிவம் நுண்ணிய

நிலையில் உடையதை அறிய முடிகிறது. மனித உடம்பில் அறுபது இலட்சம் கோடி உயிரணுக்கள் உள்ளதாகச் சித்தர் விஞ்ஞானம் கூறுகிறது.

இதனை மாணிக்கவாசகர்,

*"நோக்கரிய நோக்கே!*
*நுணுக்கரிய நுண்ணுணர்வே!"*[21]

என்னும் பாடல் வரியில் குறிப்பிடுகிறார். மனித உடலுக்குள் உள்ள நுண்ணியப் பொருளான ஆன்மாவை அறிவது அவசியமாகிறது. இவ் ஆன்மாவை யோக நெறி பயின்ற ஞானிகளும், சித்தர்களும் கடுந் தவத்தின் மூலம் கண்டனர். சாதாரண மக்கள் உடல் அழிந்தால் உயிர் போகுமென்று நினைத்தனர். அதைத் தெரிந்து கொள்ள, உண்மைப் பொருளைத் தெளிவிக்கச் சித்தர்கள் பாடுபட்டனர். இறைவன் திருவடியைக் காண்பதற்கு நீண்ட நாள் இம்மண்ணுலகில் வாழ்தல் வேண்டும். இறக்கக் கூடாது, அவ்வாறு இறந்தால் பிறக்கக்கூடாது. இறைவன் திருவடி நிழலில் நிலைக்க வேண்டும். இதனைப் பட்டினத்தடிகள் கீழ்வரும் பாடலில் குறிப்பிடுகிறார்.

*"பிறவாதிருக்க வரம் வேண்டும் பிறந்து விட்டால்*
*இறவாதிருக்க மருந்துண்டு காண் இது. எப்படியோ*
*அறமார் புகழ்த்தில்லை அம்பலவாணர் அடிக்கமலம்*
*மறவா திருமனமே! அது காண் நல் மருந்துனக்கே!"*[22]

என்று கூறுவதன் மூலம் இறைவனை எப்போதும் மறவாமல் அவர் நினைவில் திளைத்திருந்தால் இறப்பும், பிறப்பும் மனிதனை அணுகுவதில்லை. இப்பெரு நோய்க்கு அம்பலவாணனாகிய இறைவன் திருவடியே மருந்து என்று மக்களுக்குத் தெளிவிப்பதை அறிய முடிகிறது.

## இறைவனைக் காணத் தடையாயிருப்பது

மனித வாழ்வானது பிறந்து, வளர்ந்து, வாழ்ந்து, இறந்து போவது என்றில்லாமல், அவ்வாறான சுழற்சி வாழ்க்கைக்கு விடை காண முயன்று வெற்றி கண்டவர்கள் சித்தர்கள். அவர்கள் உலக வாழ்வின் துன்பங்களுக்கும், இன்பங்களுக்கும் எது காரணமென மக்களுக்கு அறிவுறுத்தினர். பிறப்பில்லா வாழ்வை ஏன் அடையக் கூடாதுதென்று ஆன்மிகத் தத்துவத்தை எடுத்துக் கூறினர். ஞானமடைவதற்கும், இறைவனைக் காண்பதற்கும் எது தடையாக இருக்கிறதென்பதை உணர்த்தினர். அதுதான் 'மாயை' எனும் மயக்கும் நிலை என்றும், ஆன்ம அறிவுக்குத் திரை போட்டிருப்பதையும் தெளிவாக்கினர். ஆன்மா இறைவனையும், தன்னையும் அறியவிடாமல் மாயைதான் மறைத்துக் கொண்டிருக்கிறது என்று உறுதியாகக் கூறினர். திருமூலர் கீழ்க்கண்ட பாடலில்,

*"மாயை மறைக்க மறைந்த மறைப் பொருள்*
*மாயை மறைய வெளிப்படும் அப்பொருள்*
*மாயை மறைய மறையவல் லார்கட்குக்*
*காயமும் இல்லை கருத்தில்லை தானே!"*[23]

என்று கூறுவதன் மூலம் இறைவனாகிய பேரொளியை மாயையாகிய இருள் மறைத்துக் கொண்டிருக்கிறது. மாயை சூழ்ந்த உலகியல் ஆடைகளும், பற்றுகளும் நிறைந்து இருக்கிறது, மாயை விலகினால் இவ்வுடல் மீண்டும் உயிர் பெறுவதில்லை, சும்மாயிருக்கும் சமாதி நிலைகிட்டும் என்று திருமந்திரம் கூறுவது தெளிவாகிறது.

உலக மக்கள் அனைவரும் ஆன்மாவைப் பற்றியோ அல்லது தெய்வத்தைப் பற்றியோ அறியமுடியாதபடி ஒவ்வொருவரின் மனமும் மாயையில் கட்டுண்டுள்ளது. உலக இன்பங்களிலும், பற்றுக்களிலும்,

அடங்காத வேட்கையுற்று மக்கள் வாழ்கின்றனர். இந்நிலையை மாற்றி தெய்வத்தின்மீது பற்றுவைக்கவும், ஆன்ம விளக்கம் பெறவும் சித்தர்கள் முன்னோடிகளாகத் திகழ்ந்தனர்.

ஆதலால் வள்ளுவரும் வாழும் பிறவியில் இறைவனைக் காண வேண்டும் என்கிறார்,

*'பிறப்பு என்னும் பேதைமை நீங்கச் சிறப்பு என்னும்*
*செம்பொருள் காண்பது அறிவு'*

என்னும் குறட்பாவில் அறிவின் மூலமாகச் செம்பொருளை அடைய வேண்டும் என்கிறார்.

### சமயமும், தெய்வமும்

மனித சமூகத்தில் சமயம் உருவாக அடிப்படைக் காரணமாக அமைவது கடவுள் நம்பிக்கையாகும். கடவுள் நம்பிக்கையைப் பற்றுக் கோடாகக்கொண்டு சிறுசிறு குழுக்கள் உருவாக்கிய விளக்கங்களையும், வழிபாட்டு முறைகளையும் ஒருங்கிணைத்து 'சமயம்' என்றதொரு சமூக அமைப்பை மக்கள் உருவாக்கினர். உலகியல் வாழ்வில் காணப்படும் துன்பத்தையும் குறைபாடுகளையும் தவிர்த்து இடையறாத இன்பத்தையும், நிறைவையும் பெற்று மன அமைதி காணவிரும்பும் மக்களுக்கு வழி காட்டியாக விளங்குவது சமயத்தின் முக்கியக் குறிக்கோளாகும். எந்தச் சமயமான போதிலும் மக்களுக்கு நன்மையளிக்க அது துணை நிற்க வேண்டும். வழிபாடுகளில் வேறுபாடுகள் இருப்பினும் மக்கட் பண்பில் மாறாத நிலையைச் சமயம் உருவாக்கவேண்டும்.

"சித்தர்கள் பரம்பொருள் ஒன்று உண்டென ஒப்புக்கொள்கின்றனர். ஆனால் உருவ வழிபாடுகளையும், சாத்திரங்களையும் வெற்றுச் சடங்குகளையும் வெறுத்துரைப்பதால் அவர்களை இறைமறுப்பாளர்களாக

எண்ணிவிடலாகாது. எங்கும் நிறைந்திருக்கும் பரம்பொருளை அவர்கள் ஏற்றுக் கொண்டனர் கடவுள், இறைவன், தெய்வம், பரம்பொருள், பிரம்மம், பரமாத்மா, என்பன சமய சார்பற்ற பொதுச் சொற்களாகும். சித்தர்கள் சமய எல்லைக்கு அப்பால் சென்று கடவுள் தன்மையை மானுடமும் பெறுவதற்கு வழிகாட்டியாக இருந்தனர்''[24] என்று க.நாராயணன் குறிப்பிடுகிறார்.

## இறைக் கோட்பாடு

சித்தர்களின் இறைக் கோட்பாட்டினை இரண்டு வகையாகப் பிரிக்கலாம் அவை

1. மறுப்பு நிலைக் கோட்பாடு
2. உடன் பாட்டு நிலைக் கோட்பாடு, என்பன.

மறுப்பு நிலைக் கோட்பாடு இறைவன் இல்லை எனக் கூறி, இறைவன் இருப்பினை மறுக்கும் நாத்திகவாதமாகும். இதன் அடிப்படை யாதெனில் சித்தர்கள் தெய்வம் உறைகின்ற இடம் உள்ளந்தான் அதுவன்றி வேறில்லை, அதனை உள்ளில் தேடாமல் புறமாகிய வெளியில் தேடினாலும் கிடைக்காது, என்றனர் இதனை,

*''உள்ளமே பெருங்கோயில் ஊனுடம்பே ஆலயம்''*[25]

என்று திருமூலர் உணர்த்துகின்றார்.

இறைவன் உண்டென உறுதியாக நம்பி ஒப்புக்கொள்ளும் உடன் பாட்டு நிலைக் கோட்பாடு இறைவன் இருக்கிறான் என்று ஏற்றுக் கொள்ளும் பக்திநிலை ஆத்திகத்தை உடன்பாட்டுநிலை கோட்பாடு எனக் கூறுவர். பல கடவுள்கள் உண்டெனக் கூறுவது பன்மை இறையியக் கொள்கையாகும். கடவுள்கள் நிகழ்த்தும் அற்புதங்களுக்கேற்ப, குருமார்களின் வழிகாட்டுதலுக்கிணங்க ஒரு பெருந்தெய்வத்தை

உயர்த்திப் போற்றுவது உயர்தனி இறையியம் ஆகும். எடுத்துக் காட்டாக, ஒருபிரிவினர் சிவனைப் போற்றுவதும், மற்றொருவர் விட்ணுவைப் போற்றுவதும் இன்னொரு பிரிவினர் சக்தியையும், முருகனையும் வழிபடுவதும் நடைமுறையில் அறிய முடிகிறது.

இந்த இறைநிலைக் கொள்கைக்கு மாறாக சில கடவுள் சார்ந்த இயக்கங்கள் தமிழகத்தில் மட்டுமின்றி பாரதத்தின் பல்வேறு பகுதிகளில் தோன்றின அதன் விரிவை ஒளிநிலையில் இறைவனைக் காண்பது என்னும் தலைப்பில் குறிப்பிடப்படுகிறது.

பிரபஞ்சமெங்கும் இருக்கக்கூடிய கோடாணுகோடி அணுக் கூறுகளின் நுட்பத்தை அறிந்து அவ்வணுக்களின் ஆற்றல்களைத் தன்வசமாக்கி அரிய செயல்களை ஆற்றியவர்கள் சித்தர்கள். இந்த ஆற்றல்கள் அணைத்தும் அவர்கள் மேற்கொண்ட தவத்தின் மூலம் பெற்றதாகும். இதில் அவர்களின் கருதுகோள் யாதெனில் இறைவனின் அத்தனை ஆற்றல்களையும் தாம் கைவரப் பெறுவதாகும். இதற்கு 'இறைவன் நிலையறிந்து தானும் அம்மயமாதல்' என்று கூறப்படுகிறது. இந்நிலை யடைந்தவர் தன்மையினைத் திருமூலர் கீழ்வருமாறு,

*"ஒழிந்தேன் பிறவி யுறவென்னும் பாசங்*
*கழிந்தேன் கடவுளும் நானுமொன் றானேன்*
*அழிந்தாங் கினிவரு மாக்கமும் வேண்டேன்*
*செழுஞ்சார் புடைய சிவனைக் கண்டேனே!"*[26]

என்று இறைவனை அணைந்தோர் தன்மை எனும் பகுதியில் குறிப்பிட்டுள்ளார். இந்த நிலையெய்தியச் சான்றோர்கள் சிவத்தைக் கண்டவர்கள். வெளியில் தானடைந்த நிலைபற்றிச் சொல்லிக் கொண்டிருப்பதில்லை என்பதாக அகத்தியர் தனது அந்தரங்க தீட்சாவிதிப் பாடலடியில்,

*"விண்டதில்லை கண்டவர்கள் சொல்லார், சொல்லார்*

*வீணாகச் சுட்டலைந்து விதியென்பாரே!"*[27]

என்று கூறுவதன் மூலம் சித்தர் இறைவனைக் காண்பதை நோக்கமாகவும், அவ்வாறு காண உடலை வேதியல் மாற்றம் செய்து அருஞ்செயல் ஆற்றியதையும் யாரிடமும் பெருமையாகப் பேசுவதில்லை என்பது இதன் மூலம் தெளிவாகிறது.

## ஆகமங்கள், வேதங்கள், மந்திரங்கள்

வேதங்கள், ஆகமங்கள் என்பது வெவ்வேறு நோக்குகளை உடைய மரபுகளாகும். ஆகமங்கள் வேதங்களுக்கு எதிரானவை. வேதங்களை முதலாக உடைய சமயம் 'வைதிகசமயம்' என்றும், ஆகமங்களைச் சிறப்பாகக் கொள்ளும் சமயநெறி 'சைவசமயம்' எனவும் வளர்ச்சி அடைந்துள்ளது. வேதங்கள் வடநாட்டு மரபாகவும் ஆகமங்கள் தென்னாட்டு மரபாகவும் விளங்குகிறது.

ஆகமம் என்ற சொல்லுக்கு முதல்வன் வாக்கு, அவனால் உருவாக்கப்பட்டது என்றெல்லாம் பொருள் கூறப்படுகிறது. பொதுவாக ஆகமம் என்றால் 'பழங்காலத்திலிருந்து தொடர்ந்து வருவது' என்று பொருளாகும். புத்த, சைன நூல்கள் பண்டை காலத்தனவே எனினும் அவையும் ஆகமங்கள் என்று அழைக்கப்படுகின்றது. இந்த ஆகமங்கள் அடிப்படையில் பிராமணர்களின் வேதங்களுக்கு முற்றிலும் மாறுபட்டது. எல்லா ஆகமங்களும் தொடக்ககாலம் முதல் வேதங்களுக்கு அதாவது கர்ம காண்டத்திற்கு எதிரானதாக இருந்துள்ளன. சைவ ஆகமம் என்பது 'மகேஸ்வரம்' என்றும், 'பாசுபதம்' என்றும் அழைக்கப்படுகிறது. வைணவ ஆகமங்கள் 'பாகவதம்' என்றும், (கடவுளைச் சார்ந்தது) 'பஞ்சரத்னம்' என்றும் அழைக்கப்படுகிறது.

1. வேதங்கள் பிற்காத்தில் ஆகமங்களோடு ஐக்கியமாகி விட்டன.

2. இவை மந்திரங்கள் இயற்றப்பட்ட காலத்திற்குப் பிறகு ஈஸ்வரனால் உபதேசிக்கப்பட்டவை எனக் கருதப்படுகிறது.

3. வேத சம்ஹிதைகள் எல்லாம் வைதிகச் சடங்குகள் செய்யும்போது கூறப்படும் மந்திரங்களே ஆகும்.

4.வேதங்கள் தொடக்கத்தில் கர்ம காண்டம், ஞானகாண்டம் என்றழைக்கப்பட்டன.

5. வைதிகச் சடங்குகள் வேள்வியைச்சார்ந்தவை. ஒவ்வொரு சடங்கிலும் தீ வளர்க்கப்பட்டு அதில் அவிப்பலிகள் கொட்டப்படும். இம்முறையில் தீயில் கொட்டப்பட்டவற்றை யெல்லாம் இறைவன் எடுத்துக் கொள்வதாகக் கருதப்படுகிறது. ஆதலால் மேற்காணும் விளக்கம் மூலமாக ஆகமத்திற்கும் வேதத்திற்குமுள்ள வித்தியாசங்கள் தெளிவாகிறது.

தமிழில் உயிர்ப்பு ஒலிகளான மந்திரங்களை உச்சரிப்பதன் மூலம் மனப்பிணியும், உடல்பிணியும் தீருகின்றன என்று நம்பப்படுகிறது. சைவத்தின் மூலமந்திரமான 'ஓம் நமசிவய' என்னும் பஞ்சாட்சர எழுத்துகளைச் செப்புத் தகடுகளில் மாற்றி, மாற்றி எழுதுவதன் மூலம் அவற்றுக்கு ஆற்றல் கிடைக்கிறது. அதனைக் கோயில் கருவறை மூலவர் சிலைப் பீடங்களில் வைத்து மக்கள் நன்மையடையச் செய்வது இந்து சமயத்தின் முதன்மை பணியாகும்.

ஓம் நமசிவய, ஓம் சரவணபவ, போன்ற மந்திரங்களில் ந,ம,சி,வ,ய என்னும் ஐந்து எழுத்துகளும் சிவனது ஐந்து முகங்கள் ஆகும். ஓம் என்பது பிரணவ எழுத்தாகிறது. ச ர வ ண ப வ என்னும் மந்திரத்திலுள்ள ஆறு எழுத்தக்களும் முருகனின் ஆறு முகங்களாகும். இதேபோன்று 'ஓம் நமோ நாராயணாய நம' என்னும் மந்திரம் திருமாலின் பத்து அவதாரங்கள் எனக் கூறுவதை அறியமுடிகிறது.

நமசிவய என்னும் ஐந்து எழுத்துகள் பஞ்ச பூதங்களோடு தொடர்புடையது. இதனை ஞானிகள் மனித உடம்புடன் தொடர்பு படுத்துவர் நிலம், நீர், தீ, காற்று ஆகாயம் என்னும் பிரிவுகளை முறையே,

காலிலிருந்து இடுப்புவரை நிலமும் (மண்தன்மை)
இடுப்பு முதல் நெஞ்சுவரை நீர்தன்மையும்
நெஞ்சுமுதல் தோள்வரை நெருப்புத்தன்மையும்
தோள்முதல் மூக்கு வரை காற்றுத்தன்மையும்
மூக்கு முதல் மண்டை வரை வான் அல்லது ஆகாயத் தன்மையும் கொண்டுள்ளது என்பர்.

ஓம் என்னும் ஓங்காரத்தின் 'ஓ' வடிவம் தான் எல்லா உயிர்களின் கரு வடிவமாக அமைந்துள்ளதைச் சைவசித்தாந்தம் கூறுகிறது.

## மந்திரங்களின் வகைகள்

மந்திரம் என்பது (மன்+திரம்=மந்திரம்) மனத்தைத் திரமுடையதாக ஆக்குவது ஆகும். அது எந்நிலையிலும் மாயை வசப்படாமல் தியானிப் போரைக் காக்கும். இத்தகைய மந்திரங்கள் மிகத் தொன்மையான காலத்திலிருந்தே தொடர்ந்து வருகிறது இதனைத் தொல்காப்பியம்,

*"நிறைமொழி மாந்தர் ஆணையின் கிளந்த*
*மறை மொழி தானே மந்திரம் என்ப"*[29]

எனக் கூறுகிறது. மேற்கூறிய நூற்பாவின் மூலம் நிறைமொழி மாந்தர்களான சித்தர்கள், ஞானிகளின் மறைமொழியான வேதங்களே மந்திரம் என்பது தெளிவாகிறது. இம்மொழியை அருளாற் கூறினும், வெகுண்டு கூறினும் அவ்வப் பயன்களை உரியவர்களுக்கு அளித்துவிடும்.

இத்தகைய மந்திரங்கள் மூவகையில் கீழ்வருமாறு பாகுபடுத்தப் பட்டுள்ளன.

1. இறைவனை வாழ்த்தி வணங்கும் மந்திரங்கள்
2. மக்களுக்கு ஆக்கம் தருதற்குரிய மந்திரங்கள்
3. எதிரிக்கு கேடுதரும் மந்திரங்கள்.

இவற்றுள் பின்னைய இரண்டும் நல்லோரை வாழ்விக்கவும் தீயோர்களைத் திருத்தி நல்வழி நடக்க செய்யவும் எழுந்தவையாகும். காலப்போக்கில் இது பொருள் கருதியும், பிறபயன்கள் கருதியும் தவறான நெறிகளில் பயன் படுத்தப்படுகிறது.

தமிழில் திருமூலரால் ஆக்கப்பட்ட 'திருமந்திரம்' எனும் நூல் இறைவனை நோக்கி எண்ணுதற்குறியதாகும். மறைபொருள் கூற்றாகக் கூறப்படும் செய்திகள் இதில் அதிகம் காணப்படுகிறது. ஆதலால் இது 'திருமந்திரம்' என்று பெயர் பெற்றது.

## மந்திரத்தின் பயன்கள்

'நமசிவாய' என்னும் மந்திரத்தைப் ஐந்தோடு ஐந்தாகப் பெருக்கும் போது இருபத்தைந்தாக வரும். இவ்வைந்தெழுத்தில் ஏழு வகைக் தோற்றமும், ஏழு வகைத் தோற்றத்தில் உருவான உலகமும் இதனுள் அடங்கும். இதனால் அறுபத்து நான்கு சித்துக்கள் உண்டாகும்.

ஐந்து எழுத்து ஐம்பத்தோரு எழுத்தாக விரிந்து நிற்கும். ஒவ்வொன்றாக விரித்துச் சொல்ல முடியாது. அதற்கு எல்லை என்பது இல்லை. இதனை,

*"ஆமப்பா அச்சரங்கள் அஞ்சு பின்னை*
*அயம்பத்தோர் அட்சரமாய் விரிந்து நிற்கும்*
*ஓமப்பா ஒவ்வொன்றாய் வழுத்த வென்றால்*
*உரையேது கரையேது உரைப்பராரோ!*

------------------------------

*நாமப்பா அறிந்த மட்டுஞ் சொல்வோங் கேளு*

*நாதாக்கள் தவறாமல் பார்த்திட்டாரே!"* [30]

என்று கருவூர்ச்சித்தர் பாடல் கூறுகிறது.

இந்த நமசிவாய அல்லது சிவாயநம ஆகிய மந்திரத்தின் மூலம் யோக சித்தியும், ஆயுளையும் அடைய முடியும். அதே மந்திரத்தால் தேக சித்தியும், மோட்சமும் உண்டாகும். ஆதலால் இந்த மந்திரம் முக்கியமாக பயன்படுத்தப்படுகிறது. செல்வம் பெருகவும், கடலைக் கடக்கவும், வானில் புதுமைக்காணவும், தேவ கன்னிகளை வெற்றி கொள்ளவும் இம்மந்திரத்தைச் சித்தர்கள் பயன் படுத்தியுள்ளனர். எடுத்துக்காட்டாக,

'ஹ்ரீ ஸ்ரீ சிவாய நமா' என்று சொன்னால் ஆறும் அதில் வெள்ளமும் ஓடும் என்றும்,

"சங்சங்ய வாசிநம"[31] என்று சொன்னால்

தண்ணீரிலும் நடக்கலாம் என்றும்

அடுத்து, வானத்தில் உள்ள அற்புதங்களைக் காண வேண்டுமெனில் 'அங்கிஷ அங்கிஷ ஓம்சிவாய நமா' என்றும்

"ஓம் ஓம் டேபுர நமசிவாயம்"[32] என்று கூறும்போது தன்னுள் உள்ள அமிர்தத்தை உண்ணலாம் என்றும் மேலும்,

"ஓம் அங்கிஷ ஊங் சிவாயநம"[33] என்று கூறிடில் நினைத்த இடத்திற்கு மனோ வேகத்தில் அவ்விடம் செல்ல முடியும் என்றவாறு கருவூரார் பதிவு செய்துள்ளார்.

இவ்வாறாக மந்திரங்கள், அதன் விதிமுறைகளை அறிந்து தவத்துடன் இருப்போர்கள் பலன்களை அடைய முடியும் என்பதைச் சித்தர்களின் வழியாக அறியமுடிகிறது.

## அரியும் சிவனும் ஒன்றுதான்

சித்தர்கள் சிவபெருமானையும் திருமாலவனையும் ஒன்றாகவே எண்ணி வழிபட்டுள்ளனர். அரியும் சிவனும் வேறு வேறல்ல! என்பதில் அவர்கள் முழு நம்பிக்கை கொண்டிருந்தனர். கீழ்வரும் சிவவாக்கியர் பாடல் இரண்டும் ஒன்றுதான் என்பதற்கு,

> *"ஒன்றுமொன்று மொன்றுமே யுலகனைத்து மொன்றுமே*
> *அன்று மின்று மொன்றுமே யனாதியான தொன்றுமே*
> *கன்றல் நின்ற செம்பொனைக் களிம்பறுத்து நாட்டினால்*
> *அன்று தெய்வ மும்முளே யறிந்ததே சிவாயமே"* [34]

என்பதன் மூலம் உள்ளத்துள் வீற்றிருக்கும் இறைவனாகிய சிவமும், விட்ணுவும் ஒன்றை காணலாகும் என்பதை அறிய முடிகிறது.

மேலும், இவ்வுலகத்தில் பிறந்த உயிர்களனைத்தும் வீடுபேறு அடைய வேண்டுமாயின் இராம நாமத்தைச் செபிப்பதன் மூலம் அடையலாம் என்கிறார் சிவவாக்கியர்,

> *"நீடுபாரிலே பிறந்து நேயமான காயந்தான்*
> *வீடுவேறி தென்றபோது வேண்டியின்பம் வேண்டுமோ?*
> *பாடி நாலு வேதமும் பாரிலே படர்ந்ததோ*
> *நாடு ராம ராம ராம ராமமென்ற நாமமே!"* [35]

என்றும்

> *"எருதில் ஏறும் ஈசனும் இயங்கு சக்ரத் தானையும்*
> *வேறுவேறு பேசுவார் விழ்வர் விண் நரகிலே!"* [36]

என்று இறைவனை வேறுபடுத்திப் பார்ப்போர் நரகத்தில் வீழ்வர் என்றும் அச்சுறுத்துகிறார்.

மேற்கூறியவாறு அரியாகிய திருமால் வேறு அயனாகிய சிவன் வேறு என்று பாகுபடுத்திப் பார்க்காமல் இருவரும் ஒன்றுதான், ஒரேப் பொருள்தான் என்று சிவவாக்கியச் சித்தர் தெளிவுபடுத்தியுள்ளார்.

## ஓரிறைக் கொள்கை

சித்தர்கள் வகுத்த வாழ்வியல் நெறியில் தலையாயது இறைக் கொள்கையாகும். இறைநிலைக் கொள்கையில் பாரத மண்ணில் தோன்றிய சித்தர்கள் மட்டுமின்றி உலகத்தில் தோன்றிய அனைத்துச் சித்தர்களும் ஒரே குரலாக, இறைவன் ஒருவனே! என்று ஏகக் குரலாய் ஒலித்தனர். திருமூலரும் 'ஒன்றே குலம் ஒருவனே தேவனும்' என்று மனித குலம் அனைத்திற்கும் ஒரே தெய்வமென அறிவுறுத்துகிறார்.

அடுத்து மூர்த்திகள் இருவரும் பெரியது சிறியதுமல்லாமல் கருமை, செம்மை, வெண்மையெனும் நிறங்களையும் கடந்து, துரியம் எனும் வெட்ட வெளிக்கு அப்பால் காணுகின்ற அந்த அரிய பொருள் அரியாகிய திருமாலும் அல்ல! அயனாகிய சிவமுமல்ல என்று சிவவாக்கியர் கூறுகிறார்.

*"அரியுமல்ல வயனுமல்ல வப்புறத்திலப்புறம்*
*கருமை செம்மை வெண்மையைக் கடந்துநின்ற காரணம்*
*பெரியதல்ல சிறியதல்ல பற்று மின்கள் பற்றுமின்கள்*
*துரியமுங் கடந்து நின்ற தூரதூர தூரமே"*! [37]

என்கிறார்.

## தில்லையும் திருவரங்கமும்

மக்கள் மனங்களின் வேறுபட்டு நிற்கும் இறைவனாகிய தில்லைவாணரை 'நடராசர்' என்றும், திருவரங்கநாதரை 'ரெங்கநாதர்' என்றும் இருக்கும் நினைப்பை யொழிக்கக் கீழ்வருமாறு பாடுகிறார்.

*''பங்குகொண்ட சோதியும் பரந்தவஞ் செழுத்துமே*

*சிங்க நாத ஓசையுஞ் சிவாயமல்ல தில்லையே!''*[38]

என்றும். மேலும்

*''இருவரங்கமும் பொருந்தி யென்புருகி நோக்கிலீர்*

*உருவரங்கமாகி நின்ற வுண்மை யொன்றை யோர்கிலீர்*

*கருவரங்கமாகி நின்ற கற்பனை கடந்து பின்*

*திருவரங்க மென்றுநீர் தெளிந்திருக்க வல்லீரே!''*[39]

என்று கூறுவதன் மூலம் தில்லையும், திருவரங்கமும் ஒன்றுதான் என்பதை உணரமுடிகிறது.

மானுடப் பிறப்பைத் தொகுத்துப் பார்த்தால் அனைவரின் பிறப்புக்கும் சுக்கிலம் என்னும் விந்துக் கூறுதான் முக்கியம். எல்லா உயிர்களும் தோன்றுவதற்கு இதுவே காரணமாக அமைகிறது. அதுபோன்று ஒரே பிரம்மத்தினின்றுதான் அனைத்துயிர்களும் தோன்றுகிறது. அதாவது பரமாத்மாவிலிருந்துதான் சீவாத்மா தோன்றுகிறது. இது இவ்வாறிறிருக்க இறைவனை வணங்கும் முறையில் வேறுபாடு கற்பிப்பதைச் சித்தர்கள் மறுக்கின்றனர். இவர்களின் தலையாயக் கொள்கை அன்பு ஒன்றே! அன்புக்கு வேற்றுமையில்லை. இதனால், கடவுளிலும் வேற்றுமையில்லை என்பதைத் திருமூலர்,

*"அன்பு சிவம் இரண்டு என்பர் அறிவிலார்*

*அன்பு சிவமாவது ஆரும் அறிகிலார்*

*அன்பே சிவமாவது ஆரும் அறிந்தபின்*

*அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே!"*[40]

என்று கூறுகிறார்.

இறைவனைப் புறமாகிய வெளியில் காணாமல் அகமாகிய உள்ளத்தில் கண்டனர். அகவழிபாட்டின் மூலம், சீவர்களாகிய (சீவாத்மா) மக்களை நடமாடுங் கோயில்களாகக் கண்டவர்கள் சித்தர்களாவர்.

மனித உடல் தத்துவத்தையும் ஆலயத் தத்துவத்தையும் ஓரிறைத் தத்துவமாக உணர்ந்தனர். புற உலகில் இறைவனைத் தேடியலையாமல் அன்பு கொண்டு நேயமாக வாழ்வதே ‘சிவநிலை’ என இறைநிலைப் பற்றிச் சித்தர்கள் கருதினர்.

அருவம், உருவம், அருவுருவம் என்றும் மூவகை நிலையைக் கடந்தே இறைவன் முழுமுதற் பொருளாக விளங்குகிறான். அருவம் கட்புலன் ஆகாத உருவம், உருவம் கட்புலனாய்த் திணை, பால், உணரும் செம்மை வாய்ந்தது. அருவுருவம் கட்புலனாகியும் திணை, பால் முதலியவற்றை உணர முடியாத நிலையானது. அரூவுருவ நிலையிலே இறைவனைச் சிவக் கொழுந்தாய் காண்கிற நிலை சித்தர்கள் நிலையாகும். ஆதலால்தான் சித்தர்கள் உருவ வழிபாட்டையும், சாத்திரச் சடங்குகளையும் வெறுத்தார்கள். பரம்பொருள் ஒன்று உண்டென்று கருதிய ஓரிறையாளர்கள் என்றும் அவர்களைக் கூறப்படுகிறது.

ஞானிகளும், சித்தர்களும் தவமியற்றி ஒரு நிலைக்கு வந்த பின்பு ஆனந்த மேலீடாக இறைவனைப் பூரணனாகப் போற்றுகின்றனர். பட்டினத்தடிகளும் அப்பூரணப் பொருளை,

*“உடலுக்குள் நீ நின்று உலாவினதைக் காணாமல்*
*கடல்மலை தோறும் திரிந்து கால் அலுத்தேன் பூரணமே!”*[41]

என்னும் பாடலடியின் மூலம் குறிப்பிடுகிறார்.

ஆதலால் மனித மனம் இறைவன் அந்த மதத்திலா? அல்லது இந்த மதத்திலா? ஆணா? பெண்ணா? புறத்திலா? அகத்திலா? ஒன்றா?

பலவா? என்பது போன்ற ஐயப்பாடுகளை நீக்கி இறைவன் ஒருவனே! என்னும் உறுதியான நிலைக்கு வந்தபின் தன்னுள்ளிலே அப்பொருளைக் கண்டு உணர்ந்து பேரின்பமடைய கொங்கணச்சித்தரும், கீழ்வருமாறு, குறிப்பிடுகிறார்

*"இந்த விதத்திலே தேகத்திலே தெய்வம்*
*இருக்கையில் புத்திக் கறிக்கையினால்*
*சந்தோட வாலையைப் பாராமல் மனிதர்*
*சாகிறதேதடி வாலைப் பெண்ணே!"*[42]

என்று இறைவனைத் தனது உடம்பிலே காணுமாறு தெளிவுறுத்துகின்றார்.

**நபியின் கொள்கை**

முகம்மது நபியின் மார்க்கமான இசுலாமியமும் இறைவன் ஒருவனே என்பதை வலியுறுத்துகிறது. இதனை, "நீங்கள் ஏற்படுத்திக் கொண்ட கடவுளர்களுள் படைப்புக்களை முதன்முறையில் படைத்துப் பின்னர் மறுமுறையும் அவற்றைப் படைக்கக் கூடியவர் எவரும் உள்ளனரா? 'அல்லாஹ் தான் படைப்புக்களை முதன்முறையும், பின் அவற்றை மறுமுறையும் படைக்கிறான்' என்றும்,சத்தியத்தின் பக்கம் வழிகாட்டுகின்ற இறைவனையன்றி ஊகத்தை (உருவ வழிபாட்டை) பின்பற்றிச் சென்று கொண்டிருக்கிறார்கள். ஆனால் ஊகமோ சத்தியத்தின் தேவையை சற்றும் நிறைவேற்றாது என்றும்,மேலும் மக்களே உங்கள் இறைவன் ஒருவன்தான் அவனைத் தவிர வேறு இறைவன் இல்லை"[43] என்றும் உறுதியாகக் கூறுகிறது.

இவ்வாறு அனைத்து ஞானிகளும் இறைவனை ஒருவனாகவே! ஓரிறையாகவே! கண்டுள்ளது தெளிவாகிறது.

## ஒளிநிலையில் இறைவன்

இப்பரந்த பூமியில் செழித்தோங்கும் விஞ்ஞானம் எவ்வளவுதான் கண்டுபிடிப்புகளை மேற்கொண்டிருப்பினும், மனித உடம்பினுள் இயங்குகின்ற பேராற்றலை அளவிட எந்தக் கருவிகளையும் இதுவரை கண்டு பிடிக்க இயல வில்லை என்கின்றனர். அம்மனிதனுக்குள் இயங்கும் ஆன்ம சக்தியையும், அதனால் பெறுகின்ற எண்வகைப் பேறுகளையும் மெய்ஞ் ஞானத்தின் மூலமாகவே உணர்ந்து அறிய முடியும். இந்நிலை எய்திட ஒவ்வொருவரும் தன்னையறிந்த பிறகு தன்னுள் இருக்கின்ற தெய்வ ஆற்றலையறிய இயலும். அதற்குச் சித்தர்கள் கண்டுணர்த்திய பயிற்சிகளை மேற்கொள்ள வேண்டும். ஞானியர்களான சித்தர்கள் பேச்சுகள் எல்லாம் பேசாத பேச்சாக ஊமை மொழியாக, இரகசியங்களை உள்ளடக்கியுள்ளது. அதனால் தான் சிவவாக்கியர்,

*"ஓடி ஓடி ஓடி ஓடி உட்கலந்த சோதியை*
*நாடி நாடி நாடி நாடி நாட்களும் கழிந்து போய்*
*வாடி வாடி வாடி வாடி மாண்டு போன மாந்தர்கள்*
*கோடி கோடி கோடி கோடி எண்ணிலாத கோடியே!"*[45]

என்னும் பாடலில் ஆன்மிகத் துறைக்கு வந்தவர்கள் அனைவரும் சித்தர்கள் பெற்ற உன்னத நிலையை அடைய முடியாமல் செத்து போனவர்களும் கோடி கணக்காகும் எனத் தெளிவிக்கிறார். இதைப் பாம்பாட்டிச் சித்தர்,

*"கண்டவர்கள் ஒருக்காலம் விண்டிடார்களே!*
*விண்டவர்கள் ஒருக்காலம் கண்டிடார்களே*
*-------------------------------*
*கூத்தாடிக் கூத்தாடியே நீ ஆடுபாம்பே!"*[45]

என்னும் பாடலில் ஞானத்தைக் கண்டவர்கள் விண்ணுலகில் செல்வதில்லை

அவ்வாறு விண்ணுலகம் சென்றவர்களால் கூட தேவரகசியங்களைக் காணவும் இயலாது எனப் பாம்பாட்டிச் சித்தர் தெளிவாக்குகிறார்.

சித்தர்கள் இறைவனை ஒளிவடிவாகக் கண்டுணர்ந்தனர். மூலாதாரம் என்னும் புருவ மத்தியில் தோன்றுகின்ற ஞான தீபத்தைச் சோதி வடிவ இறைவனாகக் கண்டனர். தவத்தின் பயனாக யோக சக்தியான குண்டலினிச் சக்தியைக் கீழிருந்து மேலேற்றி அச்சக்தியை வாலைக் குமரியாக, ஒளி வடிவத்தில் கண்டுணர்ந்ததாகக் கருவூர்சித்தர். குறிப்பிடுகிறார்.

*"ஓசைமணிப் பூரமதில் உதிக்கும் வீடு*
*ஓகோகோ அதிசயங்கள் உள்ள வீடு*
*ஆசுகவி மதுரகவி பொழியும் வீடு*
*அவள் அருளும் கூடி விளையாடும் வீடே !"*[46] என்று குறிப்பிடுகின்றார்

என்று ஔவையாரும் தனது வீட்டு நெறிப் பாடலில் இறைவனைத் தன் உடம்பினுள்ளே ஒளியாகக் கண்டுள்ளார்,

*"ஐம்பது மொன்று மழல் போலத் தானோக்கில்*
*உம்பர் ஒளியாய் விடும்"*[47]

என்பதன் மூலம் ஒலி எழுத்துக்களை மந்திரங்களாக எண்ணப்படும், 'நமசிவய' என்னும் பஞ்சாட்சரத்தின் விரிவான ஐம்பத்து ஒரு எழுத்தில் கூறப்படும் (அட்சரங்கள்) சக்திகளை அகக் கருவிகள் மூலம் கனல் மூட்டி ஒளியேற்றி யோக நிலைக்குச் சென்றால் இறைவன் ஒளியாகத் தோன்றுவான் என்பதை மெய்ப்பிக்கின்றார். இவ்வாறு உடம்பிற்குள்ளிருந்து ஒளிரும் ஒளியானது மூலாக்கினி மூலம் சீவான்மாவிற்கு அருளைக் கொடுக்கின்றது அவ்வொளி 'அருள்ஒளி' என கூறப்படுகிறது.

## உயிர்ஒளியும் அருள்ஒளியும்

வள்ளலார் சுவாமிகள் ஞான ஒளியை மூன்றாகப் பிரித்துக் கூறுகிறார். அவை,

1. வெள்ளொளி 2. உயிர்ஒளி 3. உள்ளொளி என்பனவாகும். இதை,

> *"உள்ளொளி ஓங்கிட உயிர்ஒளி விளங்கிட*
> *வெள்ளொளி காட்டிய மெய் அருட் கனலே!"*[48]

என்கிறார். அதாவது அனைத்து உயிர்களிலும், இவ்வொளி வட்டம் (ஆரா) உயிரை இயக்கும் இறைவொளியாகத் தன் அனுபவத்தில் வள்ளலார் கண்டுள்ளதாகத் தெரிகிறது.

**வெள்ஒளி** (வெள்ளொளி) – இது மனிதனுடைய தூல உடலைக் குறிக்கும். உயிர்ஒளி சூட்சும உடலைக் குறிக்கும். **உள்ஒளி** இது காரண உடலைக் குறிக்கும்.

| | | |
|---|---|---|
| வெள்ளொளி | – | கண்ணால் காணப்படுவது |
| உயிர்ஒளி | – | மூளையால் சிந்திக்கப் பயன்படுவது |
| உள்ளொளி | – | பிறஉயிர்களிடம் அன்புகாட்டி நெகிழும் போது உருக்கம் தருகிற ஒளியாகும். இதனை இறையொளி என்பர் |

## ஞானிகள் இறைவனைக் கண்டவிதம்

அருணகிரியார்,

> *"உருவாய் அருவாய்*
> *உளதாய், இலதாய்*
> *மணியாய் ஒளியாய்"*[49]

என்று திருப்புகழில் முருகப் பெருமானை அழைக்கிறார்.

திருவாசகத்தில் மாணிக்க வாசகர்,

*"விண் நிறைந்து மண்நிறைந்து மிக்காய்*
*விளங்கொளியாய்"*

*"மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே!*

*"ஓராதார் உள்ளத்து ஒளிக்கும் ஒளியானே!"*

*"காக்கும் என் காவலனே காண்பரிய பேரொளியே!"* [50]

என்று இறைவனைப் பல்வேறு ஒளிநிலையில் கண்டுள்ளதாக அன்னை சரளாதேவி குறிப்பிடுகிறார்; தாயுமானசுவாமிகளும்

*"தீதணையா கற்பூர தீபமென நான்கண்ட*
*ஜோதியுடன் ஒன்றித் துரிசறுப்ப தெந்நாளோ!"* [51]

என்று இறைவனைக் கற்பூர தீபமாய்க் கண்டு தன் எண்ணத்தை வெளிப் படுத்துகிறார்.

கருவூர்சித்தரும் தம் பாடலில் சுழிமுனை என்கிற கண்புருவ மத்தியில் ஆன்ம ஒளியாகிய இறைவனைக் காணும் உத்தியை உறுதிபடக் கூறுகிறார், இதனைச் சித்தர்கள் முழுமையாகக் கண்டுணர்ந்ததை,

*"சுழியதற்குள் சுழியிருந்த சூட்சம் சொன்னோம்*
*சொல்லாத மவுனமுதற் கருவும் சொன்னோம்*
*ஒளிபிறக்கு முறுதியிந்த உறுதி சொன்னோம்*
*உற்பனமாய் பார்த்தவர்கள் சித்தர்தாமே!"* [52]

என்று கூறுவதன் மூலம் இறைவன் ஒளி நிலையில் சுழிமுனையில் நிலைத்திருக்கின்றான் என்றும் அவன் ஒளி நிலையில் காட்சிதருவான் என்று கூறுவதையும் உணரமுடிகிறது.

திருநாவுக்கரசு சுவாமிகள் இறைவனை,

*“விறகினில் தீயினன் பாலிற்படு நெய்போல்*
*மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்”*[53]

என்று இறைவனின் பல்வேறு நிலைகளைக் கூறுகிறார்.

இவ்வாறு ஞானிகளும், சித்தர்களுமின்றி, பிற்காலத்தில் ஏற்பட்ட சமரச சுத்த சன்மார்க்கச் சத்திய சங்கம், சித்த வித்தியார்த்திகள் இயக்கம், பிரம்மகுமாரிகள் நிலையம், உலக சமாதான இயக்கம், மெய்வழிச் சாலை ஆண்டவர் இயக்கம் ஆகியவை உருவமில்லா இறைவனை, ஒளிக் கடவுளையே போற்றிவருகிறது.

**அறிய வருவன**

இந்த இயலில் வினைகளைப் பற்றியும், அவ்வினையின் மூலம் உண்டாகும் பிறவி பற்றியும் அறியப்பட்டது. தவ வாழ்வை மேற்கொண்ட வர்களுக்கு வினை நீக்கம் பெற்று விடும். என்பதையும், மனத்தை ஒருநிலைப்படுத்துவதன் மூலம் யோகம் கூடிவரும் என்பதும் வெளிப்படுத்தப்பட்டது. ஆன்ம வேட்கை கொண்ட ஒருவருக்கு குருவின் அவசியமும், அவரைப் போற்றும் விதமும் விளக்கப்பட்டது. ஆன்ம விளக்கத்தால் இறைவனைக் காணமுடியும் என்றும், இறைவனை எப்போதும் தியானிப் பவர்களுக்கு துன்பங்கள் கிடையாது எனவும், வினைகள் நெருங்காது என்றும் அறியப்பட்டது. சமயங்கள் பலவாயினும் சித்தர்கள் சமயங்ளைக் கடந்து நின்று செயலாற்றினர். இறைத்தன்மை பற்றியும் ஆன்ம விளக்கத்தைப் பற்றியும், இறைவன் ஒருவனே என்பதைப் பற்றியும் அறியமுடிந்தது. ஆகம, வேதங்கள், மந்திரங்கள் அதன் தன்மைகள் அறியப்பட்டது. மனத்தை வென்று யோக நிலையில் இருப்பதற்கான சித்தர்களின் எண் விதத் தந்திரங்களான இயமம், நியமம் பற்றி விளக்கப்பட்டு குரு உபதேச முறைகளையும் அறியப்பட்டது. அரியும்,

சிவனும் ஒன்றுதான் என்றும், அந்தத் தெய்வங்களும் உருவத்தில் இல்லை எனவும், ஒளி நிலையிலேயே உள்ளதென்றும் சித்தர்கள் உணர்த்தியதை அறிய முடிந்தது.

உள்ளொளியைப் பற்றியும், உயிர்ஒளி, அருள்ஒளி, வெள்ளொளி ஆகிய சோதி நிலைகளைப் பற்றியும் அந்தச் சோதியினுள் சோதியாக இறைவன் நிறைந்திருப்பதை ஞானிகளும், சித்தர்களும் கூறிய செய்திகளை விரிவாகக் காண முடிந்தது.

இவ்வாறாகச் சித்தர்களும், ஞானிகளும் இறைவனை ஒளிவடிவமாகக் கண்டுணர்ந்து, ஆனந்தமடைந்தனர். அதோடன்றி உருவமில்லாத இறைவனைக் கற்சிலைகளிலும், செப்பு, பித்தளையிலான வடிவத்திலும், மண்சிலைகளிலும் தேடுவதை விடுத்து, ஒளி வழிபாட்டினை மக்களுக்கு வலியுறுத்தியவர்கள் சித்தர்களாவார்கள் என்பதை அறிய முடிகிறது.

## குறிப்புகள்

1. திருமூலர், திருமந்திரம், பா. 1720.
2. மாணிக்க வாசகர், திருவாசகம், பா. 60.
3. திருவள்ளுவர், திருக்குறள், பா. 620.
4. அகப் பேய்ச்சித்தர், சித்தர்பாடல்கள், ப. 129.
5. தாயுமானவர் பாடல், ப. 133.
6. மேற்படி, ப. 134.
7. திருவள்ளுவர், திருக்குறள், பா. 999.
8. அரு.இராமநாதன், ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள், ப. 570.
9. சித்தர்பாடல், தனிப்பாடல்
10. க.நாராயணன், சித்தர் சிவவாக்கியர், ப. 189.
11. திருமூலர், திருமந்திரம், பா. 1680.
12. கொங்கணவர், சித்தர்பாடல், பா. 30.
13. இரகுநாதன். எஸ், புத்தர், ப. 15.
14. சிவானந்த பரமஹம்சர், சித்தவேதம், ப. 29.
15. ஓசோ, தந்திரா ஆன்மிகமும் பாலுணர்வும், ப. 5.
16. திருமூலர், திருமந்திரம், பா. 139.
17. மேற்படி, பா. 531.
18. மேற்படி, பா. 533.
19. மாணிக்கவாசகர், சிவபுராணம்
20. திருமூலர், திருமந்திரம், பா. 2011.
21. மாணிக்கவாசகர், சிவபுராணம் வரி 76

22. பட்டினத்தார், சித்தர் பாடல்கள், பா. 16.

23. திருமூலர், திருமந்திரம், பா. 2548.

24. க.நாராயணன், சித்தர் சிவவாக்கியர், ப. 73.

25. திருமூலர், திருமந்திரம், பா. 1823.

26. மேற்படி, பா. 2958.

27. அகத்தியர், அந்தரங்க தீட்சாவிதி, ப. 11.

28. ஆனைவாரி ஆனந்தன், சித்தமருத்துவ வரலாறு, ப.122.

29. தொல்காப்பியர், தொல்காப்பியம், சூ. 480.

30. கருவூர்சித்தர், சித்தர்பாடல்கள், ப. 159.

31. மேற்படி, பா. 268.

32. மேற்படி, ப. 269.

33. மேற்படி, ப. 270.

34. சிவவாக்கியர், சிவவாக்கியம் ஆயிரம், பா. 301.

35. மேற்படி, பா. 238.

36. மேற்படி, பா. 294.

37. மேற்படி, பா. 392.

38. மேற்படி, பா. 321.

39. மேற்படி, பா. 195.

40. திருமூலர், திருமந்திரம், பா. 270.

41. பட்டினத்தார், சித்தர் பாடல்கள், ப. 220.

42. மேற்படி, பா. 60.

43. நபிகள் நாயகம், திருக்குர்ரான், ப. 423, பத்தி—34.

44. சிவவாக்கியர், சித்தர்பாடல்கள், பா. 720.

45. பாம்பாட்டிச் சித்தர், மேற்படி, பா. 32.

46. கருவூர்சித்தர், மேற்படி, பா. 48.

47. சத்திய நாராயணன், நீதி நூல்கள் ஏழு, பா. 57.

48. சிதம்பரம் இராமலிங்கம், திருஅருட்பா, அகவல், 1539.

49. அருணகிரிநாதர், திருப்புகழ், பா. 50.

50. மாணிக்கவாசகர், திருவாசகம், ப. 29.

51. தாயுமானவர் பாடல்கள், ப. 209.

52. கருவூர்சித்தர், சித்தர்பாடல்கள், பா. 48

53. திருநாவுக்கரசர், தேவாரம், பா. 98.

## இயல் – 5

# மரணமிலாப் பெருவாழ்வும் சமாதி நிலையும்

மனிதனுக்கு வாழ்வாதாரம் உயிராகும். உயிர் பிரிந்தால் இறப்பு நேரிடும். அவ் இறப்பை எவ்வாறு தவிர்க்கலாம் என்பதை இவ்வியலில் எடுத்துரைக்கப்படுகிறது. உயிர் என்னும் சொல்லுக்குச் சீவன் என்று பொருள் உண்டு, சீவன் என்பது சிவமாகும். இச்சிவமாகிய உயிரைக் கண்டறிய மெய்ப்பொருள் விளக்கம் வேண்டும். இந்த 'மெய்' என்னும் பொய்யுடலில் உண்மை எனும் உயிர்ப் பொருளை அறிவதற்குப் பகுத்தறிவாகிய ஏழாம் அறிவு (தேவ அறிவு) வேண்டும். இதுவே பேரறிவு அல்லது 'ஞானம்' எனப்படும்.

உயிர், உடலில் எங்கிருந்து செயல்படுகிறது என்பதை மெய்ஞ்ஞானிகள் அறிந்துள்ளனர். அவ்வுயிரைக் கண்டறிந்து பிறவிப் பயனை அடைந்திட மெய்ஞ்ஞானிகளான சித்தர்கள், ஞானிகள், குருமார்கள் தன்னை நாடிவரும் மனிதர்களுக்கு அறிவுறுத்தினர். அவர்கள் மனிதர்களுக்கு உடலினுள் உயிர்விளங்கும் இடத்தைச் சுட்டிக்காட்டி அதனுடன் மனத்தைத் தொடர்புப்படுத்தி முக்தி அல்லது மோட்சமடைய வழிவகுத்து அருளினார்கள். இவ்வாறு உலகத்தில் பிறந்த மனிதர்கள் தத்தம் நல்வினைக்கு ஏற்றவாறு இறைஞானமும், குருவை நாடலும் ஏற்படுகிறது. அதன்மூலம் தெளிவு, விழிப்பு ஏற்பட்ட, ஞானத் தேடலை உடையவர்களுக்கே உயிர்விளக்கமாகிய, சீவ விளக்கம் கிட்டுகிறது. அச்சீவன் சிவமாகி நிற்றலை 'திருமூலர் தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவனே சிவலிங்கம்' என்று திருமந்திரப் பாடலில் குறிப்பிடுகிறார்.

இவ்வாறுள்ள சீவனின் (உயிரின்) வடிவம் எவ்வளவு என்பதன் திருமூலர் கருத்தை முன் இயலில் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

இவ்வுயிரைக் காண்பதற்கு மெய்ஞ்ஞான குருக்கள் மெய்உபதேசம், திருவடி தீட்சை, பஞ்சாட்சர தீட்சை, வாசியோகம், சன்யாச தீட்சை, சரப் பழக்கம் (பிரணாயாமப் பயிற்சி) ஆகியவற்றை அருளினர்கள். அதன் மூலம் ஆன்மா பரமான்மாவை அடைய அவர்கள் வழி வகுத்தார்கள். கிறித்துவ வேதமான பைபிள் வார்த்தையும் இங்கே குறிப்பிடத்தக்கது.

> *“நானே வழியும் சத்தியமும் ஜீவனுமாய் இருக்கிறேன்.*
> *என்னாலே யல்லாமல் ஒருவனும் பிதாவிடத்தில் வாரான்”*[1]

என்று மேற்கண்ட (14 : 6) கருத்தினைப்புனித பைபிள் மெய்ப்பிக்கிறது.

திருக்குரானின் தீர்க்க தரிசனத்திலும் இதே கருத்தினைக் கீழ்க்கண்டவாறு தெளிவிக்கிறது

> *“அவரே தன் தூதரை நேரான வழியைக் கொண்டும்*
> *சத்திய மார்க்கத்தைக் கொண்டும் அனுப்பி அருளினார்”*[2] (48:28)

திருமூலர், சீவனும் சிவனும் வேறுவேறில்லை என்று திருமந்திரத்தில் குறிப்பிடுகிறார்.

> *“சீவனென சிவனென்ன வேறில்லை*
> *சீவனார் சிவனாரை அறிகிலர்*
> *சீவனார் சிவனாரை யறிந்தபின்*
> *சீவனார் சிவனாயிட் டிருப்பாரே!”*[3]

என்று இரண்டும் ஒரு நிலையாவதை விளக்குகிறார்.

ஆகையால் உயிரைப் பற்றி அறிவது மனித உடலில் உள்ள கடவுளைப் பற்றி அறிவதாகும் என்பது தெளிவாகிறது. இறைவனைப் பற்றியறிவதற்கு இறைவன் தட்சிணாமூர்த்தி, தானே குருவாகவும், சனகர், சனாதனர்களையும். நாதச்சித்தர்களையும், பதினெண் சித்தர்களையும் உருவாக்கினார். கிருஷ்ணபகவான், ஆதிசங்கரர், ஏசுபிரான், முகம்மது நபிகள், திருமூலர், திருவள்ளுவர், இராமலிங்க வள்ளலார், இராமகிருஷ்ண பாரஹம்சர், சிவானந்த பரமஹம்சர் போன்ற எண்ணில்லாத ஞானிகளை மண்ணுலகிற்குத் தூதர்களாக அனுப்பி உயிர்கள் உய்வு பெறச் செய்துள்ளமையும் தெளிவாகின்றது.

## அல்லல் பிறவி

மனிதப்பிறவி துன்பத்திற்குரியது என்று மாணிக்க வாசகர் வேதனைப்படுகிறார். ஆதலால் பிறவியில் வரும் துன்பங்களை நீக்க இறைவனை வேண்டுகிறார். இறைவனால் மட்டுமே பிறவித் தொடரை அறுக்க முடியும் என்பதை உறுதிபடுத்திட,

*"அல்லல் பிறவி அறுப்பானே"*[4]

என்று கூறுவதன் மூலம் அறியலாகிறது துன்பமாகிய பிறவியை அறுப்பதற்கு முக்திநிலை பெற வேண்டும் என்று சித்தர்கள் வலியுறுத்தினர். யோக மார்க்கத்தின் மூலம் அவர்கள் 'சித்து' நிலை அடைந்தனர். சீவன் முக்தி பெற்றவர்கள் சூக்கும வடிவத்தோடு (ஒளியுடலாக) இறப்பைப் புறந்தள்ளி இறப்பிலா பெருவாழ்வு வாழ்ந்து கொண்டிப்பதாகக் கருதப்படுகிறது. மறு பிறவி என்னும் உயிர்ச் சுழற்சி முறையை நிறுத்திப் பிறவிக்குக் காரண வித்தாகிய வினைகளை அழித்து இறைவன் திருவடியில் நாட்டம் கொண்டவர்கள் சித்தர்கள், ஞானிகளாவர்.

இதனை வள்ளுவரும்,

*“பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்*

*இறைவனடி சேரா தார்”*[5]

என்பதன் மூலம் இறைவனுடைய திருவடியைச் சாராதவர்களுக்கு இப் பிறவியாகிய பெருங்கடல் என்றும் துன்பம் விளைவிக்கும் என்பதை மறை பொருளாகத் தெளிவுறுத்துவது விளங்குகிறது. குதம்பைச் சித்தர் பிறவியை நீக்கிடப் பேரறிவாகிய ஞானம் வேண்டுமென்பதை,

*“பிறவியை நீக்கிட பேரின்பம் நோக்கிய*

*அறிவு பெரிதாமடி – குதம்பாய்*

*அறிவு பெரிதாமடி”*[6]

என்னும் பாடலடியின் மூலம் வலியுறுத்துகிறார்.

பிறவிகள் ஏழுவகை என்று கைவல்ய நவநீதம் எனும் நூல் கூறுகிறது அவை தேவர், மனிதர், விலங்குகள், பறவைகள், ஊர்வன, நீர்வாழ்வன, தாவரங்கள் முதலியனவாகும்.

## உடலின் பெருமை

உலகில் உள்ள பிறவிகளில் உயர்ந்த பிறவியாகக் கருதப்படுவது மனிதப் பிறவியாகும். ஔவையாரும் ‘மானிடராய் பிறத்தல் அரிது’ என்று கூறுகிறார். இந்த உடலை ‘பொன்மணி மாளிகை’ என்றும் ‘நடமாடுங் கோயில்’ என்றும் ஞானிகள் பெருமைப் படுத்தியுள்ளார்கள். திருமூலர் இவ்வுடம்பின் பெருமையை

*“உடம்பினை முன்னம் இழுக்கென்றிருந்தேன்*

*உடம்பினுக் குள்ளே யுறுபொருள் கண்டேன்*

*உடம்புளே உத்தமன் கோயில் கொண்டானென்*

*உடம்பினை யானிருந் தோம்பு கின்றேனே!”*[7]

என்னும் பாடலில் காயசித்தி உபாயம் எனும் தலைப்பில் உடம்பைப் போற்றுகின்றார்.

## மனிதத் தோற்றம்

அதிசயத்தக்க உடல் எதிலிருந்து தோன்றியிருக்கும் என்று “மேல் நாட்டு அறிஞர்களான டார்வின்ஸ், மிச்சினிக்காப் போன்றவர்கள் கூறியுள்ளனர். டார்வின்ஸ் ‘‘குரங்கிலிருந்து மனிதன் தோன்றினான் என்றும், மிச்சினிக்காப் குரங்கிலிருந்து மனிதன் தோன்றவில்லை என்றும் இருவேறுபட்ட கருத்துகளைக் கூறியுள்ளார்”[8]. என மனிதன் தோன்றிய விதம் பற்றிக் கூறுவதாகச் சித்தமருத்துவ உடல் தத்துவம் எழுதிய சிவதாணுப்பிள்ளை குறிப்பிடுகிறார்.

## உயிரியல் அறிஞரின் கருத்து

“பூமியில் அறிவியலார் கூற்றுப்படி 3000 மில்லியன் ஆண்டுகளுக்கு முன் உயிரினங்கள் தோன்றின. 500 மில்லியன் ஆண்டுகளுக்கு முன் முதுகெலும்பற்றவை தோன்றின. நிலம் – நீர் வாழ்பவை 325 மில்லியன் ஆண்டுகளுக்கு முன்னரும் 250 மில்லியன் ஆண்டுகளுக்கு முன் ஊர்வனவும், 165 மில்லியன் ஆண்டுகளுக்கு முன் பாலூட்டிகளும் தோன்றின.

மேற்கூறிய யாவும் தோன்றிய பின் பரிணாம வளர்ச்சியின் சிகரமாக இரண்டு மில்லியன் (இருபது இலட்சம்) ஆண்டுகளுக்குமுன் மனிதன் தோன்றியிருக்கின்றான்”[9] என்று உயிரியல் அறிஞர் கூறியிருப்பதாக ஆனைவாரி ஆனந்தன் குறிப்பிடுகிறார்.

## மனிதனின் தோற்றம் பற்றியச் சித்தர்கள் கருத்து

மனிதன் தோற்றம் பற்றிச் சித்தர்கள்வழி ஆராய்ந்து பார்க்கும் போது மண், நீர், நெருப்பு, காற்று, வெளி என்னும் ஐம்பூத கலவையால் மனிதன் உருவாகினான் என்பது விளங்குகிறது. இதனை மெய்ப்பிக்கும் வகையில் திருமூலர் ஞான உபதேசம் பாடல் மூலம், உயிரும் உடலும் உருவானதை விளக்குகிறார்.

*''மண்ணுடன் நீருமருவி யுடலதாய்*
*விண்ணொடு வாய்வு விரும்பியுயிரதாய்*
*திண்டழல் தன்னொடு சேர்ந்து கலந்து நின்*
*றண்டழ லாக லமரும் சிகாரமே!''*[10]

என்பதன் மூலம் மண்ணும் நீரும் சேர்ந்தது உடம்பு என்றும், காற்றும் வெளியும் சேர்ந்தது உயிர் என்றும் இவை இரண்டையும் சேர்த்து வைத்து இயக்குவது நெருப்பு என்றும் விளக்குகிறார். உடலையும், உயிரையும் இயக்குவதற்கு 'நெருப்பு' முக்கியச் செயல்வகிக்கின்றது. நெருப்பை உண்டாக்குகின்ற சக்தி உடலில் எப்பொழுது நின்று விடுகிறதோ அப்போது உயிர் உடலைவிட்டு நீங்கிவிடுகிறது. அவ்வுடலை மண்ணில் புதைத்து சில ஆண்டுகள் சென்றபின் பார்த்தால் எல்லாம் மண்ணோடு சேர்ந்து மண்ணாகிவிடும். உயிர்கள் பலவிதமாய்த் தோன்றுகின்றன அவை மாட்டுச்சாணியிலிருந்து புழுக்களும், கழுதையின் வெட்டையிலிருந்து தேள், வண்ணத்துப்பூச்சி, தம்பலப்பூச்சிகளும், தம்பலப் பூச்சிகளை உலர்த்திப் பொடித்து வைக்கோலினால் மூடித் தண்ணீர் தெளித்துவைத்தால் நூற்றுக்கணக்கான வண்ணத்துப் பூச்சிகளும் உண்டாகி விடுகின்றன. இவை மண்ணும், நீரும், நெருப்பும் சேர்ந்து உருவாதல்போல உலகத்திலுள்ள எழுவகைத் தோற்றம், 84 இலட்சம் சீவராசிகள், உயிர்ப் பிராணிகள், மக்கள் ஆகியவை அனைத்தும் பஞ்சபூதத்திலிருந்து உருவானவை ஆகும்.

இவ்வாறு பஞ்சபூதங்கள் ஒன்றிணைந்து அதன் அடிப்படையிலே மனிதகுலம் தோன்றியது. பஞ்ச பூதங்களையும் அவற்றிற்குரிய தெய்வங்களையும் இம்மனித உடலிலேயே காணலாம் என்பது சித்தர்கள் கண்ட விஞ்ஞானமாகும்.

## மனித உடம்பின் உட்கூறுகள்

மனித உடலானது வெறும் சதைப்பிண்டம் மட்டுமல்லாமல் எலும்பு, தசை, நரம்பு, தோல் ஆகியவற்றையும் கொண்டுள்ளன. அவ்வுடல் சிந்திக்கும் ஆற்றலும், பேசும் திறனும் ஒருங்கே பெற்று மற்ற சீவராசிகளிடமிருந்து வேறுபடுகின்றன. மனித உடலை இயக்குபவை 96 தத்துவங்களாகும். அத் தத்துவங்கள் உடல் முழுவதையும் செயல்படுத்தி இயக்குகிறது. இவ்வுடலானது ஐந்து வகைப்படும். அவை, ''1. பருவுடம்பு, 2. வளியுடம்பு, 3. மனவுடம்பு, 4. அறிவுடம்பு, 5. இன்ப உடம்பு ஆகும். இதனை முறையே 1. அன்னமயக்கோசம், 2. பிராணமயக்கோசம், 3.மனோமயக்கோசம், 4. விஞ்ஞானமயக்கோசம். 5. ஆனந்த மயக்கோசம்''[11] என்று வடநூலார் கூறுவர்.

இவ்வுடலானது தலையிலிருந்து கால்வரையில் ஐந்து பிரிவுகளாக உள்ளன. அதனை ஐம்பூதங்கள் தாங்கி நிற்கின்றன என்பர். அவை முறையே பாதத்திலிருந்து தொப்புள்வரை நீர் என்றும், தொப்புளிலிருந்து மார்புவரை தீ என்றும், மார்பிலிருந்து தோள்வரை காற்று என்றும், கழுத்துக்கு மேல்பகுதியை வான்வெளி என்றும், உடலைத் தாங்கும் பாதத்தை நிலம் என்றும் திருமூலர் குறிப்பிட்டுள்ளார்.

*"உரமடி மேதினி யுந்தியி லப்பாம்*
*விரவிய தன்முலை மேவிக்கீ ழங்கி*
*கருமுலை மீமிசை கைக்கீழ்க் காற்றாம்*
*விரவிய கந்தமேல் வெளியாமே!"*[12]

என்றும் மேலும்,

உடம்போடு கூடிய உயிர் உறைகின்ற இல்லமாகவும், ஆலயமாகவும் உருவகிக்கின்றார் ஆதலால்,

'ஊனுடம்பே ஆலயம்' என்றும் 'படமாடும் கோயில்' என்றும் ஞானிகள் கூறுவதன் வழி அறியலாம். ஔவையாரும் இவ்வுடலில் ஈசனாகிய சிவ பெருமானைக் காண இயலும் என்பதை,

*"மாசற்ற கொள்கை மனத்தில் அடைந்தக்கால்*
*ஈசனைக் காட்டும் உடம்பு"*[13]

என்று கூறுகிறார்.

பஞ்சபூதத்திற்கு அதிதேவதைகளான, பிரம்மா பிருதிவிக்கும் (மண்) விஷ்ணு நீருக்கும், ருத்ரன் நெருப்புக்கும், மகேசன் வாயுவுக்கும் சிவன் ஆகயாத்திற்கும் மூலத் தெய்வங்களாகச் சித்தர்கள் கருதினார்கள். இதனை ஔவையாரும்,

*"மாயன் பிரமனு ருத்திரன் மகேசனோ*
*டாயுஞ் சிவ மூர்த்தி ஐந்து"*[14]

எனவும் ஐந்து மூர்த்திகளைப் பஞ்சபூதங்களுடன் கூறுகிறார்.

பஞ்சபூத சக்திகளைப் பிரணவத்தில் கலக்க வைத்து விட்டால் (சமாதியில் நிலை நிறுத்தினால்) உடலை விட்டு உயிர் போகாது என்பதை ஔவைக் குறள் கூறுகிறது.

*"அஞ்சு மடக்கி யறிவோ டிருந்த பின்*
*துஞ்சுவ தில்லை உடம்பு"*[15]

என்று கூறுவதன் மூலம் அறியலாம். அவ்வாறு நிலை நிறுத்த வில்லையெனில் உயிர் சென்று விடும் எனவும் கூறுகிறார். இவ்வாறான அண்ட பிண்டக் கோட்பாட்டினை உள்ளடக்கிய உடலைப் படைத்த இறைவனிடம் பணிய வேண்டும் என்று குதம்பைச் சித்தர் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்.

*"அண்டமும், பிண்டமும் ஆக்கிய தேவனை*
*தெண்டனிட் டேத்தடி – குதம்பாய்*
*தெண்டனிட் டேத்தடி"*[16]

என்றும் இறைவனை,

*"நீரும் நெருப்பும் நெடுங்காற்றும் வானமும்*
*பாருமாய் நின்றதைக் காண் – குதம்பாய்*
*பாருமாய் நின்றதைக் காண்"*[17]

என்பதன் மூலம் இறைவன் பஞ்சபூதக் கூறாகி நிற்பதைக் குதம்பைச் சித்தர் தெளிவுறுத்துகிறார்.

## தொண்ணூற்றாறு தத்துவங்கள்

மனித உடம்பானது பஞ்சபூதங்களால் நிர்மானிக்கப்பட்டுள்ளது எனினும் பொறி, புலன் முதலிய கரணங்களால் மிக நுண்ணியதாக இயக்கப்பட்டு வருகிறது. இதற்குத் தத்துவங்கள் என்று சித்தர்கள் பெயரிட்டு அழைக்கின்றனர். அதன் விபரத்தினை கீழ்க்கண்டவாறு காணலாம்.

"**1.** பூதங்கள் ஐந்து, **2.** பொறிகள் ஐந்து **3.** புலன்கள் ஐந்து **4.**பொறிச் செயல் ஐந்து **5.** புலன் செயல் ஐந்து **6.** கரணம் நான்கு **7.**உள்ளம் (அறிவு) – ஒன்று **8.** குடல் ஐந்து **9.** உடம்பு ஐந்து **10.**வினைகள்

இரண்டு 11. பண்பு மூன்று 12. பற்று மூன்று 13. இயல்பு மூன்று 14. மண்டலம் மூன்று 15. தூண்டல் எட்டு 16. நிலை ஐந்து 17. ஆதாரம் ஆறு 18. நாடி பத்து 19. காற்று பத்து 20. குற்றம் மூன்று முதலிய 96 தத்துவங்களும் மனிதனின் பிறப்புத் தொடங்கி உடல் இயக்கத்திற்குத் துணைபுரிந்து இறக்கும் வரையிலும் பெரும் பங்கு வகிக்கின்றன."[18]

இவ்வாறு மனித உடல் பல்வேறு தத்துவங்களை உள்ளடக்கி உயிரை நிலைநிறுத்தும் பணியைச் செய்கின்றன. அத்தத்துவங்கள் மெய்யுடம்பைச் சிவமாக்கும் தன்மைக்கும் கொண்டு செல்கின்றன. ஆதலால் உடலை வளர்த்தால் உயிர் வளரும். இவ்வுடல் அழியாமல் காக்க சித்தர்கள் காய கற்பம் முறையைக் கண்டனர்.

## நோய்கள்

ஆதிகால மனிதன் முதற்கொண்டு, விலங்கினங்கள் அனைத்தும் இயற்கையைச் சார்ந்தே வாழ வேண்டி இருந்தது. மனிதனுக்கு இயற்கைச் சீற்றங்களாலும், காடுவாழ் உயிரினங்கள் போன்றவற்றாலும், உண்ணும் பொருட்களில் நஞ்சாகியும் உடலுக்குத் தீங்குகள் நேர்ந்தன. அவன் தன்னைத் தற்காத்துக் கொள்ளவும், நோயின் தாக்கத்திலிருந்து விடுபடவும், முன்னெச்சரிக்கையாகச் செயல்பட வேண்டியிருந்தது. அவற்றில் நோய் என்பது அவனுக்கு நீண்ட நாள் துன்பத்தை உண்டாக்கியது. அதனால் உடல் குன்றும் நிலையை அடைந்து இறப்பிற்கு ஆளாக்கியது. இந்த நோயைச் சித்தர்கள் உடற்பிணி 4448 என்று வகைப்படுத்தியுள்ளனர்.

## நோய் - பிணி - சொல்லாய்வு

தொல்காப்பியம், சங்க இலக்கியம் ஆகியவற்றில் நோய், பிணி என்ற சொற்கள் உடல்நலக்குறைவு என்ற நிலையினைச் சுட்டிக் காட்டப் பயன்படுத்தப்பட்டுள்ளன. நோய், பிணி என்ற சொற்கள் ஒன்றனுக்கு

ஒன்று பதிலியாகப் பயன்படுத்தப்பட்டுள்ளதையும் தொல்காப்பியத்தில் காணமுடிகிறது என்று ஆனைவாரி ஆனந்தன் குறிப்பிடுகிறார். எடுத்துக்காட்டாக,

*'பையுளும் சிறுமையும் நோயின் பொருள'*

*'நோயும் இன்பமும் இருவகை நிலையில்'*

*'அவரவர் உறுபிணி தமபோற் சேர்த்தியும்'*

*'மூப்பே பிணியே வருத்தம் மென்மையொடு*
*யாப்புற வந்த இளிவரல் நான்கே'*

என்றும், மேலும் சங்க இலக்கியங்களிலும் நோய், பிணி என்ற சொற்கள் உடல், மனத்துன்ப நிலைகளைக் குறிப்பனவாகக் கையாளப்பட்டுள்ளன.''[19]

திருவள்ளுவர் மருந்து எனும் தலைப்பின்கீழ் நோய், பிணி, ஊறுபாடு போன்ற சொற்களைப் பயன்படுத்தியிருக்கின்றார். நோய் என்பது உடலைப் பற்றி மட்டுமின்றி உள்ளத்தைப் பற்றியும் துன்பம் தருவதாகக் குறிப்பிடுகின்றார். 'நோதல்' எனும் அடிப்படையில் நோய் உருவாவதை அறியமுடிகிறது. எடுத்துக்காட்டாக,

*'மிகுனும் குறையினும் நோய் செய்யும்'*

*'மாறுபாடு இல்லாத உண்டி மறுத்துண்ணின்*
*ஊறுபாடு இல்லை உயிர்க்கு'*

*'நோய் நாடி நோய் முதல் நாடி'*

*'உற்றான் அளவும் பிணி அளவும்'* [20]

என்னும் குறட்பாக்கள் நோய், மருத்துவம் சார்ந்தது என்று குறிப்பிடப் பட்டுள்ளன.

*“நோய் எல்லாம் நோய் செய்தார் மேலவாம் நோய் செய்யார்*

*நோயின்மை வேண்டு பவர்”*

என்னும் குறட்பாவில் பிறர்க்குத் துன்பம் செய்தால் துன்பம் செய்தவரைத் துன்பம் சாரும் எனும் கருத்தில் துன்பத்தையே நோய் என்றும் வள்ளுவர் குறிப்பிடுவது தெளிவாகிறது.

மேலும், காமம் வயப்பட்டத் தலைவி தன் கண்களின் மூலம் காம நோயைத் தெரிவித்தலை,

*“பெண்ணினால் பெண்மை உடைத்து என்ப கண்ணினால்*

*காமநோய் சொல்லி இரவு”*[21]

என்னும் குறட்பாவில் தலைவித் தன் தலைவனைப் பிரியாதிருக்க வேண்டும் என்ற குறிப்பு அறிவுறுத்தலாக வள்ளுவர் கூறுகிறார். திருமூலர் நோயினைப் பற்றி,

*“மறுப்பது உடல்நோய் மருந்தென லாகும்.*
*மறுப்பது உளநோய் மருந்தெனச் சாலும்*
*மறுப்பது இனிநோய் வாரா திருக்க*
*மறுப்பது சாவை மருந்தென லாமே!”*[22] (திருமூலர் எண்ணாயிரம்)

என்னும் பாடலில் உடல் நோய், உள்ளநோய் ஆகிய இரண்டுக்கும் மருந்தாகவும், சாவை மறுக்கவும், நோயை மறுக்கவும் தவமே மருந்தெனக் குறிப்பிடுகின்றார். இவ்வாறு நோய், பிணி பற்றிய விளக்கங்களை அறிய முடிகிறது. உயிர் உடலை விட்டுப் பிரிந்தால் மீண்டும் உடலைச் சேராது என்பதைத் தெளிவாக்கத் திருமூலர், உடல் தத்துவங்கள் கெடுவதால் மரணம் ஏற்படும் என்கின்றார். இறப்பு நேர்ந்தவுடன் சீவனாகிய ஆத்மா உடலை விட்டு போவதை,

*"காக்கை கவரிலென் கண்டார் பழிக்கிலென்*

*. . . . . . . .   . . . . . . .   . . . . . . .*

*தோற்பையுள் நின்று தொழிலறச் செய்தூட்டுங்*

*கூத்தன் புறப்பட்டுப் போன இக்கூட்டையே"*[23]

என்னும் பாடலில் சீவன் போவதைத் தெளிவுறுத்துகிறார். மேலும்

*'ஆண்டாண்டு தோறும் அழுதுபுரண்டாலும்*

*மாண்டார் வருவரோ'*

என்று ஞானிகள் மாண்டவர் மீள்வதில்லை என்னும் கருத்தில் கூறியுள்ளனர். சிவவாக்கியரும்,

"இறந்தவர் பிழைப்பதில்லை, இல்லை இல்லை இல்லையே!"[24] என்று கூறியுள்ளார். மேற்கூறியவற்றிலிருந்து உயிர் உடலை விட்டுப் பிரிந்தால் மீண்டும் அவ்வுடலுக்குள் நுழைய முடியாது என்று உறுதியுடன் திருமூலர், சிவவாக்கியர் பாடல்கள் உணர்த்துகின்றன.

## மன மகிழ்ச்சி

மனிதர்களின் நோய்த்தாக்கத்திற்கு மன இறுக்கம் முக்கியக் காரணமாக அமைகிறது. 'வாய்விட்டு சிரித்தால் நோய்ப்போகும்' என்பது முதியோர் வாக்கு, ஆதலால் சிரிப்பு என்பது பலவிதமான நோய்களை நீக்கும் மாமருந்தாகும். 'அகத்தின் அழகு முகத்தில் தெரியும்' என்னும் பழமொழிக் கேற்ப, மனமகிழச்சியை, மன வருத்தத்தை முகமானது எடுத்து காட்டும் கண்ணாடியாகும். மனித உடலில் உள்ள அனைத்துத் தசைகளையும் ஒருங்கிணைக்கும் உறுப்பு 'வாய்' ஆகும். மனிதன் 'சிரிப்பதன் மூலம்' மனதிலுள்ள சுமைகளும், சோர்வுகளும், கவலைகளும் நீங்கி விடுகின்றது. உலகத்தில் உள்ள அனைத்து மக்களும்

நகைச்சுவையை ஒரு மாமருந்தாகவே எண்ணி வாழ்ந்து வருகின்றனர். தமிழர்களின் இயல், இசை நாடகங்களில் நகைச் சுவைப் பகுதி பெரும் பங்கினை வகித்து வருகிறது. “நகையே அழுகை.... மெய்ப்பாடென்ப”[25] என்று தொல்காப்பியம் ‘நகை’ என்று நகைச்சுவையை முதன்மைப் படுத்துகிறது. துன்பம் வருகின்றபோது சிரிக்க வேண்டுமென வள்ளுவரும் ‘இடுக்கண் வருங்கால் நகுக’ என்று கூறுகிறார்.

சிரிப்பதன் மூலம் மனம் மகிழ்ச்சியடைந்து தெளிவாகிறது, மனம் விரிவடைந்து வாட்டத்தைப் போக்குகிறது. நன்றாகச் சிரிப்பவர்கள் என்றும் இளமையுடனும், அழகுடனும் திகழ்வார்கள். சிரிப்பைக் குறைத்துக் கொண்டவர்கள் விரைவில் வயோதிகத் தோற்றத்தை அடைந்துவிடுவர். நன்கு சிரிப்பதன் மூலம் மனித உடலிலுள்ள நாளமில்லாச் சுரப்பிகளும், பிட்யூட்டரி சுரப்பியும் சிறந்த முறையில் செயல்படுகிறது. சிரிக்கும்போது காற்றுப்பை விரிவடைந்து இதன் மூலம் பிராணவாயு கிடைப்பதால் நீண்டகாலம் மனிதன் வாழ முடியும் என்பது அறிவியல் அறிஞர்களின் கருத்தா

## நோய் வரக்காரணம்

மனிதனுக்கு நோய்வர அடிப்படைக் காரணமாக அமைவது உடலில் தோன்றும் கிருமிகள் ஆகும். இக்கிருமிகள் உணவைச் சரியாகச் சீரணிக்க விடாமலும், கல்லீரல், நுரையீரல், பெருங்குடல், சிறுகுடல், இரைப்பை ஆகியவற்றைத் தாக்கி மனிதனை நோய்க்கு ஆட்படுத்துகிறது. கிருமிகள் அவர்கள் உண்ணும் உணவுகள் மூலமாகவும், பாலுறவு தொடர்பாகவும் நோயை ஏற்படுத்துகிறது. ஒழுக்க வாழ்வும், நெறியான உணவு முறைகளும் மேற்கொண்டு வாழ்வதன் மூலம் ஓரளவுக்கு இந்த வகையான கிருமித் தாக்கத்திலிருந்து விடுபட முடியும். அடுத்ததாக மனிதனின் நோய்க்கு சமுதாயத்தில் நிலவும் பொருளாதாரப்

பற்றாக்குறை, வறுமை, பாலுறவில் பற்றாக்குறை முதலியவை மூலமாகப் பிறரை நாடும் சூழ்நிலை, கட்டுப்பாடில்லாத வாழ்க்கை முறை, உணவு முறை ஆகியவற்றால் மனிதனுக்கு நோயின் தன்மை வீரியம் பெறுகிறது. அவன் உண்ணும் மருந்துகளும் நோய்க்கேற்றவாறு வீரியம் பெற்றதாக இருக்க வேண்டும். நோய்க்கு ஆட்பட்ட மனிதன் மனத்தளவில் தளர்ச்சி அடைந்து மன அழுத்த நோய்க்கு தள்ளப்படுகின்றான். இதனால் சமுதாயத்தில் ஒதுக்கி வைக்கும் நிலையும் ஏற்படுகிறது. குறிப்பாகத் தொழுநோய், காசநோய், பாலுறவு தொடர்பான நோய்கள், மனநோய் போன்றவற்றைக் குறிப்பிடப்படுகிறது. இந் நோய்களால் மனிதருக்கு வெறுப்புணர்ச்சியும், அருவருப்புத் தன்மை உண்டாக்குவதும் இதற்குக் காரணமாகும்.

இந்நிலை ஏற்படக் காரணமான மனிதனின் உணர்வுகளுக்கு முதலில் மருத்துவம் தேவை. அவை மருந்தாக மட்டுமே இருக்க வேண்டியதில்லை. அறிவுரைகளாகவும், நீதிபோதனைகளாகவும் இருக்க வேண்டும். உணர்வுகளுக்கு இடந்தராத பண்புகளும், அறிவை முறைபடுத்துகின்ற பக்தியும், கல்வியும், ஆன்மிக உணர்வுகளாலும் இதனை ஓரளவு கட்டுபடுத்த இயலும். ஆதலால் மனிதனுக்கு நோய் ஏற்பட பலகாரணங்கள் இருப்பினும் நல்ல மனநிலை, நற்சிந்தனை, நெறியான வாழ்க்கை முதலியவற்றால் நல்ல வாழ்வையும், நல்ல உடல் கட்டமைப்பையும், செயல்பாடுகளையும் பெறமுடியும் என்பது தெளிவாகிறது.

## மூப்பு

மூப்பு என்னும் சொல் ‘முதுமை’ என்ற பொருள்படுகிறது. மூப்பு என்பது மனிதனுக்கு மட்டுமிலாது உலகில் வாழ்கின்ற அத்தனை சீவராசிகளையும் வந்தடையக் கூடிய ஒன்றாகும். மனிதனைப் பொறுத்தமட்டில் இயற்கையோடு இயைந்த வாழ்வில்லாமல் நாகரிகம் என்ற பெயரில் வாழ்வை அமைத்துக்கொண்டு மனம் போனபோக்கில் வாழ்கின்றான். அதனால் அவனுக்கு முதுமை விரைவில் ஏய்துகிறது.

முதுமையைக் கண்டு மனிதன் வெறுப்பும், துயரமும் அடைகிறான். இறப்பினை எண்ணி ஆறாத்துயரமும் கொள்கிறான். முதுமையை யாரும் விரும்பி வரவேற்பதில்லை. முதுமை ஏற்படுவதற்கு உடலில் ஏற்படுகின்ற தட்ப வெப்ப மாற்றங்கள், நோய்கள், மன வாட்டங்கள், கவலைத்துன்பங்கள், பொருளாதாரச் சீரழிவு ஆகியவை முக்கியக் காரணமாயிருக்கிறது. மேலும் நல்ல உணவும், உடையும், உறையுளும் இல்லாமல் போகும் நிலையினால் உடல்நலமும், மனநலமும் குன்றி விடுகிறது. குடும்பச் சூழலும், பெண்டு, பிள்ளைகளும், சுற்றத்தாரும் காரணிகளாக அமைந்து விடுகின்றனர்.

முதுமைக்கு முக்கியக் காரணம் மனித உடலில் இருக்கின்ற உயிர்ச்செல்கள் அழிவது, உணவு நஞ்சாகி உடல் உறுப்புகள் சிதைவு ஏற்படுதல், உடலின் கழிவுகள் சரியான முறையில் வெளியேறாமல் இருத்தல், உள்ளுறுப்புகள், வெளியுறுப்புகள் முதலியவை வலிமைக் குன்றிப் போதல், தலைமுடி நரைத்தல் முதலியவற்றால் மூப்பு எனும் முதுமைத் தன்மை ஏற்பட மேற்சொன்னவை அடிப்படைக் காரணங்களாகிறது.

இந்த முதுமைக்குக் காரணங்களாக மருத்துவ இயல் நூல்களும், உளவியல் நூல்களும் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறது.

1. அதிகச் சத்துள்ள உணவு உண்பதன் மூலம் இதயத்திற்கு வலுவூட்டப்படுகிறது. சத்துள்ள உணவின் மூலம் ஆயுள் விருத்தி ஏற்படுகிறது. மிதமிஞ்சிய உணவுகள் முதுமைத் தோற்றத்தை ஏற்படுத்துவதுடன் இதயம், இரைப்பை ஆகியவற்றில் கெடுதலை உண்டாக்குகிறது.

2. மாமிச உணவு உடலில் அதிகமான கொழுப்புத் தன்மையை உருவாக்கி மாரடைப்பு, இதயத்தில் கோளாறு, எளிதில் செரியாத நிலைமை, அசீரணம், ஊளைச்சதைப் போன்றவற்றை உருவாக்குகின்றது. சீரான உடல் வளர்ச்சிக்கு மரக்கறி உணவான ‘சாத்வீக’ உணவு இன்றியமையாததாகும்.

3. புகைபிடித்தல், மது அருந்துதல் போன்றவற்றினால் ஏற்படுகின்ற நச்சுப் பொருட்கள் மூலம் நுரையீரல், இரத்தக் குழாய்கள் ஆகியவை பாதிப்பு அடைகின்றது. இதனால் உயிரணுக்களில் பிராணவாயு சேராமல் தடுத்து உடல் பாதிக்கப்பட்டு முதுமை நிலை அடைகிறது.

4. மனக்கவலை ஒரு மனிதனுக்கு விரைவிலேயே முதுமையை கொண்டுவந்து விடுகிறது. இடைவிடாத கவலையினால் உடம்பினுள் இரத்த ஓட்டம் பாதிக்கப்பட்டு, இதயம் சீரற்ற நிலையில் சென்று நாடித்துடிப்பை அதிகரிக்க, அல்லது குறைக்கச் செய்கிறது. இந்த மன நிலையில் உள்ள மனிதர்கள் மற்றவருடன் கருத்துப் பரிமாறிக் கொள்ளுதல், பழகுதல், சிரித்து மகிழ்தல் முதலிய செயல்கள் இன்மையால் உடல் மெலிந்து, வலிமைக்குன்றி, முகம்வெளுத்து முதுமைத் தோற்றம் அடைகின்றனர்.

5. கடும் உழைப்பு அல்லது உழைப்பிற்கேற்ற உணவு கிடைக்காமை போன்றவற்றாலும், அதிகப்படியான உணவு உண்டு சதாகாலமும் உறக்கத்தில் இருப்பதாலும் உடல் நலத்திற்குக் கேடுவிளைவிக்கும்.

இதனால் மூளைச் சோர்வை ஏற்படுத்தி உறக்கமின்மைக்கு ஆளாக நேரிடும் நன்கு உறக்கமில்லாத நிலையால் முகத்தில் சுருக்கத்தையும் வயோதிகத் தன்மையையும் ஏற்படுத்தும்.

**இறப்பு - ஓர் விளக்கம் (சாக்காடு)**

இறப்பு என்பது ஒரு மனிதனின் வாழ்வுப் பயணத்தை முடிவுக்கு கொண்டுவரும் நிகழ்வாகும். இதற்கு சாவு, எமன், மறலி, கூற்றுவன், காலன் என்னும் பெயர்களும் உண்டு. வயது முக்கியமன்று, எந்த வயதிலும்

மரணம் நிகழக்கூடிய ஒன்றாகும். மரணத்தைப் பற்றித் திருக்குறளில் நிலையாமை என்னும் அதிகாரத்தில் பேசப்பட்டாலும், உயிரானது இவ்வுடலை விட்டு எவ்வாறு பிரிகிறது என்பதை,

*“குடம்பை தனித்து ஒழியப் புள் பறந் தற்றே*
*உடம்போடு உயிரிடை நட்பு”*[26]

என்னும் குறட்பாவில் இந்த உயிர் உடலோடு நட்பு கொண்டிருந்ததை உயிரைப் பறவையாகவும், சிதைவுக்கு உட்பட்ட உடலைப் பறவையின் கூடாகவும் உவமையாகக் வள்ளுவர் கூறுகிறார். எனவே இந்த உடல் நிலைத்தால் உயிர் நிலைக்கும் இல்லையெனில் மரணம் ஏற்படும் என்பது தெளிவாகிறது.

**இறப்பு - பலநோக்குகள்**

இறப்பு என்பது ஒரு தனிமனித அனுபவம், பிறரால் உணர இயலாத ஒன்றாகும். “மரணத்தின்போது உடலில் திடீரென ஏற்படும் பௌதீக இரசாயன மாற்றங்கள் வலியையும், வேதனையையும் ஏற்படுத்தி மரணிக்கும் நிலையை உருவாக்குகிறது. மருத்துவ நோக்கில் கூறும்போது மரண வேதனை என்பது பல்வலியைக் காட்டிலும் குறைவானதென்றும் மரணத்தின் போது மத்திய நரம்பு மண்டலம் பிராணவாயு நீங்கி, கரியமில வாயுவால் சூழப்பட்டு வேதியல் மாற்றங்கள் ஏற்படுவதால் மயக்க உணர்வே மிகுத்திருந்து அம்மயக்க உணர்விலே உயிர் பிரிந்து மரணம் நிகழ்கிறது. உளவியல் நோக்கில் காணும்போது, மனிதன் தன் வாழ்நாளில் செய்த தவறுகட்கும், தீய செயல்கட்கும் என்னென்ன தண்டனைகள் இறைவனால் கிடைக்குமோ என்றெண்ணி இறப்பின்போது அஞ்சுகிறான் இதுவே மரண வேதனை”[27] என்று உளவியல் அறிஞர் கருதுவதாக க.நாராயணன் கூறுகிறார். ஆன்மிக நோக்கில் இறப்பைக் காணும்போது மரணத்தை தவிர்க்க இயலுமெனச் சித்தர்களும்,

ஞானிகளும் கூறியுள்ளனர். அவர்கள் இறப்பை வென்று வாழ முடியு மெனப் பல்வேறு ஆய்வுகளுக்கு இவ்வுடலை வேதியல் மாற்றம் செய்தனர். காய கற்பம், முப்பு ஆகியவற்றினால் உடலை நிலைபெறச் செய்து பல நூற்றாண்டுகள்வரை சித்தர்கள் வாழ்ந்து நிலைத்ததை அவர்களின் பாடல்கள் மூலம் உணர முடிகிறது.

*"சாவாது இருந்திடப் பால்கற சிரம்*
*தன்னில் இருந்திடும் பால்கற;*
*வேவாது இருந்திடப் பால்கற – வெறு*
*வெட்ட வெளிக்குள்ளே பால்கற"*[28]

என்னும் இடைக்காட்டுச் சித்தர் பாடல் சாகாமல் இருப்பதற்கு தலைக்குள்ளிருக்கும் அமுதத் தாரணை மூலம் கிடைக்கும் அமுதத்தை உண்டு உயிர் போகாமல் செய்வதைக் கூறுகின்றது. சாகாத்தலை, வேகாக்கால், போகாப்புனல் என்பன மூன்றும் சாகாக் கல்வியைத் தெரிவிக்கும் யோக அனுபவங்களாகும். இங்கு இடைக்காடர் உடலைச் சுடலையில் வைத்துச் சுடாத நிலைக்கு உயிரையும் உடலையும் விடாமல் பாதுகாக்க மதியமுதமாகிய 'அமுதப்பாலை' உண்ணுமாறு வேண்டுவதும் சிந்திக்கத் தக்கதாகும்.

மேலும் பாம்பாட்டிச்சித்தர், உடலை விட்டு உயிர் நீங்காதவாறு பார்த்துக்கொள்ள கீழ்வருமாறு குறிப்பிடுகிறார்.

*"ஆறுகலைக் குச்சுக்குள்ளே ஆடும் ஒருவன்*
*அயல் வீடு போகுமுன்னே அரண் கோலிக் கொள்ளு!*
*வேறுபட்டால் அவன் தனை மீட்டல் அரிதே;*
*மேவி முன் னேவிடாது கொண்டு ஆடுபாம்பே!"*[29]

என்று கூறுவதன் மூலம் உயிர் உடலைவிட்டு நீங்காமல் காக்க வேண்டும் என்னும் கருத்தில் பாடுவது தெளிவாகிறது.

இறப்பை எவ்வாறு தவிர்க்கலாம் என்பதற்கு ஞானிகளும் சித்தர்களும் பல்வேறு யூகங்களைக் கூறியிருக்கின்றனர். வள்ளலார் இவ் இறப்பைப் போக்கும் வழி முறை நான்கு வகை யெனக் கூறியுள்ளார். அவை,

1. ஆகாரம், 2. தூக்கம், 3. மைதுனம், 4. பயம் ஆகிய நான்கும் மரணத்திற்கு அடிப்படைக் காரணமாகக் குறிப்பிடுகிறார். அதன் விளக்கத்தைக் கீழவருமாறு விவரிக்கப்படுகிறது.

ஆகாரம் :– உண்ணும் உணவு பாதியாக இருக்கவேண்டும் அரைவயிறு உணவும், கால்வயிறு காற்றும், கால்வயிறு நீரும் சிறந்தது.

'சோற்றிலே விருப்பம் சூழ்ந்திடில் ஒருவர்தவம் ஆற்றில் கரைத்த புளியெனப் போகும்' என்பது விளக்கமாகும்.

தூக்கம் :– ஒரு நாளைக்கு மூன்று மணி நேரம் உறக்கம் கொள்வது நன்மைதரும் இரவு பன்னிரண்டு மணிமுதல் மூன்று மணிவரை அதாவது எட்டுமணிக்கு 1 மணி வீதம் மூன்று மணிநேரம் உறக்கம் வேண்டும்.

'*தூக்கமெனும் கடைப் பயலே சோம்பேறி*' என்றும்,

'*தூங்காத தூக்கத்தில் தூக்கிய பாதம்*
*துரியத்தில் ஊன்றித் துலங்கிய பாதம்*' என்றும்,

சோம்பேறித்தனம் குடி கொண்டுவிட்டால் இறைவனை அடைவது கடினம் என்று வள்ளலார் கூறுகின்றார்.

மைதுனம்:– உலகினுள்ள மனிதர்கள் அடிக்கடி காம இச்சை மேலீட்டால் உடல் உறவு கொள்வதைக் கட்டுப்படுத்த வேண்டும். அதாவது கணவன் மனைவி இருவரும் 16 நாட்களுக்கு

ஒருமுறை புணருதல் உத்தமாகக் கருதப்படுகிறது. இது ஞானிகளுக்குப் பொருந்தாது, அக்கிரம உடலுறவு இறப்பை ஏற்படுத்தும். 'விந்து விட்டான் நொந்து கெட்டான்' என்பது சித்த மருத்துவப் பழமொழியாகும்.

'மருவுப் பெண்ணாசையை மறக்கவே வேண்டும்' என்று வள்ளலார் கூறுகிறார்.

பயம் :– ''மனிதர்களுக்குப் பயம் என்பது பூச்சியமாக இருக்க வேண்டும். அதாவது எதைப்பற்றியும் பயம் கொள்ளக் கூடாது. அதற்காக ஆணவமாகவும் திரியலாகாது. பயம் மனிதனைக் கொன்று விடும் ஆயுதமாகும்.

*"பயமெனுமோர் கொடும்பாவிப் பயலே நீ இதுகேள்*

*--------------------------------------------*

*அயலிடை நேர்ந் தோடுக நீ யென்னையறி யாயோ*
*அம்பலத்தென் னப்பனருள் நம்புபிள்ளை நானே!"*

என்று இறைவன் என்னருகில் இருப்பதால் இறப்பு பயம் ஏதும் இல்லை என்கிறார் வள்ளலார்''[30] இதனையின்றி யோக, தியான முறைகளைக் கையாண்டு குருவின் மூலமாக ஆன்மீக அறிவுரைகளைத் தெளிந்து, மூலிகைக் கற்பங்களை உண்டு, பிராண வாயுவைப் பேணி, குருவைப் போற்றி வந்தால் மரணப்பிணி என்னும் சாவை தள்ளிப் போடலாம் என்பது வள்ளலாரின் கருத்தாகும். திருமூலரும் 'மறுப்பது சாவை மருந்தெனலாமே' என்னும் பாடலடியில் சாவை மறுப்பதே மருந்தென தெளிவுறுத்துவதை முந்தியத் தலைப்பில் அறியப்பட்டது.

அழியக் கூடிய இந்த உடலானது அழியாத பண்பினைத் தனது கருவில் சுமந்து நிற்கிறது. உடல் என்பது துன்பப் பெட்டகம் என்று

கருதப்பட வேண்டியதில்லை. அது மனிதனின் இறுதி விடுதலைக்கான கருவி ஆகும். மேலும் சாவாதிருக்கச் சில வழிகளாக இரசவாதமுறை, குண்டலினி யோகமுறை, உல்டா சாதனை முறை என்னும் தலைக்கீழ்ப் பயிற்சி முறை ஆகியவற்றை மேற்கொள்வதனாலும் இறப்பைத் தள்ளிப் போடலாம். மேற்கூறியவாறு சித்தர்களும் ஞானிகளும் அழியக்கூடிய இவ்வுடலை அழியாமல் பாதுகாத்து, உடலை ஓம்புதல்மூலம் உயிரை நிலைக்கச் செய்தனர், பஞ்ச பூதத் தத்துவத்தின் கோட்பாட்டை உணர்ந்து அதன் செய்கைகளுக்கு ஏற்றவாறு உடலைக் காயக்கற்பம் செய்து சித்தர்கள் சாவை வென்றனர் என்பதை அறியமுடிகிறது.

## சித்தர்களின் சாகாக்கலை

சாகாக்கலை என்பது சித்தர்களின் வாழ்வியல் நெறிகளில் தலையானதாகும். மரணத்திலிருந்து தங்களை விடுவித்துக் கொள்ளவும், நீண்ட நாள் நிலைத்து வாழும் முறைகளையும் உணர்த்துவதாகும். இந்தச் சாகாக்கலையைக் கற்பிக்கும் கல்வி ஆன்ம கல்வியாகும். சித்தர்கள் மனித உடலுடன் கூடிய ஆன்மாவை இழக்காமல் அது எப்போதும் இறைவனிடம் இணைந்திருந்து பணிபுரியும்படிச் செய்யும் உபாயத்தைத் தெரிந்து கொள்ளும் கலை சித்தர்களின் ‘சாகாக்கலை’ எனப்படும்.

சித்தர்கள் “இறைவனின் சின்மய வடிவத்தைத் தனதனுபவத்தில் கண்டுற்று அருள் ஞானம் பெற்றனர். அந்தப் பேரின்ப அருள் அனுபவத்தைக் கண்டு சாகாக் கலையில் வெற்றியும் கண்டனர். ‘சாகாக்கலை’ என்னும் காயகல்ப முறையானது என்றும் இளமையுடன் இருப்பதற்கான வழிமுறையைக் கூறுவது. உடம்பிலுள்ள இரத்த ஓட்டம் தடைபடாமல், தசைகள் சுருக்கமடையாமல், நரம்புகள் தளர்ச்சியடையாமல் எலும்புகளின் உறுதித்தன்மை மாறாமல் வைத்திருப்பதாகும்”[31] சாகாக் கலையில் வெற்றி பெற்ற சித்தர்களில் காகபுசுண்டர், அகத்தியர், திருமூலர், போகர், கொங்கணவர், காலாங்கி நாதர் போன்றவர்களைக் குறிப்பிடலாம்.

## முப்பு

சித்தர்களின் சாகாக்கலைக்குப் பெரிதும் துணையாக நின்ற பொருள் ‘முப்பு’ என்னும் கற்ப மருந்தாகும். இதற்கு உடலை அழிவிலிருந்து காப்பாற்றி அழிந்த அணுக்களைப் புதுப்பிக்கும் ஆற்றல் உடையது.

## முப்புவின் வேறு பெயர்கள்

முப்பு என்னும் பொருள் சித்தர்களின் வழக்கு முறையில் பல்வேறாக இருப்பினும் பொதுவாகச் சிவமுப்பு என்றும் சக்தி முப்பு என்றும் அழைக்கப்படுகிறது. அண்டக்கல், சுத்தகங்கை, அமுரி போன்ற பெயர்களிலும் பொதுவாக அழைக்கப்படுகிறது. இந்தாலும் இதைக் கீழ்வரும் பெயர்களில் சித்தர்கள் பலர் வழங்கியுள்ளனர். “சிங்கம், வெள்ளைச்சாரை, சிறு நாகம், பட்சிராசன், சத்துருகாலன், ஆதியுப்பு, சத்தியுப்பு, வழலையுப்பு, நாதவுப்பு என்றும் வாலை, ஓங்காரம், அமிர்தம், செந்தேன், ஏகமூலி, வழலை, அண்டபிண்டம், ஆதிஅந்தம், மூலப்புளி, கல்லுப்பு, குருவண்டு, கொடிமூலம், கன்னிப்பெண், வாலைப்பெண், ஞானப் பெண் போன்ற அடைமொழிகளாலும் முப்பு என்னும் சொல் அழைக்கப்படுகிறது.”[32]

## முப்புவின் வகைகள்

முப்புவை வைத்திய முப்பு, வாதமுப்பு, யோகமுப்பு, ஞானமுப்பு என்று நான்கு வகைப்படுத்துவர். ஒன்றைவிட ஒன்று மேலானது என்ற நிலையில் இவ்வகைப்பாடு அமைந்துள்ளது. அதாவது வைத்திய முப்பை விட வாத முப்பு கூடுதல் பலன்தரும். வைத்திய முப்பு மருந்துகளின் வீரியத் தன்மைக்கு உதவுகிறது. வாத முப்பு தாழ்ந்த உலோகங்களை உயர்ந்த உலோகமாக மாற்றும் இரசவாதக் கலையில் பயன்படுகிறது. வாத முப்புவை விட யோக முப்பு சிறந்தது இது யோகிகளை இயற்கைச் சீற்றங்களிலிருந்து பாதுகாக்கிறது. இதைவிடவும் ஞான முப்பு கூடுதல்

பலனை அளிக்கவல்லது. இது இறந்த உயிர்களை உயிர்ப்பிக்கச் செய்யவும், உடலை பஞ்ச பூதங்களோடு பிரித்து மீண்டும் ஒன்று சேர்க்கவும் பயன்படுகிறது. இதுவே மனிதனின் பிறவாத நிலைக்கு இட்டுச் செல்லும் முப்பு மருந்து என்னும் 'கல்பமுப்பு' ஆகும். முப்பு என்பது மூன்று உப்புக்களின் கூட்டாகும். அவை கல்லுப்பு, அண்டக்கல், பூ நீறு என்பன. இதுவே குருமருந்தாகும். இரவியுப்பு, மதியுப்பு, கல்லுப்பு என்ற மூன்றின் கூட்டும் முப்பாகும். இதனை.

*'எண்ணவே வானத் திடியினில் ஒன்று*
*பொன்னெனப் பூத்த பூமியில் ஒன்று*
*கண்ணிய மான கடலினில் ஒன்று*
*முன்னவர் சொன்ன முப்புஇம் முன்றே'*

என்பதை அறியமுடிகிறது. மேற்கூறிய முன்றும் விண், மண், கடல் ஆகிய மூவிடங்களில் உருவாவதாகும். இதனை வாதஉப்பு, பித்தஉப்பு, கபஉப்பு என்றும் சித்தர்கள் பிரித்தாள்வார்கள் என்று தட்சிணா மூர்த்தி குருமுகம் எனும் நூல் கூறுகிறது. இம்முப்பு பற்றி மேனாட்டார்கள் ஆய்ந்து இதற்கு 'ஞானிக்கல்' (PHILOSOPHER'S STONES) என்றும் கற்ப முப்பு (ELIXIR OF LIFE) என்றும் பெயர்களையும் சூட்டியுள்ளனர்.''[33]

### முப்புவின் ஆற்றல்

முறையாகச் செய்யப்பட்ட முப்பு கற்பமருந்தை ஓர் ஊசி முனையில் தொட்டு வாழைப்பழத்தில் குத்தி வைத்துச் சிறிது நேரம் கழித்துப் பார்த்தால் பழம் காயாகி விடும். பழத்திற்குக் காயினது தன்மை ஏற்படுவது போல் வயதான முதியவரும் இம்முப்புக் கற்பத்தை உண்டால் இளமைத் தோற்றம் பெற்றுவிடுவர். தொடர்ந்து உண்டுவரின் மரணமில்லாமல் வாழமுடியும் என்று போகர் கற்பம் 300 எனும் நூல் கூறுகிறது. மேலும் 'இறந்து போனவரின் மூக்கில் முப்பு மருந்தைப் பாலில்

கலக்கி விட்டால் உடலானது உயிர் பெறும். அந்த உயிர்பெற்றவரிடம் எதை வேண்டுமானாலும் கேட்டுக் கொள்ளலாம்' என்பதை அகத்தியர் இலக்க சௌமியம் கூறுவதாக மகாலட்சுமி கூறுகிறார்.''[34]

## காயகற்பம் அல்லது தேகவேதியல்

திருமூலர், திருவள்ளுவர், ஔவையார், சிவவாக்கியர், போகர், அகத்தியர், கொங்கணர், வள்ளலார் போன்றவர்கள் காய கற்பத்தின் மூலம் வாழ்நாளை நீடிக்கச் செய்யும் வழிகளை உணர்த்திச் சென்றுள்ளனர். பலருக்குக் 'காயகற்பம்' என்பது உண்மையா? என்ற குழப்பங்களும், தவிப்புகளும் ஏற்படுவது உண்மை, எனினும் சித்தர்கள் அதைத் தம் அனுபவத்தின் மூலம் கண்டறிந்ததைப் பாடல்களில் விளக்கியுள்ளனர்.

## அறிவியல் நோக்கு

உலக முழுவதிலுமுள்ள அனைத்து மனிதர்கள் உடம்பில் சராசரியாக உடல்வெப்பம் 98.3$^0$F என்று தெர்மா மீட்டர் மூலம் நவீன அறிவியல் கண்டுபிடித்துள்ளது. இந்த உடல் சூடு எந்த இடத்திலிருந்து கொண்டு உடம்பின் சீரான இரத்த ஓட்டத்தை இயக்குவிக்கிறது என்பதை விளக்கம் செய்ய இயலவில்லை. 'மனித உடம்புக்குள் பாஸ்பரஸ் என்னும் ஒளிரும் தன்மை கொண்ட பொருள் இருக்கிறது, 'பாஸ்பரஸ்' இல்லாமல் எண்ணங்கள் தோன்றாது. தசைகள் சக்தியைச் சேகரிக்க முடியாது. எல்லா உயிர்களுக்கும் பாஸ்பரஸ் இன்றியமையாதது. பாஸ்பரஸ் எவ்வாறு ஒளிர்கிறது எனில் பாஸ்பரஸ்மேல் பாஸ்பரஸ் ஆவி சூழ்ந்துள்ளது. இந்த ஆவியே சக்தியை வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறது. சக்தியை வெளிப்படுத்தும்போது ஆக்ஸீகரணம் அடைகிறது. அப்போது பாஸ்பரஸ் அணுக்கள் ஒளிர்கிறது. ஆதலால் இந்தத் தன்மை உடம்பில் இருந்து குறையாதபடி பார்த்துக் கொண்டனர் ஞானிகள். இந்த ஒளிநிலையை ஔவையார்,

*‘சந்திரனுள்ளே தழலுற நோக்கினால்*

*சுந்தரமாகும் உடம்பு எனினும்*

*உந்தியினுள்ளே பொங்கச் சுடர் பாய்ச்சில்*

*அந்தி அழலுருவாம்’*

என்னும் பாடலில் உடம்பின் ஒளிநிலைப் பற்றிக் கூறியுள்ளார்.

சித்தமருத்துவத்திலும், நவீன மருத்துவத்திலும், அணுவிஞ்ஞான முறைகளிலும் கந்தகம், இரசம், பாஸ்பரம் ஆகிய மூன்றையும் மிக முக்கியமாகக் கையாண்டுள்ளனர். சித்தர்கள் இரசவாதத்திற்கும் உடல் மாற்றத்திற்கும் கந்தகத்தைப் பெரிதும் தேர்ந்தெடுத்தனர். மேலும் ‘சுண்ணம்’ என்று கூறுவது பாஸ்பரஸ் என்னும் பொருளையே ஆகும். இப்பொருள் மஞ்சளோடு சேர்ந்து சிவப்பதையே ஆக்ஸீகரணம் எனப்படுகிறது. கடுங்காரச் சுண்ணம் என்பது கால்சியம் என்னும் சுண்ணாம்புச் சத்தாகும். பாஸ்பரஸைப் பஞ்ச பூதங்களான நெருப்பு, காற்று, ஆகாயம் ஆகிய மூன்றிலிருந்துதான் பெறமுடியும். இம் மூன்றும் உடலை அழியாமல் காக்கும் காயகற்பத்திற்கு முதன்மையானதாகும். அருவுருவமான நெருப்பு, காற்று, ஆகாயம் ஆகிய மூன்றும், உடலையும், உலகத்தையும் ஆளுகின்றன.

இவ்வுலகில் ஹைட்ரஜன், நைட்ரஜன், ஆக்ஸிஜன் ஆகிய அணுக்கள் இயங்கிக் கொண்டிருப்பதை அறிய முடிவதில்லை. ஆகாய வெளி முழுவதும் எலக்ட்ரான், புரோட்டான், நியூட்ரான் ஆகியவை சுழன்று கொண்டிருகின்றன. இதற்கெல்லாம் இடங்கொடுப்பது ஆகாயமாகும் இதனை இயக்குவது காற்றாகும்,வேதியல் புரியச் செய்வது நெருப்பாகும்.

அணுக்களின் விஞ்ஞானத்தைச் சித்தர்கள் நன்கு புரிந்து கொண்டனர். எந்த மூலிகையில் என்னென்ன தாதுக்கள் அடங்கியுள்ளன என்றும், எந்த உலோகங்களில் எப்பொருள் நிறைந்துள்ளது என்றும் தன்

ஞானத்தின் மூலம் உணர்ந்துள்ளனர். அப்பொருளின் தன்மை அறிந்து கொண்டு உடலுக்கு ஏற்றவாறு கற்பமாக்கி உண்டனர். அதன் மூலம் உடலைக்கற்ப தேகமாக்கிக் கொண்டனர். தேகவேதியல் மருந்தை உண்டவுடன் உடலின் ஒவ்வொரு அணுவிலும் பரவுகின்றது. அம் மருந்து உடலில் இறந்த அணுக்களை உயிர்ப்பெறச் செய்கிறது. அவ்வாறு பரவி மாற்றத்தை ஏற்படுத்துவதன் மூலம் உடலுக்கு நீண்ட ஆயுளை அளிக்கிறது. வியாதிகளால் தாக்க முடியாதவாறு அழியாத உடலைப் பெறுவது தேக வேதியலின் செயலாகும். இதனைச் செய்ய வல்லது சித்த மருத்துவத்தின் தலையாய மருந்துகளான இரசமும், கந்தகமும் ஆகும்.

காயகற்பம் சாப்பிட விரும்புபவர்கள் உடலையும், உள்ளத்தையும் தூய்மையாக்கிக் கொள்ள வேண்டும். தன்னை இயம, நியமத்திற்கு உட்படுத்துதல், உணவில் புளி, காரம், உப்பு ஆகியவற்றையும், மது, மாமிசம், புகை, பெண்போகம் ஆகியவற்றையும் நீக்குதல் வேண்டும். தூயவாழ்வு வாழ்தல் வேண்டும். வஞ்சம், சூது, பொறாமை, களவு ஆகியவற்றை நீக்குதல் வேண்டும். துறவு வாழ்க்கை மேற்கொள்பவருக்கு இந்தக் காயகற்பம் பலிதமாகும் இதற்குக் குரு மிகமிக அவசியம்.

**சாகாக்கால் - வேகாத்தலை - போகாப்புனல்**

சாகாக்கால் (வாசி) என்பது உடலில் நித்தியமாய் ஓடிக் கொண்டிருக்கும் வாசியாகும். இது சீவனை நிலை நிறுத்தும். இதனைச் சாகாத்தலை என்றும் 'ஞானம்' என்றும் வேறு பெயர்களில் அழைக்கப் படுகின்றன. சாகாக்கால் என்பதை நித்தியமான கடவுள் அறிவு என்றும் கூறுவர். இந்த சாகாக்காலின் அருள் ஞானம் பெற்றதை நித்திய ஜீவ நிலை அடைதல் என்பர். இந்நித்திய ஜீவநிலையே வேகாக்கால் என்றழைக்கப்படுகிறது. மேற்கூறிய நிலையடைந்தவர்களின் உடலில் நிலையான உயிர் ஆற்றல் செயல்படத் தொடங்கும். அதனால் மூளையில்

இயங்கிக் கொண்டிருக்கிறது. இந்தக் கலப்பு விகிதத்தில் பிருதிவியாகிய மண் பாகம் குறைந்தால் உடலில் மடிப்புகள் (சுருக்கம்) ஏற்படுகின்றன. உடலில் அப்புவாகிய நீர் பாகம் குறைந்தால் சீக்கிரமாய் நரை உண்டாகும். தேயுவாகிய அக்கினி பாகம் குறைந்தால் பசியும், உடல்சூடும் குறையும். வாயுவாகிய காற்று பாகம் குறைந்தால் உடலில் நடுக்கம் ஏற்படும். ஆகாயபாகம் குறைந்தால் நினைப்பும், மறப்பும் இல்லாமல் போகும்.''[36] மேற்கூறியவை உடலின் பஞ்சீகரண விதியாகும்.

உடலில் தோன்றும் பஞ்சபூத ஏற்றத் தாழ்வுகளைச் சரிசெய்து கொள்ளும் முயற்சியே காயகற்பம் உண்ணும் முறையாகும். பஞ்சபூத உலோகம் பஞ்சபூத பாடாணம், பஞ்சபூத உப்பு முதலியவற்றை செய்து உண்டு வாழ்வை வென்றனர் சித்தர்கள். அவர்களைச் சார்ந்த மக்களுக்கும் பற்பம், செந்தூரம், சுண்ணம் போன்ற மருந்துகளை அளித்து கடுமையான நோய்களையும் நீக்கி வந்தனர். உடம்பைக் கற்பமாக்க பஞ்சீகரண மூலிகைகளையும் கண்டு பிடித்தனர். அதன் மூலம் பயனடைந்தனர். ஔவையும் விநாயகர் அகவல் பாடலில், கற்ப மருந்துகளை உண்டால் வரும் நன்மைகளைக் கீழ்வருமாறு குறிப்பிடுகிறார்.

*"வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம் மாமலராள்*
*நோக்குண்டாம் மேனிநுடங்காது பூக்கொண்டு*
*துப்பார் திருமேனி தும்பிக்கையான் பாதம்*
*தப்பாமல் சார்வார் தமக்கே!"*[37]

என்பதன் மூலம் வினைகளை நீக்கவும், பிறவியை நிறுத்தவும் கற்பம் பயன்படுவதாகக் குறிப்பிட்டுள்ளதை அறியமுடிகிறது. துளசி, குப்பைமேனி, தும்பை, கையான் என்கின்ற கரிசாலை, பாதம் என்னும் சிறு செருப்படை, பூ என்னும் செந்தாமரைப்பூ, துப்பு என்னும் பசு நெய் ஆகிய அனைத்தையும் சேர்த்து உண்ணுதல் ஒரு கற்ப மருந்தாக ஔவையார் பாடுவதை

அறியமுடிகிறது. பாம்பாட்டிச் சித்தர் கற்ப மருந்தின் பெருமையைக் கீழ்வருமாறுக் கூறுகிறார்.

*“காலமென்னும் கொடிதான கடும்பகையை*
*கற்பமென்னும் வாளினாற் கடிந்து விட்டோம்*
*சாலப்பிறப் பிறப்பினை நாம்கடந்தோம்*
*தற்பரம் கண்டோ மென்றாடாய் பாம்பே!”* [38]

என்று கூறுவதன் மூலம் சித்தர்கள் காலத்தை வென்று வாழ்தலுக்குக் கற்பமருந்து பயன்பட்டதையும் பிறப்பு, இறப்பற்ற நிலைகளைக் கடந்து தனக்குள்ளே பரம்பொருளைக் கண்டு பேரானந்தம் அடைந்ததையும் அறியமுடிகிறது. வாழ்நாளை நீட்டிக்கும் ‘கற்பம்’ என்னும் மாமருந்தினை இளமையில் தவமிருந்து உண்ணல் வேண்டும். வயதாகி உடல் நெகிழ்ச்சித் தன்மையடையுங் காலத்தில் உண்டும் பயனில்லை என்னும் கருத்தில் கீழ்வரும் பாடல் குறிப்பிடுகிறது.

*‘காலங்கழிந்து காயம் நெகிழ்ந்து காற்றுமிழந்து*
*தோலும் துருத்தியும் நாடி நரம்பும் துவண்டபின்பு*
*சாலவும் கற்பம் சாராது சார்ந்தும் சத்திலை காண்*
*வாலிப மெய்திடுங் காலத்தில் கற்பம் வசப்படுமே’*

என்பதன் மூலம் வாலிபப் பருவந்தொட்டுக் கற்பமுண்ண வேண்டும் என்றும், வயது முதிர்ந்து கற்பமுண்ணுவதில் பலனில்லை எனவும் கூறுவது தெளிவாகிறது.

## கற்பம் உண்ணுவதின் பயன்கள்

கற்ப மருந்தை உண்ணுவதன் மூலம் உடலானது அழியாமல் காக்கவும், இறைவனைக் காணவும் எனக் கீழ்க்காணும் பாடலில்,

*‘கற்பத்தை யுண்டால் காயமழியாது*
*கற்பத்தினாலே காணலாம் கைலையை*
*கற்பத்தினாலே காணலாம் சோதியை*
*கற்பத்தினாலே காலையுங் கட்டிடே !’*

என்று கற்பம் உண்ணுதலால் உடம்பின்னுள்ளே சோதியாகிய இறைக் காட்சிகளைக் காணமுடியும் எனவும், உயிர்க் காற்று வெளியில் செல்லாமல் இயங்கி உயிரை நிலைக்கச் செய்யும் என்று கூறுவதன்மூலம் தெளிவாகிறது. மேலும் இம்மருந்து உண்ணுவதன் மூலம் உடற்பிணிகள், உயிர்ப்பிணிகள் அனைத்தும் நீங்கும். இருவினைகளும் சேராமல் சித்தர்கள் வாழ்ந்ததை இதன்மூலம் அறியமுடிகிறது.

## பஞ்சபூதங்களும் - தன்மைகளும்

1. பிருதிவி – (மண்) – எலும்பு, தோல், தசை, மயிர், நாடி முதலிய உடல் உறுப்புகள்
2. அப்பு – (நீர்) – குருதி, கொழுப்பு, சுக்கிலம், சிறுநீர், மூளை முதலிய உடல் உறுப்புகள்
3. தேயு – (நெருப்பு) – இறுமாப்பு, சோம்பல், மைதுனம், அச்சம், துக்கம் முதலிய செயல்பாடுகளை உடையது.
4. வாயு – (காற்று) – ஓடல், இருத்தல், நடத்தல், கிடத்தல், நிற்றல் முதலிய உடல் செய்கைகளைக் கொண்டது.
5. வெளி – (ஆகாயம்)– ஆசை, பகை, மோகம், மதம், வஞ்சனை முதலிய தன்மைகளை உடையது.

மேற்கூறப்பட்ட பஞ்சபூதங்களின் தனித்த செயல்கள் உடலில் ஒன்றோடு ஒன்று இணைந்து செயல்படும்.

## மண் (பிருதிவி)

மண், பொன் நிறத்தைக் கொண்டதாகும். இம்மண்ணிற்கு வேனல் கட்டிகளையும், இரணங்களையும், வாதப் பொருமலையும் நீக்கும்

குணம் உடையது. மேலும் இம் மண் நான்கு கோணமுடைய சக்கரத்தைப் போன்று பிரம்மனுக்கு இருப்பிடமாய் இருக்கிறது என்பதையும் 'ந' என்ற மூல எழுத்தை பெற்றுள்ளது என்பதையும் சைவ சித்தாந்தம் கூறுகிறது.

மண்ணானது மனித உடலில் வாதம் என்கிற நாடியின் ஆதாரமாக விளங்குகிறது.

"மண்ணில் மண் – எலும்பு
மண்ணில் நீர் – மாமிசம்
மண்ணில் தீ – தோல்
மண்ணில் காற்று – நரம்பு
மண்ணில் ஆகாயம் – மயிர்"[39]

போன்ற புறக் காரணங்கள் பெற்றுள்ளன. இதற்கு ஆதாரமாக இறைவன் உறைகின்ற தலமாகக் காஞ்சிபுரம் விளங்குகிறது.

**நீர் (அப்பு)**

இதன் நிறம் படிக நிறம் நீரினால் சுக்கில விருத்தி உண்டாகும். பற்களுக்கு உறுதியுண்டாகும். கண்காசம், பித்தமேகம், உடல்சூடு, பித்தகுன்மம், வெட்டு காயங்களிலிருந்து வரும் குருதி, சொறி, சிரங்கு ஆகியன குணமாகும். இது உடலில் மூன்றாம் பிறை வடிவமாகச் சக்கரத்தைப் பெற்றுள்ளது. இது மகாவிட்ணுவின் இருப்பிடமாகும் இது 'ம' எனும் மூல எழுத்தையுடையது.

இது குளிர்ச்சி, மென்மை, தோய்ந்து போதல், தளர்ந்து பெருகுதல், நனைந்து கசிதல் போன்ற கூறுபாட்டை உடையது. மனத்தின் கண் ஆனந்தம் உண்டாக்கும். சிதறிக் கிடப்பதை ஒன்று கூட்டும் என்பதுவும் இதன் செயலாகும். இது மனித உடலில் சிலேத்துமம் என்னும் நாடியின் கூறாய் விளங்குகிறது.

நீரில் நீர் – சிறு நீர்

நீரில் மண் – உமிழ் நீர்

நீரில் தீ – வியர்வை

நீரில் வாயு – குருதி (இரத்தம்)

நீரில் ஆகாயம் – சுக்கிலம் (விந்து)

போன்ற கூறுபாட்டை உடையதாகும். இதற்கு இறைவன் உறையும் தலமாகத் திருவானைக் காவல் (திருச்சி) விளங்குகிறது.

**நெருப்பு (தேயு)**

இதன் நிறம் செந்நிறமாகும். நெருப்பினால் கண்டைக்கால் என்கிற சிறு தொடையில் ஏற்படுகின்ற நோயும், உடற்கடுப்பும், காந்தலும், கண்ணெரிச்சலும், நீர்ச்சுருக்குப் போன்ற நோய்களையும் ஏற்படுத்தும் இதன் தொழில் உலர்தல் தன்மையனவாகும்.

இது உடலில் முக்கோணம் என்னும் உடல் சக்கரத்தைப் பெறுகின்றது. மேலும் உருத்திரன் இருப்பிடம் 'சி' என்ற மூல எழுத்தையுடையது உப்பு சுவையுள்ளது. வெம்மை, வறட்சியுண்டாக்கல் இதன் செய்கைகளாகும்.

"நெருப்பில் நெருப்பு – தூக்கம்

நெருப்பில் மண் – பசி

நெருப்பில் நீர் – தாகம்

நெருப்பில் காற்று – ஆலசியம்(தாமதம், சோம்பேறித்தனம்)

நெருப்பில் ஆகாயம் – சேர்க்கை"[50] (இணை விழைவு)

ஆகிய குணப்பண்புகளை ஏற்படுத்தும். இது நாடித்தத்துவத்தில் பித்தக் கூறாகும். இதனில் காணும் இறைவனின் தலம் திருவண்ணாமலை (அண்ணாமலை) ஆகும்.

### 4. காற்று (வாயு - நிறம்-நீலம்)

காற்றின் தன்மை அதன் அளவில் குறையும்போது உடலில் நோய் உண்டாகும். அதாவது குறிகளில் (பிறப்புறுப்புகளில்) கடுப்பு காணும். மேக விரணம், உடற்தளர்ச்சி, வீக்கம், வலி வேதனைகள் மிகும். உடல் பருத்துச் சோர்வையும், மந்த நிலையையும் உருவாக்கும். இது மகேசுவரனுக்கு இருப்பிடமாய் இருந்து 'வ' என்ற மூல எழுத்தை உடையதாகும். இதன் சுவை புளிப்புச் சுவையாகும். இது மனவாட்டம், உடல் வாட்டத்தை ஏற்படுத்தக் கூடியது.

| | | |
|---|---|---|
| வாயுவில் வாயு | – | ஓடல் |
| வாயுவில் மண் | – | படுத்தல் |
| வாயுவில் நீர் | – | நடத்தல் |
| வாயுவில் காற்று | – | உட்காருதல் |
| வாயுவில் ஆகாயம் | – | தாண்டுதல் |

போன்ற கூறுகளைப் பெற்றுள்ளன. இதன் இறைவன் உறையும் தலமாக திருக்காளத்தி கூறப்படுகிறது.

### 5. ஆகாயம் (வெட்டவெளி - நிறம்-புகை)

ஆகாயத்தின் தன்மை எல்லா உயிரினங்களுக்கும் அடிப்படையான உணவுகளும், பலவகைப்பட்ட மருந்துகளும், மழையும், அண்டங்களையும், கோள்களையும் பெற்றுள்ளது. இது மேற்கூறப்பட்ட நான்கு பூதங்களையும் உள்ளடக்கியது.

இது வட்டமான உடற்சக்கரத்தைப் பெற்று சதாசிவனைத் தன்னிடத்தில் பெற்றுள்ளது.

நுட்பம், தெளிவு, துணிவுத் தன்மையை உண்டாக்குதல், தோலை உடைய பாகங்களில் அடைவது என்பது இதன் செயலாகும். சுவையில் இனிப்புத்தன்மை பெற்றுள்ளது.

| | | |
|---|---|---|
| ஆகாயத்தில் ஆகாயம் | – | மோகம் |
| ஆகாயத்தில் பூமி | – | இராகம் |
| ஆகாயத்தில் நீர் | – | வெறுப்பு |
| ஆகாயத்தில் காற்று | – | நாணம் |
| ஆகாயத்தில் நெருப்பு | – | பயம் |

ஆகிய மனத்தின் வெளிப்பாடுகளை உள்ளடக்கியது. இதன் இருப்பிடம் தலைக்கு மேலுள்ள பாகம். இது உடலில் சக்கரமாக அமைந்த நிலை 'ய' ஆகும். இதன் தலம் சிதம்பரம் ஆகும். ஆக இந்த முறை வரிசையில் பஞ்ச பூதங்களும், அதற்கு உரிய அட்சரங்களாகிய 'நமசிவய' எனும் பஞ்சாட்சரங்களும் உடலாகிய பிண்டத்தில் உள்ளது; இதன்மூலம் பிரணவமான ஓங்காரத்தை எட்டித் தன்னைத்தானே உணரும் நிலையெய்தலாம் என்பது ஞானிகளின் அனுபவமாகும்.

*'அண்டத்திலுள்ளதே பிண்டத்தில்'*

எனும் வார்த்தைக்கிணங்க,

*'அண்டமும் பிண்டமும் ஒன்றே*
*அறிந்துதான் பார்க்கும் போதே!'*

என்று சட்டை முனி கூறுகின்றார் இந்த ஐம்பெரும் பூதத் தத்துவமாகிய மண்ணிலேதான் தாவரச் சங்கம உருவங்களும் பிரபஞ்சம் அனைத்தும் உருவாகின்றன.

## தசவித நாடிகளும் - செயல்படும் இடங்களும் - நாடிகள்

| | | | |
|---|---|---|---|
| 1. இடகலை | – | இடதுபக்க நரம்பில் மூச்சு | வாதத்தில் |
| 2. பிங்கலை | – | வலதுபக்க நரம்பில் மூச்சு | |
| 3. சுழுமுனை | – | நடுவில் உள்ள நரம்பில் மூச்சு | |

| | | |
|---|---|---|
| 4. சிங்குவை | – உள்நாக்கு நரம்பில் மூச்சு | பித்தத்தில் |
| 5. புருடன் | – வலக்கண் நரம்பில் மூச்சு | |
| 6. காந்தாரி | – இடக்கண் நரம்பில் மூச்சு | |
| 7. அத்தி | – வரிச்செவி நரம்பில் முச்சு | |
| 8. அலம்புடை | – இடச்செவி நரம்பில் மூச்சு | கபம் எனும் சிலேத்துமத்தில் |
| 9. சங்கினி | – கருவாய் நரம்பில் மூச்சு | |
| 10. குரு | – மலவாய் நரம்பில் மூச்சு"[40] | |

## ஞானிகளின் ஒடுக்க நிலை (தவநிலை)

ஞானிகளின் உணவு பிராணவாயு ஆகும். அவர்கள் பசித்தன்மை நீங்கியவர்கள். நடு நாடியாகிய சுழுமுனையில் சந்திரகலையாகிய இடகலையைச் (இடது மூக்குத்துவாரம்) செலுத்துவர் அதன் மூலம் பஞ்சபூதங் களாகிய மண், நீர், நெருப்பு, ஆகாயம், காற்று ஆகியவை ஒடுங்கி விடும். சலனமற்ற நிலை உருவாகும். இந்நிலை சும்மாயிருக்கும் சுகம் ஆகும்.

சூரிய கலையாகிய பிங்கலை (வலது மூக்குத்துவாரம்)யில் நடு நாடியாகிய சுழுமுனையில் காற்றைச் செலுத்தவர். அதன் மூலம் ஐம்புலன்களாகிய சுவை, ஒலி, ஓசை, ஊறு, நாற்றம், ஆகியன ஒடுங்கி அறிவுப் பெருகும் (ஞானம்). இதில் இடகலை, பிங்கலை (சூரியகலை, சந்திரகலை) ஆகிய இரு நாடிகளும் சுழுமுனையாகிப் புருவ மையத்தில் கூடும்போது அறிவும், தசவாயுக்களும் ஒடுங்கிவிடும். மூன்றும் நிற்கும் இடத்தில் வாசியை சேர்ப்பின் சதா சிவமாகச் சஞ்சலமற்று இருப்பார்கள். அவர்களுக்குப் புறஉலகத்தைப் பற்றிய சஞ்சலங்களில்லை எனலாம். அதோடு இயற்கையில் நிகழும் வெயில், மழை, காற்று, குளிர், நெருப்பு, நீர் முதலியவை தீண்டாது. மேலும் அவர்களுக்கு உலகத்தில் பிறந்த அத்தனை உயிர்களையும், பிரம்மமாகக் காணும்போது பரப்பிரம்ம மாகவே மாறிவிடுகின்றனர்.

## உடலை ஒன்பது துண்டாகப் பிரித்துச் சேர்க்கும் நவகண்டயோகம்

சித்தர்களும், ஞானிகளும் உடலைக் கைவேறு, கால்வேறாகப் பிரிக்கும் சொரூபச்சித்து செய்து, சிலநேரங்களுக்குப் பிறகு ஒன்றாக இணைத்துக் கொள்ளும் அரிய கலையில் சிறந்து விளங்குகின்றனர். அவர்கள் இவ்யோகத்தைப் பெரும்பாலும் ஆளில்லாத இடங்களில் செய்து யோகத்தில் ஆழ்ந்திருப்பர்.

சித்தர் ஒருவர் போளூர் மாவட்டம் கலசப்பாக்கம் என்னும் கிராமத்தில் ஒரே திண்ணையில் பத்தொன்பது ஆண்டுகாலம் இருந்தார். அவர் மக்களுக்கு அருளாசி வழங்கியும் நோய்கள், துன்பங்கள் முதலியவற்றைப் போக்கியும் வந்தார். இவர் ஆற்றுச்சாமி என மக்களால் அழைக்கப்பட்டவர். ஆற்றில் சிறிது நாட்கள் ஜல சமாதியில் இருந்து மீண்டும் சகஜ நிலைக்கு வந்ததால் இப்பெயர் பெற்றார் என்பது குறிப்பிடத்தக்கதாகும். ஒருமுறை கலசப்பாக்கம் தங்கவேலு நைனார், சண்முக நைனார் ஆகிய இருவரும் செய்யாற்றின் கரையோரப் புதரில் இருக்கும் சுவாமிக்கு உணவளிக்கச் சென்றனர். காக்கங்கரை சுடுகாட்டில் சுவாமி இருப்பதையறிந்து அவ்விடம் சென்றதும் அங்குச் சுவாமிகள் கைவேறு, கால்வேறாகவும் கிடப்பதை அவ்விருவரும் கண்டனர். அதன் பின் சுவாமிகள் பிரிந்த உடலின் பாகத்தை ஒன்று சேர்த்து முழு உருவம் அடைந்ததைக் கண்டனர். இச்சொருபச் சித்தினைப் பெற்ற யோகிகள் இன்றும் உள்ளனர் என்பதை அறியமுடிகிறது. மேலும் காவாங்கரை சட்டிச் சுவாமிகள், இராமலிங்க சுவாமிகள் ஆகியோர்களும் இந்நிலையிலிருந்ததை மக்கள் கண்டுள்ளதாக அறியப்படுகிறது.

போகர், சொரூபச் சித்தைப்பற்றி 'போகர் 7000' எனும் நூலில் யூகி முனிவர் இந்நிலையிலிருந்ததை,

*'வேறாகத் தானிருந்த வண்ணம் சொல்வேன்*
*வேண்டியே கைவேறாய்க் கால் வேறாய்*

*நேராக உடல் வேறாய்த் தலைவேறாய்*

*நேர்மையுடன் பூமிதனில் இருந்தசித்து'*

என்னும் பாடல் உணர்த்துகின்றது. மேலும் போகர் பாடல்,

*"சீராக லோகமதில் அனேகங் கூத்துச்*

*சிறப்புடனே யாடினது மெத்தவுண்டு*

..............................................................

*வேனான வெகுசித்து சொரூபச் சித்து*

*வெளியான நாதவொளி வதீதமாமே"* [41]

என்னும் பாடலில் வியந்து போற்றுவது தெளிவாகிறது.

மேலும், குணங்குடி மஸ்தான் சாகிபு அவர்கள் பாடலில்

*''வஞ்சமறலிக்கு அஞ்சா திருக்கவும்*

*வஞ்சியரை முத்தங் கொஞ்சா திருக்கவும்*

*கஞ்சா அபின் வர்க்கம் கசப்பா யிருக்கவும்*

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

*நவகண்ட யோகநா லஞ்சா யிருக்கவும்*

*நெஞ்சம் பதைப்பற்ற நெஞ்சா யிருக்கவும்*

*நித்தன் குணங்குடி நித்த மிருக்கவும்''* [42]

என்று நவகண்ட யோகத்தின் பெருமையினைக் கூறுகிறார்.

சொரூபச் சித்தாடும்போது ஞானிகளை மனிதர்கள் கண்டால் அவர்களுக்கு மறுபிறவி வாய்க்காது என்று ஞானநூல்கள் கூறுகின்றது.

சித்தர்கள் உடலிலுள்ள தொண்ணூற்றாறு தத்துவங்களைத் தன்வசப்படுத்தினர். பஞ்சபூதங்களைத் தன் சொல்படி இயங்க வைத்தனர்.

வெட்ட வெளியில் திளைக்கும் யோக கலையைக் கற்றனர். அவர்களின் வாழ்வுத் தத்துவங்களைப் போற்றி வணங்கி ஏற்பது உலக மக்களின் கடமையாகும்.

## உடலை மறைத்து சூட்சும சரீரத்தில் இயங்குவது

சித்தர்கள் எண்வகை சித்திகளில் அணிமா என்னும் சித்து நிலையில் தன்னுடலை அணுவாக மாற்றினர். அதன் மூலம் பல்வேறு இடங்களுக்கும், கண்ணுக்கு எட்டமுடியாத அண்டவெளிகளுக்கும் பயணித்தனர் .

இதன் செயல் முறையை நூற்று முப்பத்தேழு ஆண்டுகட்கு முன்னர் வாழ்ந்த வள்ளலார் மூலம் அறியப்படுகிறது அப்பாசாமிச் செட்டியார் அடிகளாரின் அன்புக்குரியவர் ஆவார். (இவரின் தமையனார் நாக்கில் புற்று நோய் இருந்தது. அந்நோய் போக்க சுவாமி . திருநீற்றைக் கொடுத்து நோயைத் தீர்த்தவர் என்பது குறிப்பிடத்தக்கது.)

கடலூரில் திருவிழா நடைபெற்ற சமயம் செட்டியாரின் வீட்டுத் திண்ணையில் உறவினர், நண்பர்கள் ஆகியோர் உரையாடிக் கொண்டிருந்தனர். சுவாமிகள் உள்ளே அறையில் தியானித்துக் கொண்டிருந்தார். அச்சமயம் ஒளித்திரு மேனியுடன் ஒருவர் உள்ளே காற்றைப்போல் வேகமாகக் கடந்து செல்வதை அன்பர்கள் கண்டனர்.

சிறிது நேரங்கழித்து செட்டியார் அவர்கள் சுவாமியிடம் யாரோ உள்ளே வந்ததுபோல் இருந்தது என்று வள்ளலாரிடம் வினவினார். சுவாமிகளும் அதற்கு, ஆம் காசியிலிருந்து ஒரு சித்தர் லட்டு கொண்டு வந்து கொடுத்துவிட்டுப் போகிறார். இந்நேரம் அவர் காசி சென்று விட்டிருப்பார் என்று கூறினார். இச்செய்திகள் கேட்பதற்கு விநோதமாகவும், ஆச்சரியப்படும் விதத்திலும் இருக்கிறது எனினும் இச்செயல் மன உருவாக்க முறையிலே நடைபெறுகிறது.

## உளவியல் உண்மை

சித்தர்கள் மன உருவாக்கம் என்ற உணர்வில் மனத்தை ஊன்றிச் செய்தனர். அதன் விளைவாக உணர்வுக் கேற்ப உருவம் கிடைத்தது. அவ்விதச் சூட்சும தேகத்திற்கு உருக்கொடுப்பதன் மூலம் மனம் திரிபடைந்து மீண்டும் ஒன்றி இணை‿கிறது. அவ்வித உணர்வலைகளால் பாதிக்கப் பெற்ற மனம் எது பற்றிப் பாவித்ததோ அல்லது கற்பனைச் செய்ததோ அந்த வடிவமாக 'மானசீக' உருவாக்கம் ஏற்படுகிறது.

## விண்ணும் மண்ணும் சமம்

சித்தர்கள் விண்ணையும், மண்ணையும் சமமாகவே பாவித்தனர். கோரக்க முனிவரும், போகர் சித்தரும் வான்வழியே சீன தேசம் சென்றிருப்பதைக் கோரக்கரின் சந்திரரேகை200 என்னும் நூல் தெரிவிக்கிறது. ஒருமுறை கோரக்கரது சித்தாசிரமத்திற்குச் (தஞ்சை மாவட்டம் பொய்கை நல்லூர்) சில சித்தர்கள் வந்தனர். அவர்கள் கோரக்கரிடம் சில நூல்களைப் பெற்றுக் கொண்டு விண்ணிடை பறந்து சென்றதை, ''கோரக்கர்''[43] என்னும் நூல் தெரிவிக்கிறது.

சித்தர்கள் தங்கள் சூட்சும உடலை வான் வழியிலும், நிலவழியிலும் சென்று வருவதற்குப் பயன்படுத்தி கொண்டனர் என்றும், வெகுதூரத்தை சில நிமிடங்களில் கடந்தனர் என்றும், கனத்த உடலை லேசானதாக மாற்றிக் கொள்ளும் கலையைக் கற்றிருந்தனர் என்றும் தெரியவருகிறது. திருமூலர் பஞ்சுபோல் பறக்கும் நிலையை,

*"முடிந்திட்டு வைத்து மயங்கிலோ ராண்டில்*
*அணிந்த அணிமா கை தானாம் இவனுந்*
*தணிந்தவப் பஞ்சினுந் தானொய்ய தாகி*
*மெலிந்தங் கிருந்திடும் வெல்ல வொண்ணாதே!"*[44]

என்று வியந்து பாடுகிறார்.

இறப்பும், பிறப்பும் இல்லை என்ற உயர்நிலை கிட்டும். இது பொதுவாகச் 'சம்பிகசாதனம்' (வழக்கத்தைவெல்லுதல்) அசம்பிகச் சாதனம் (மேலான உணர்வு பெறுதல்) என இருவகைப்படும். இவை 1. நிரு விகற்ப சமாதி (வேறுபாடற்ற நிலை) 2. சவ்விகற்ப சமாதி (விகல்பமுடன் கூடியது) 3.ஆருட சமாதி (முற்றும் துறந்தபின் செய்வது) 4.சஞ்சார சமாதி (ஓரிடத்திலும் நிலையில்லாதிருப்பது) 5. வியவகார சமாதி (உலக வழக்கில் இருந்தபடியே செய்வது) 6. சகச சமாதி (சுகதுக்கங்களைக் கருதாது சாதாரணமாக விருப்பப்படி செய்வது) என்ற ஆறுபிரிவுகளாகும்.''[46] சித்தர்கள் சமாதியில் நுழைவதற்கு முன்பு தன் உடலைக் காயக்கல்பம் (காயசித்தி) செய்து கொள்வர்.

சமாதி நிலையில் மன ஒருமைப்பாடு முதன்மைப்படுத்தப்படுகிறது. ஆன்மாவைப் பிணைத்திருந்த மும்குற்றங்களான ஆணவம், கன்மம், மாயை ஆகிய அனைத்தும் நீங்கியபின் 'நான்' எனும் தன்முனைப்பு செயலற்றுப் போகிறது. அதன்பின் ஆன்மா தன்னியல்பான மெய்யுணர்வைப் பெற்று சத்–சித்–ஆனந்தமடைகிறது. (சச்சிதானந்தநிலை) அவ்வாறான பக்குவப் பட்ட ஆன்மா பூரணத்தில் ஒன்று கலந்து விடுவதைச் 'சமாதி' என்றழைக்கப்படுகிறது.

## சமாதி அடைந்தவர் உடல்

சித்தர்கள் பிணி, மூப்பு, சாக்காடு என்னும் மூன்று அவத்தை நிலைகளைக் கடந்தவர்கள். அவர்கள் சமாதி அடைந்தவுடன் உடலானது பார்ப்பதற்குச் சவம்போல் காணப்படும். சமாதி அடைந்த உடல் மரணித்த உடல்களில் காணப்படும் விறைப்புத் தன்மை இல்லாமலும், தலை தொங்கிவிடாமலும், வாய்பிளந்து அல்லது இறுக்கமாக மூடிக் கொள்ளாமலும், குழந்தையைத் தூக்குவது போலவும், உடல் இலகுவாய் நீட்ட, மடக்க கூடியதாகவும், துர்நாற்றம் வீசாதவாறும் இருக்கும். மேலும்

சமாதி அடைந்த சித்தர்கள் பக்தர்களுக்கு அருள்பாலித்துக் கொண்டு இருப்பர். அவர்கள் ஜீவனோடு இருக்கிறார்கள் அதனால் அவர்களுக்கு ஜீவசமாதி கோயில்களை மக்கள் உருவாக்கி வணங்கி வருகின்றனர்.

## திருமூலர் காட்டும் சமாதியின் வகைகள்

எண்வகை சித்துக்களைப் பெற்றவர்கள் சமாதிநிலை அடைய இயலும். இச்சமாதியின் வகைகளைப் பின்வருமாறு திருமூலர் வகைப்படுத்துகிறார்.

1. பூரணக் குகை நெறிச்சமாதி
2. மோனச் சமாதி
3. பிரணவ சமாதி

என மூன்று வகை சமாதி நிலைகளைக் குறிப்பிடுகின்றார்.[48]

சமாதிநிலை என்பது சித்தர்களின் வெற்றிச் சின்னங்களாகவும், அவர்களை வழிபடும் தெய்வ நிலையங்களாகவும் திகழ்ந்து வருகின்றன என்பதை அறியமுடிகிறது.

## பதினெண் சித்தர்களின் பிறப்பு, வயது, சமாதியுரைவிடங்கள்

| “சித்தர் பெயர் | பிறந்த நட்சத்திரம் | வயது | தலைமுறை | சீவசமாதி இடம் |
|---|---|---|---|---|
| 1. நந்தீசர் | விசாகம் | 680 | 3 | கைலாயம் |
| 2. திருமூலர் | பூசம் | 3000 | 27 | சிதம்பரம் |
| 3. அகத்தியர் | ஆயில்யம் | 4 யுகம் | 48 | அனந்தசயனம் (திருவனந்தபுரம்) |
| 4. சட்டமுனி | மிருகசீரிடம் | 800 | 14 | சீர்காழி / திருவரங்கம் |
| 5. கருவூரார் | அஸ்தம் | 300 | 42 | தஞ்சாவூர் |
| 6. புலஸ்தியர் | அனுசம் | 660 | 8 | ஆவுடையார் கோவில் (பாபநாசம்) |
| 7. கோரக்கர் | ஆயில்யம் | 80 | 11 | திருக்கோணமலை (பொய்கை நல்லூர்) |
| 8. கமலமுனி | பூசம் | 4000 | 12 | திருவாரூர் |

| | | | | |
|---|---|---|---|---|
| 9. பாம்பாட்டிச்சித்தர் | மிருகசீரிடம் | 163 | 4 | திருஞானம், துவாரகை, மருதமலை |
| 10. இடைக்காடர் | திருவாதிரை | 100 | 18 | திருவண்ணாமலை |
| 11. சிவவாக்கியர் | மகம் | 81 | 20 | கும்பகோணம் |
| 12. கொங்கணர் | உத்திராடம் | 1200 | 11 | கும்பகோணம் |
| 13. போகர் | பரணி | 300 | 18 | பழனி |
| 14. மச்சமுனி | ரோகிணி | 300 | 62 | திருப்பரங்குன்றம். |
| 15. புண்ணாக்கீசர் | சித்திரை | 112 | 18 | நண்ணாவூர் (சங்கணாச்சேரி) |
| 16. காலாங்கி | அசுவதி | 3000 | 10 | காஞ்சிபுரம் (கஞ்சமலை) |
| 17. சுந்தரர் | ரேவதி | 800 | 28 | மதுரை ஸ்ரீவல்லபசித்தர் |
| 18. தேரையர் | மூலம் | 700 | 90 | பொதிகைமலை"[49] |

மேற்கண்ட விபரம் சித்தமருத்துவ அமுது கூறும் செய்திகளாகும். இவ்வாறு சித்தர்கள் அறிவுக்கு எட்டாத அல்லது புலப்படாத ஆண்டுகள் வாழ்ந்து கொண்டிருக்கின்றனர் என்பது தெரியவருகிறது.

**அறிய வருவன**

'மரணமிலாப் பெருவாழ்வும் சமாதி நிலையும்' என்னும் இவ்வியலில் இறப்புக்கு அடிப்படையாக விளங்கும் 'உயிர்' அல்லது 'சீவன்' மனித உடலில் செயல்படும் விதத்தையும், அச் சீவன் சிவநிலையெய்தி இறப்பற்ற நிலை அடைவதையும், அதன் வடிவம் பற்றியும் அறியப்பட்டது. மனித உடலிலிருந்து உயிர் நீங்கினால் பிறவித்துன்பம் தொடர்வதையும், மனிதத் தோற்றம் பற்றிய அறிவியலாளர் கருத்துகளையும், உடம்பின் வகைகளையும் ஆராயப்பட்டுள்ளது.

தொண்ணூற்றாறு தத்துவங்கள், நோய், பிணி என்பனவற்றின் சொல்லாய்வும், மனமகிழ்வைப் பற்றியும், மனித உடம்புக்கு நோய் வருவதற்கான காரணம் பற்றியும், அந்நோயை நீக்கிட உடலில் புதிய அணுக்களை உருவாக்கும் 'முப்பு' எனும் கற்ப மருந்தினைப் பற்றியும் ஆராயப்பட்டுள்ளது.

சித்தர்களின் சாகாக்கலைக் குறித்தும் இறப்பின் விளக்கத்தினையும், முப்புவின் ஆற்றல் பற்றியும், பஞ்ச பூதங்களும் மனித உடலும் பற்றிய விளக்கத்தினையும், அவைகள் மாறுபட்டால் வரும் கேடுகளையும் அறியப்பட்டது. அத்துடன் பஞ்ச பூதங்களின் தன்மைகள், குணங்கள் குறித்தும் வாசியைப் பற்றிய கலைகள் (சந்திரக்கலை, சூரியக்கலை) பற்றியும் விரிவாக அறியப்பட்டது.

சித்தர்களின் வியப்பூட்டுகின்ற செயல்களான, உடலைப் பிரித்துச் சேர்க்கும் நவகண்ட யோகம், வேற்றுடல் நுழைவு, உடலை மறைத்துக் கண்ணுக்குப் புலப்படாமல் தோன்றுதல், சமாதி நிலை விளக்கங்கள் ஆகியவற்றைக் குறித்தும், சித்தர்களின் சமாதி நினைவிடங்கள் பற்றியும் இவ்வியலில் அறியப்பட்டுள்ளன.

## குறிப்புகள்

1. புனித பைபிள், 14:6.
2. திருக்குர்ஆன், 48:28.
3. திருமூலர், திருமந்திரம், பா. 2017.
4. அன்னை சரளாதேவி, சிவபுராணம் விளக்கவுரை, ப. 113.
5. திருவள்ளுவர், திருக்குறள், 10.
6. சித்தர் பாடல்கள், வானதி பதிப்பகம், ப. 262.
7. திருமூலர், திருமந்திரம், 725.
8. சிவதாணுப்பிள்ளை, சித்த மருத்துவ உடல் தத்துவம், ப. 3.
9. ஆனைவாரி ஆனந்தன், சித்தமருத்துவ வரலாறு, ப. 3.
10. திருமூலர், திருமந்திரம், 286.
11. முருகேசன், சித்தர்கண்ட மானுட ரகசியம், ப. 44.
12. திருமூலர், திருமந்திரம், 1974.
13. ஔவையார், சித்தர் பாடல், ப. 81.
14. மேற்படி, ப. 98.
15. குதம்பைச் சித்தர், சித்தர் பாடல்கள், ப. 262.
16. மேற்படி, ப. 268.
17. மேற்படி, ப. 269.
18. சிவதாணுப்பிள்ளை, சித்த மருத்துவ உடல் தத்துவம், ப. 19.
19. ஆனைவாரி ஆனந்தன், சித்தமருத்துவ வரலாறு, ப. 85.
20. திருவள்ளுவர், திருக்குறள், பா. 941, 945, 948, 949.
21. மேற்படி, பா 1280
22. திருமூலர் – எண்ணாயிரம் (எண் இல்லை)
23. மேற்படி, திருமந்திரம், பா. 167.
24. சிவவாக்கியம் ஆயிரம், பா. 43.

25. தொல்காப்பியர், தொல்காப்பியம், சூ. 247.

26. திருவள்ளுவர், திருக்குறள், 338.

27. க. நாராயணன், சித்தர் தத்துவம், ப. 112.

28. சித்தர் பாடல்கள், வானதி பதிப்பகம், ப. 107.

29. மேற்படி, ப. 106.

30. இராமலிங்க அடிகள், திருஅருட்பா, ப. 102.

31. சரவணானந்தா, சாகாக்கல்வி, முகவுரை, ப.V.

32. மகாலட்சுமி, தட்சிணாமூர்த்தி குருமுகம், ப. 29.

33. மேற்படி, ப. 28.

34. மேற்படி, ப. 33.

35. இராமலிங்க அடிகள் திருஅருட்பா, சற்குருமணிமாலை,

36. சிறப்பு மலர், சித்தமருத்துவச் சங்கம், காங்கயம் வட்டம், ப. 30.

37. சத்தியநாராயணன், நீதி நூல்கள் ஏழு, ப. 20.

38. சித்தர் பாடல்கள், வானதி பதிப்பகம், ப. 72.

39. அப்துல்காசிம், வாதநோய்கள், ப. 21.

40. இராகவன், அ. சித்தர்களின் பிரணவ சூத்திரம், ப. 60.

41. போகர், போகர் 7000, ப. 260.

42. குணங்குடி மஸ்தான் சாகிபு பாடல்கள், ப. 29.

43. அருண்குமார், நாகை. கோரக்கர், ப. 70.

44. திருமூலர், திருமந்திரம், பா.673.

45. மேற்படி, பா.77.

46. இராஜகோபாலன், சித்தமருத்துவ வினாவிடை, ப. 4.

47. அரங்க இராமலிங்கம், திருவள்ளுவர் இறைநெறி, ப. 96.

48. திருமூலர், திருமந்திரம், பக்.253, 356, 391

49. சிவதாணுப்பிள்ளை, சித்த மருத்துவ அமுது, ப. 52.

# இயல் ஆறு

## பதினெண் சித்தர்கள் வழிநின்ற ஞானிகளும் பெண் துறவிகளும் சித்தினிகளும் தொண்டும்

## இயல் – 6

# பதினெண் சித்தர்கள் வழிநின்ற ஞானிகளும். பெண் துறவிகளும், சித்தினிகளும், தொண்டும்

உலக வழக்கில் சித்தர்கள் பதினெட்டுப் பேர் என்பது மரபாக இருப்பினும், பதினெட்டுப்பேர் குழுவில் இடம் பெறாத சித்தர்கள் வேறொரு பதினெண்மர் குழுவில் இடம் பெறுவதையும், சிலபேர் விடுபட்டுப்போயும் உள்ளனர். சித்தர்கள் வாழையடி வாழையெனத் தோன்றிக் கொண்டுதான் இருக்கின்றனர். ஒருசிலர் உலக அரங்கில் வெளிப்படுகின்றனர். ஒருசிலர் ஓர் ஊரிலோ, அல்லது கிராமத்திலோ, மட்டுமே இருக்கின்றனர். அவர்கள் அவ்வூரில் உள்ள மக்களுக்கு ஏற்படுகின்ற நோய்களையும், வாழ்வுத் துன்பங்களைப் போக்கியும், ஆன்மீக விழிப்பையும் ஏற்படுத்துகின்றனர். பின்னர் அவர்கள் வாழ்வை நிறைவு செய்து அங்கேயே சமாதி நிலையை அடைகின்றனர்.

அவ்வாறான சித்தர்கள் ஞானிகள் போன்றவர்களின் ஆற்றல்களையும், நெறிகளையும் அறிவது இவ்வியலின் நோக்கமாக அமைகிறது.

இறைவன் மனிதப்பிறவி என்னும் பெருங்கடலில் துன்புறு பவர்களைத் தன் அருளால் முக்திக்கரைச் சேர்ப்பதை இலட்சியமாய்க் கொண்டு அவ்வப்போது, ஞானிகளையும் சித்தர்களையும், அருளாளர் களையும் அனுப்புகிறான். அவ்விறைவன் உலகத்தில் தீங்கு நேராதவாறும், மக்கள் நீதிநெறியில் நின்று உலக வாழ்வை வெல்லவும் முக்தி நிலைப்பெறவும் கருணைபுரிகின்றான்; காத்தும் அருளுகின்றான்.

மேற்கூறியவற்றை ஆலயம் ஏன்? எனும் நூல் கூறுகின்றது. மேலும் உலக வாழ்வான சிற்றின்ப வாழ்வில் திளைத்து, துயருற்று, மனம் வெறுத்து, உயிர்க் கலங்கி உடலாலும், மனத்தாலும் படும் வேதனையுற்றவர்களுக்குத் துயர்களை நீக்கும் வழியைச் சித்தர்கள் காட்டினர். இறைவன் இருக்குமிடமறிந்து அவனை நெஞ்சில் போற்றி வந்தால் தீமைகள் அழிந்துப் பேரின்பமாகிய வீடுபேற்றை அடையலாம் எனச் சித்தர்கள் கூறினர். இதனை வழிமொழியும் மாணிக்கவாசகர்,

*"ஆர்த்த பிறவித் துயர்கெட நாம் ஆர்த்தாடும் தீர்த்தன்"*[1]

என்பதன் மூலம் பிறவித் துன்பத்தை நீக்குவதற்கு இவ்வுலகில் இறைவனைத் தவிர வேறுயாராலும் முடியாது. அவன் அருள் வேண்டுமென கிருபானந்த வாரியார் குறிப்பிடுகிறார். இதனை ஔவையாரும்,

*"தன்னை அறியும் அறிவு தனைப்பெறில்*
*பின்னைப் பிறப்பில்லை வீடு"*[2]

என்று மேற்சொன்னக் கருத்தினை மெய்ப்பிக்கின்றார்.

**மெய்யுணர்தல்**

மெய்யுணர்தல் என்பது தன்னுள் உறைந்திருக்கும் உண்மைப் பொருளாகிய கடவுளை உள்கடந்து தெளிவதாகும். அழிவிலாத மெய்ப்பொருளைச் சித்தாக்கி ஆனந்த நிலையில் பேரின்பமுறுவதைச் சச்சிதானந்த நிலை என்று ஞானிகள் குறிப்பிடுகின்றனர். திருவள்ளுவரும் 'ஞானம்' என்னும் பேரறிவின் துணைகொண்டுதான் மெய்ப்பொருளை அடைய முடியும் என்பதை,

*'மெய்ப்பொருள் காண்ப தறிவு'*

என்று கூறுகிறார். மேலும் இறைவனை அடைவதற்கு மாயையாகிய

உலகியல் பற்றுக்கள் தடையாக உள்ளதைக் கீழ்வரும் ஞானிகளின் கருத்துகளின் மூலம் தெளியலாம்.

*"அற்றது பற்றெனில் – உற்றது வீடுயிர்*
*செற்றது மன்னுறில் – அற்றிறை பற்றே"* [3]

என்று நம்மாழ்வார் திருவாய் மொழியும், *'பற்றுக பற்றற்றான் பற்றினை'* என்று திருவள்ளுவரும்,

*'தேடிக்கண்டு கொண்டேன் – திருமாலொடு நான்முகனும்*
*தேடித் தேடொணாத் தேவனை – என்னுள்ளேத்*
*தேடிக் கண்டு கொண்டேன்'*

என்று திருநாவுக்கரசு சுவாமிகளும் அகமகிழ்ந்து கூறுவதையும் அறிய முடிகிறது.

ஆதலால், உலகப்பற்று, சினம், காமம், அறியாமை இவை மனித மனங்களிலிருந்து நீங்குமானால் மேற்சொல்லப்பட்ட பேரின்பத்தை அடைவது உறுதி என்பதை ஞானிகள் தெளிவாக்கியுள்ளனர். சித்தர்கள் அனைவரும் அட்டமா சித்துகள், இரசவாதக் கலை முதலியவற்றில் தேர்ச்சி பெற்றவர்கள் அல்லர், அவற்றில் சிலர் ஞானத்தை அடைவதைக் குறிக்கோளாகக் கொண்டு செயல்பட்டனர். அவர்கள் உலகியல் வாழ்வில் வாழ்ந்தாலும் பற்றற்றும், பந்தம் நீங்கியும் வாழ்ந்துள்ளனர். ஞான நிலையைப் பெற்றவர்கள் தங்கள் ஆத்மவிழிப்பை தனக்குள் பெருக்கிக் கொண்டு உடலுடன் இருக்கும் போது இறைவனுடன் கலந்து விடுவார்கள். சிலர் நீண்ட நாட்கள் உடலுடன் வாழ்ந்து நித்திய ஜீவ சமாதியில் ஆழ்கின்றனர். அப்படிப்பட்ட தன்மையடைவதை மறுபிறப்பு என்று 'சுப்பிரமணிய ஞானம்' என்னும் நூல் கூறுகிறது. மேற்கூறிய நிலையடைந்தவர்களுக்குப் பிறப்பும், இறப்பும் இல்லையென்று கீழ்வரும் பாடல் தெளிவுறுத்துகிறது.

*“பரத்தோடே சேர்ந்தவர்கள் பரமேயாவார்*

*பரம்பிரம்மப் பிறவியதாய் எங்கும் தோன்றும்*

*.........................................................................*

*திறத்தோடே இந்த வகை அறிந்தாயானால்*

*சிவத்தோ டேசேருவதில் செயம் பெற்றாயே!”* [4]

என்று கூறுவதன் மூலம் பரமன் நிலையை மக்களுக்கு எடுத்துக்காட்டியும், சிவநிலை அடையும் மார்க்கத்தை கூறுவதையும் அறியமுடிகிறது. மேலும் பொன், வெள்ளி போன்ற வேதை மார்க்கத்தில் சிறந்து விளங்கியவர்கள் மட்டும் சித்தர்களாகிவிட இயலாது. தன்னையறிகின்ற ஆற்றல் பெற்றவர்கள் பெரியவர்கள் என்று கீழ்வரும் சுப்பிரமணிய சுத்த ஞானப் பாடல் கூறுகிறது.

*“பொன் வெள்ளி செய்கிறவன் பெரியோன் அல்ல!*

*புகழான அட்டசித்தி பெரியோனல்ல!*

*முன்நின்ற வயித்தியனும் பெரியோன் அல்ல!*

*மூச்சடக்கி யெழும்பினவன் பெரியோன் அல்ல!*

*சின்னமுள்ள குழியிருப்போன் பெரியோன் அல்ல!*

*திறமுடனே கெவனமிட்டோன் பெரியோன் அல்ல!*

*தன்னிலையை அறிந்தவனே பெரியோனாவான்*

*தன்னையறியான் வகைகெட்ட சண்டி மாடே!”* [5]

என்பதன் மூலம் அனைத்துத் துறைகளிலும் வல்லவர்களாயிருப்பினும் தன்னையறியாதவர்கள், தன்னிலை உணர்ந்து சிவமாகாதவர்கள் வெறும் சண்டிமாடு என்று சாடுவதை அறியமுடிகிறது. மேலும் சித்தர்கள் என்போர் யார் என்பதை மிகத் தெளிவாகவும் தன்னையறிந்த ஞானிகள் யாவரும் சித்தர்கள்தான் என்பதையும் தெளிவுடன் எடுத்துரைக்கின்றது. ஆதலால் சித்தர்கள் பட்டியலில் இடம்பெறாத சான்றோர்களைப் பற்றி அறிவது இன்றிமையாததாக அமைகிறது.

## பதினெண் - சித்தர்குழுவில் இடம்பெறாத சித்தர்கள்

சித்தர்களை மக்கள் புரிந்து கொள்ள இயலாதவாறு வாழ்ந்தனர். அவர்கள் உண்மையில் அருளாளர்களாவர். தன்னையறிந்தபின் தான் பிறருக்காக என்பதை நன்கு உணர்ந்தவர்கள். அவர்களை அறிந்து கொள்ளவும், புரிந்துணரவும், காண்பவருக்கு அறிவுத்தெளிவு இருந்தால் மட்டுமே அது சாத்தியமாகும். இத்தகைய சித்தர்கள் ஒருமொழி, ஒரு இனம், ஒரு மதம், ஒரு நாடு, ஒரு குழு என்று எந்த எல்லைகளுக்குள்ளும் அடக்க முடியாதவர்கள். எல்லா நாடுகளிலும், எல்லா மதங்களிலும், எல்லா இடங்களிலும் அனைத்து மொழியினராகவும், இனத்தினராகவும் வாழ்ந்திருக்கிறார்கள். தமிழ்நாட்டில் ஞானரத்தினக் குறவஞ்சி பாடிய பெரியவர் பீரு முகம்மது ஞானிகள், குணங்குடி மஸ்தான் சாயுபு, கமால்முனி, விழுப்புரத்தில் படேசாகிபு, மௌலாசாகிபு போன்ற இசுலாமிய சித்தர்களும், தேரையர், தரும சௌமியர், அறவண அடிகள் போன்ற பௌத்த மதச் சித்தர்களும், இரட்சணிய யாத்திரிகம் இயற்றிய வீரமா முனிவர் போன்ற கிறித்துவ மத போதகர்களும் ஞானிகளாகவும், சித்தர்களாகவும் வாழ்ந்துள்ளதை அறிய முடிகிறது. இவர்களில் பலபேர் உலக மக்களுக்குத் தெரியாமல் குறிப்பிட்ட பகுதியில் மட்டும் தொண்டு செய்து மக்களுடன் வாழ்ந்து மறைந்துள்ளனர். இத்தகைய சித்தர்களில் சிலரையும், தமிழகத்தில் நீதிநெறி இலக்கியங்கள் மூலமும், சன்மார்க்க நெறிகளைப் போதித்து, மக்களுக்கு ஆன்ம விழிப்பை ஏற்படுத்திய ஞானிகளைப் பற்றியும் இங்கே அறிய முடிகிறது.

சித்தர்கள் உலகமெங்கும் வாழ்ந்திருந்தாலும் சித்தமருத்துவம் கண்டவர்கள் தமிழ்ச் சித்தர்கள் ஆவர். மருத்துவம், வேதியல், இரசவாதம், சோதிட சாஸ்திரம் போன்றவற்றில் நுழையாத ஞானச்சித்தர்களும் இருந்துள்ளனர். சித்தர்கள் சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல், இடித்துரைத்தல் போன்ற முறைகளில்; மடமையில் அழுந்தியுள்ள

மக்களுக்கு அறிவுரையாகவும், நகைச்சுவையாகவும், நையாண்டித் தனமாகவும், மறைபொருளாகவும் எடுத்துக் கூறினார். அவர்களில் பதினெண் சித்தர் பட்டியலில் இடம்பெறாத சித்தர்களான கஞ்சமலைச் சித்தர், கல்லுளிச்சித்தர், டமரானந்தர், கடுவெளிச்சித்தர், அழுகண்சித்தர், தன்வந்தரி, அல்லமாப்பிரபு, வசிட்டர், வால்மீகி, வருணமகரிசி, சுகப்பிரம்ம மகரிசி, பிருகுமுனிவர் போன்றோர்கள் அடங்குவர். மேலும் பலர் உள்ளனர்.

## கஞ்சமலைச் சித்தர்

திருமூலர் பாடலில் இடம் பெறுகின்ற இந்தக் கஞ்சமலைச்சித்தர் ஞானப் பாடல்கள் பல வழங்கியுள்ளார்

*"சாண்வயிற் றாலலை யாதே! – நிதம்*
*சஞ்சலப்பட்டுக் கொண்டே மலையாதே!*
*ஆணவத் தாலுலையாதே – உனக்*
*கானந்த முத்தியது நிலையாதே!"*[6]

என்னும் பாடலில் பொருளாசை பிடித்தல், சஞ்சல மனத்தோடு இருத்தல், ஆணவம் நிறைந்திருத்தல் முதலியவற்றால் ஆனந்த முத்தி நிலைக்காது போகும் என அறிவுறுத்தப்படுகிறது. திருமூலரும்,

*"மந்திரம் பெற்ற வழிமுறை மாலாங்கன்*
*இந்திரன் சோமன் பிரமன் உருத்திரன்*
*கந்துருக் காலாங்கி கஞ்ச மலையானோ*
*டிந்த எழுவரும் என்வழியாமே!"*[7]

என்னும் பாடலில் மாணவர்களை இனங்காட்டுகின்ற ஆசானாக ஏழு சீடர்களின் பெயர்களை விளம்புகிறார்.

## கல்லுளிச் சித்தர்

*‘கல்லுளிச் சித்தன் போனவழி காடுமேடெல்லாம்*
*தவிடுபொடி’*

என்னும் பழமொழி அவர் பெயரில் வழங்குகிறது. இவரைக் கண்டால் மலைகளும் குறுக்கே நில்லாது பயந்து விலகி விடும் என்ற முறையில் இப்பழமொழி தோன்றியதாக இராமச்சந்திரன் கூறுகிறார்.’’[8] இவர் மிக எளிய நடையில் ஞானத்தை மக்களுக்கு கூறியவர்.

*‘பிர்ம சொரூபத்தை நாடு – உன்*
*கர்ம வினையோட வழிதனைத் தேடு*
*எட்டி பழுத்தாலு மென்ன – காசு*
*யீயாத லோபிகள் வாழ்ந்தாலுமென்ன?*
*கட்டி வராக னிருந் தென்ன – அதைக்*
*காவல்கள் போட்டு நீ காத்திருந்தென்ன?’*

என்னும் பாடலில் மனத்தைச் செம்மையாக்கிச் சுழுமுனையில் நாட்டங் கொண்டால் கர்மவினைகள் நீங்குமென அறிவுறுத்துகிறார். மேலும் பொற்குவியலை நீயிருந்து காலமெல்லாம் காத்து வரினும் எதுவும் உன்னுடன் வராது, ஏதும் நிலைக்காது. தருமகாரியம் செய்து மக்களுக்குப் பயன்பட வேண்டுவதே மானுடத் தத்துவம் என்பதையும் அறிவுறுத்தப் பட்டுள்ளது.

## கடுவெளிச் சித்தர்

மனிதனின் பிறப்பு இரகசியத்தையும், உடலைப் பேணுதலையும் எளிய சொற்களால் கடுவெளிச்சித்தர் பாடியுள்ளார்.

*“நந்தவனத்தில் ஓர் ஆண்டி – அவன்*
*நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டிக்*

*கொண்டு வந்தானொருத் தோண்டி – அதைக்*

*கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத் தாண்டி!"*[9]

என்னும் பாடலில் பத்து மாதமாய்க் கருவறையில் தவம் செய்து பெற்ற உடம்பை, உலக இன்பங்களில் மூழ்கடித்துப் பிணி, மூப்பு, இறப்புப் போன்றவற்றை உருவாக்கி, கிடைத்தற்கரிய உடலை அழித்துவிடும் நிலையைக் கண்டு மனம் வெதும்புகிறார். மேலும்,

*"மெய்ஞ்ஞானப் பாதையிலேறு – சுத்த*

*வேதாந்த வெட்ட வெளியினைத் தேறு*

*அஞ்ஞான மார்க்கத்தைத் தூறு"*[10]

என்னும் பாடலடியில் மெய்ஞ்ஞானம் அடைவதற்கு அஞ்ஞானமாகிய இருள்மாயை தடையாக இருப்பதையும், அதனை அறிவால் முயன்று வெல்ல வேண்டும் என்பதையும் மிக எளிமையாகக் கூறுகிறார். இவர் காஞ்சிபுரத்தில் சமாதி வீற்றிருக்கிறார் என்பதைப் போகர் ஜனனசாகரம் கூறுவதாகச் சித்தர் வரலாறு கூறுகிறது.

### அழுகண் சித்தர்

அழுத கண்களோடு ஊரையும், உலகையும் வலம் வந்ததால் இவர் அழுகண்சித்தர் எனப் பெயர் பெற்றுள்ளார். இவர் அழுதது இவருக்காக அல்ல! இவர் நாட்டிலுள்ள மக்களுக்காக அழுதிருப்பார். மக்கள் குறையேதுமின்றி ஞானநிலைக்குச் சென்று தாம்பிறந்த பிறப்பையும், செய்த வினைகளையும் அறிந்து இறைவனைச் சேர்தல் வேண்டும் என்பது இவரது பாடல்களில் குறிப்பிடப்பட்டுள்ளது.

*"பையூரிலே யிருந்து பாழூரிலே பிறந்து*

*மெய்யூரில் போவதற்கு வேதாந்த வீடறியேன்*

*மெய்யூரில் போவதற்கு வேதாந்த வீடறிந்தால்*

*பையூரும் மெய்யூரும் என் கண்ணம்மா*
*பாழாய் முடியாவோ?"*[11]

என்னும் பாடலில் பிறப்பெடுத்த இவ்வுடல் ஞானமடையாமல் போகுமானால் பிறந்ததே பாழாய்விடும் என்றும், மேலும் இவரது வாத வைத்தியப் பாடலாக,

*"வீரச்சுண்ணம் வெள்ளியதாம் – ஆத்தாளே*
*வெள்ளி பதினெட்டாகும்*
*பூரச்சுண்ணம் சேர்க்கவடி – ஆத்தாளே*
*பொன் வயதோ எண் நான்காம்"*[12]

என்னும் பாடலில் வீரச்சுண்ணம், பூரச்சுண்ணம் போன்ற சித்த மருத்துவத்தின் முப்பு கற்ப மருந்தாகிய சுண்ணங்களைப் பற்றி பாடுகிறார். இதன்மூலம் இவர் இரசவாதக்கலையிலும் சிறந்தவர் என்பது தெளிவாகிறது. இவரது சமாதி நாகப்பட்டிணத்தில் அமைந்துள்ளதாகக் கூறப்படுகிறது.

**தன்வந்திரி**

தன்வந்திரி முனிவர் ஆயுள் வேத மருத்துவத்தின் தந்தையாகக் கருதப்படுகிறார். இவர் தேவர்களும், அசுரர்களும் அமுதத்திற்காகத் திருப்பாற் கடலைக் கடைந்தபோது அமுத கலசத்துடன் தோன்றியவர் எனப் புராணங்கள் கூறுகின்றன. சித்தர்கள் பதினெட்டுப் பேரும் இவருக்கு உபதேசித்ததாக அகத்தியர் பன்னிரெண்டாயிரம் நூல் கூறுகிறது.

*"சட்டமுடன் தன்வந்திரி ஜாதிபேதம்*
*தகைமையுள்ள மகாவிஷ்ணு என்னலாகும்"*[13]

என்று போகமுனிவர் தன்வந்திரியை விஷ்ணுவின் அவதாரமாக சத்தகாண்டத்தில் கூறுகிறார். அறுவை சிகிச்சை மருத்துவம் கண்ட சிசுருதருக்கு ஆயுள் வேதத்தை உபதேசித்தவர் தன்வந்திரி ஆவார்.

தன்வந்திரி வைத்திய சிந்தாமணி 1200, வைத்திய காவியம் 100, நிகண்டு 300, கருக்கிடை 30, முப்புசூத்திரம் 48, கலைஞானம் 500 மற்றும் கலைஞானம் 32 போன்ற நூல்களைப் படைத்துள்ளார்.

தன்வந்திரி முனிவர் வைத்தீஸ்வரன் கோவிலில் சமாதி கொண்டுள்ளதாகக் கூறப்படுகிறது.

**அல்லமாப் பிரபு**

சித்தர் வரிசையில் கேள்விப் படாத பெயராக இருப்பினும் காகபுசுண்ட முனிவருக்கு இவர் உபதேசம் செய்துள்ளது தெரியவருகிறது.

*"அல்லல்படா மனத்தோனே உனக்காய்ச் சொன்னேன்*
*அரும் பொருளைப் புசுண்டாநீ அறிவாய் தானே!"*[14]

என்று கூறுவதன் மூலம் தெரியவருகிறது. மேலும்

*"மாற்றுகின்ற வாதமது அடிதான னென்றும்*
*வகுத்துரைப்பார் பித்தமது நடுத்தா னென்றும்*
*போற்றுகின்ற சீதமது முடிதா னென்றும்*
*புகன்றிட்டார் சித்தரெல்லாம் புகன்றிட் டாரே!"*[15]

என்னும் பாடலில் மானுட நோய்களை நாடியைக் கொண்டு அறிந்து கொள்ள வேண்டும் எனக் கூறப்பட்டுள்ளது. இவர் நாடிசாத்திரம் பன்னிரெண்டு எனும் நூல் எழுதியுள்ளதாகச் சித்தர் நூல்பதிப்பாசிரியர் இராமச்சந்திரன் கூறுகிறார்.

**வருண மகரிசி**

பூமியில் மும்மாரி பெய்வதற்கு வருணமகரிஷியே காரணம் எனக் கூறப்படுகிறது. இவர் சிவபெருமானைக் குறித்துப் பலயுகங்கள் தவமியற்றி அத்தவத்தின் பயனாக வரம் பெற்றதாகப் புராணங்கள் கூறுகின்றன.

வருண மகரிசி பூவுலகின் தன்மை பற்றியும், ஏழுகடல்களின் தன்மைபற்றியும், வான் மண்டலத்தன்மை பற்றியும் நூல்கள் பல எழுதியுள்ளார். இதனால் இவர் சோதிட சாத்திரத்தில் தலைசிறந்தவராகக் கருதப்படுகிறார். இவரிடம் வான நூல் சாத்திரம் வேண்டி அகத்தியர் முறையிடுவதை அகத்தியர் பன்னிரண்டாயிரம் நூல் விளக்குகிறது.

*"வேண்டுமே நாள்கிழமை யறிவதற்கு*
*வெட்டவெளி யாகாசக் கணக்குத் தானும்*
*தாண்டவம்போல் கிராணத்தின் கணக்குத் தானும்*
*தகமையுடன் பூமியுட நேர்மை தானும்*
*ஆண்டுவகை அளவெடுக்கும் சூட்ச வேதம்*
*அப்பனே கருவி கரணாதி யந்தம்*
*தூண்டியதோர் கருமான மின்னும் சொல்வோம்*
*சூட்சாதி சூட்சமதைச் சொல்லு வீரே!"*[16]

என்னும் பாடலின் மூலம் மக்களின் சோதிட அறிவியலை வளர்த்து பூமி வளம் பெற வேண்டப்படுவதை அறியமுடிகிறது. இவர் எழுதிய கணித சிந்தாமணி 1000, சந்திர நூல் 600, சத்தமண்டலம் 100, வானநூல் 10, பூமி நூல் 10, சோதிடம் 8000, போன்ற நூல்கள் இயற்றியுள்ளதாக அகத்தியர் தம் நூலில் குறிப்பிடுகிறார். என்று சித்தர் வரலாறு கூறுகிறது.

**வால்மீகர்**

வடமொழியில் இராமாயணம் பாடிய வால்மீகரைச் சித்தர் வரிசையில் வைத்துப் போகமுனிவர் பாடுகின்றார்.

*"தோன்றமுடன் வால்மீகர் என்ற சித்து*
*தெளிவாக மார்க்கமது சொல்வேன் பாரீர்*
*..........................................................................*

*ஆற்றலுடன் வால்மீகி ராமாயணத்தை*

*அவனிதனில் மாந்தருக்குச் செய்திட்டாரே!"*[17]

என்பதன் மூலம் வால்மீகி முனிவரும் ஒரு சித்தராவார் என்பது புலப்படுகிறது.

## பிருகு முனிவர்

பிருகு முனிவர் நாடி சோதிடத்தில் வல்லவராவார். உலக நடப்பை நாடி சோதிடத்தின் மூலம் தெளிவாக்கியுள்ளார். பாரத தேசத்தின் பிரதம மந்திரியாக இருந்த நரசிம்மராவ் என்பவரையும், தென்பகுதியில் ஒரு மங்கை ஆளப்போவதையும் பன்னூறு ஆண்டுகட்கு முன்பே கூறியுள்ளார்.

*"காணவே நீ நூல்தானும் வெளிவரும் காலம்*

*காட்டினேன் பாரதத்தின் வர்ஷந் தன்னில்*

*கோனே வடபாகம் தன்னில் தானும்*

*குறிப்பாக ஆட்சியது செய்வோன் நாமம்*

*ஊனே தானில்லாது உலகு தன்னில்*

*உரம்பிளந்தோன் நாமமது ஆதி யாகும்*

*மானேதான் தென்சார்பு வெற்றியக்கம்*

*மங்கையவள் ஆண்டிடுவாள் திராவிட நாடே"*[18]

என்னும் பாடல் மூலம் அறியமுடிகிறது.

## திருவள்ளுவர் - ஞானவெட்டியான்

திருவள்ளுவர் என்னும் பெயரில் இரண்டு பேர் வாழ்ந்துள்ளதாகக் கருதப்படுகிறது. 'ஒருவர் திருக்குறளை இயற்றியவர், மற்றொருவர் அதி வீரராம பாண்டியன் காலத்தில் வாழ்ந்தவர் என்று சாமி.சிதம்பரனார்

குறிப்பிடுகிறார்' (கி.பி.16 ஆம் நூற்றாண்டு). அவர் சித்தர்களைப் போலவே மக்கள் ஆன்ம விழிப்புடன் வாழ்ந்து, சாதிமத பேதங்களற்ற சமதர்ம சமுதாயம் காண ஞானவெட்டியான் எனும் நூல்வாயிலாகப் பாடல்களையும், கருத்துகளையும் வழங்கியுள்ளார்.

*'இஞ்சியிட மஞ்சள் உண்டோ? ஏலம் இடச்சுக்காமோ?*
*நஞ்சுகந்த எட்டியிலும் நல்லஎலு மிச்சையுண்டோ?*
*துஞ்சுபுகழ் பூசை செய்யும் சுந்தரரே என்குலத்தில்*
*வஞ்சியை நீர் சேர்ந்ததனால் மைந்தன் தரியாதோ?'*

என்னும் பாடலில் இஞ்சியும் மஞ்சளும் அதனதன் பயிரையே விளைவிக்கும். எட்டிக் காயிலும் எலுமிச்சை தோன்றுவதில்லை. மேலும் மனிதப் பிறவியில் உயர் சாதி ஆண் தாழ்சாதி பெண்ணுடன் சேர்ந்தாலும் குழந்தைதான் பிறக்கிறது"[19] ஆதலால் உயர் குலம் தாழ்ந்த குலம் என்பது எதுவும் இல்லை என்கிற பகுத்தறிவுச் சிந்தனை இப்பாடலில் வெளிப்படுகிறது. அவர் உடலை, காயசித்தி பெறும் கலையிலும் தேர்ந்து வெற்றி பெற்றுள்ளார்.

*"உப்பின் கசடுதான் ஊறலது மாறினதால்*
*முப்புச் சுண்ண மாவதற்கு முன்னமே – உப்பதானால்*
*கற்பாந்தங் கோடி காய மிதுவலுத்துச்*
*சொற்பாயும் வாசியில் தேகம்"*[20]

என்னும் பாடலில் இரசவாதக் கலையின் மூலம் உடலை வலுக்கச் செய்து நீண்ட நாள் வாழ முடியும் என்பது வெளிப்பட்டுள்ளது.

### திருக்குறள் தந்த வள்ளுவர்

திருக்குறள் தந்த திருவள்ளுவர் ஒரு ஞானாசிரியராகவும், சித்தராகவும் கருதப்படுகிறார். "திருவள்ளுவரது காலம் கி.பி. ஆறாம்

நூற்றாண்டுக்குமுன் என்பது உண்மையென்றும், திருவள்ளுவரும் சித்தர்தான் என்றும் சாமி சிதம்பரனார் குறிப்பிடுகின்றார்.''[21] மேலும் கொங்கணவருக்கு இவர் ஆசிரியராய் இருப்பதையும் குறிப்பிடுகிறார்,

“கொங்கணச்சித்தர் ஒருமுறை ஊருக்குள் வந்து திருவள்ளுவர் மனைவாயிலில் நின்று பிச்சை கேட்டார். திருவள்ளுவர் மனைவி வாசுகியம்மையார் வள்ளுவருக்கு உணவு பரிமாறிக் கொண்டிருந்த நேரம் ஆதலால் அவ்வம்மையார்பிச்சை கொண்டு வரச் சிறிது நேரமாயிற்று. நேரங்கழித்துப் பிச்சை கொண்டு வந்த வாசுகியாரைக் கொங்கணர் கோபத்துடன் விழித்துப் பார்த்தார் உடனே வாசுகியார்,

*‘கொக்கென்று நினைத்தாயோ*
*கொங்கணவா?’*

என்று கேட்டார். கொங்கணர் பயந்து அம்மையாரைப் பணிந்தார். அதன்பின் வள்ளுவருக்குச் சீடர் ஆனார். என்று கொங்கணச் சித்தர் வரலாற்றில் சாமி சிதம்பரனார் குறிப்பிட்டுள்ளார். ஆதலால் திருவள்ளுவரும் ஒரு சித்தர் என்பதில் ஐயம் ஏதும் இல்லை. இவரைத் தெய்வப் புலவர் என்றும், தேவர் என்றும், தமிழ் மறை கண்டவர் என்றும் போற்றுகின்றனர்.

“வள்ளுவரின் திருக்குறள் ஒரு வாழ்வியல் நூலாகவும், நீதி போதிக்கும், முக்காலமும் உணர்த்துகின்ற ஓர் அறிவுக்களஞ்சியமாகவும் திகழ்கிறது. அந்நூலில் கூறும் கருத்துகளெல்லாம் மெய்ப்பொருளைக் கண்டு வீடுபேறு எய்திடவும், பிறவிச் சுழற்சியைத் தவிர்த்து மரணமிலா பெருவாழ்வு காணவும் வலியுறுத்துவது தெரிகிறது.

தெய்வப் புலவரின், அறத்துப்பால் – மெய்யுணர்தல் அதிகாரத்தில்,

*“கற்று ஈண்டு மெய்பொருள் கண்டார் தலைப்படுவர்*
*மற்று ஈண்டு வாரா நெறி!”*[22]

என்பதன் மூலம் மனிதர்கள் தத்துவ உண்மைகளை அனுபவம் உடைய ஞானாசிரியரிடம் கேட்டுக் கொள்ள வேண்டும் அதனால் மெய்ப் பொருளை அறிந்து மோட்சத்தை அடைய முடியும். மேற்கூறியவற்றிலிருந்து வள்ளுவரையும் ஒரு சித்தர் என்பதை மெய்ப்பிப்பது தெள்ளத் தெளிவாகிறது.

**ஔவையார்**

தமிழ் மக்களின் நெஞ்சங்களில் நிலைத்திருக்கின்ற ஔவைப் பிராட்டியாரின் பாடல்கள் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் நீதி நூல்களாகும். அவை ஆத்திசூடி, கொன்றைவேந்தன், மூதுரை, நல்வழி ஞானக்குறள், அசதிக்கோவை, பந்தனந்தாதி முதலியன. ஔவையார் பெயரில் பலர் இருந்துள்ளனர். அவர்கள் வெவ்வேறு காலக்கட்டத்தில் வாழ்ந்துள்ளனர். நீதி நூல்கள் வழங்கிய ஔவை 12 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். அவர் கருத்துகள் ஞானத்தின் பிழிவாக உள்ளது. அவர் சித்தியின் மூலமாகப் பெற்ற ஆன்மீக, ஞானங்களை இலக்கியங்களாக வழங்கியுள்ளது தெள்ளத் தெளிவாகிறது. விநாயகர் அகவல் என்னும் நூல் சித்தர்களின் யோக சாத்திரத்தின் உண்மையை வெளிப்படுத்துகின்ற நூலாகும். சங்க காலத்தில் வாழ்ந்த ஔவையார் பெண்பாற்புலவராக இருப்பினும் பல்வேறு குறுநில மன்னர்களுக்கும், பேரரசர்களுக்கும் சமாதானத் தூதுவராக இருந்துள்ளார். அம்மன்னர்களின் பெருமை, புகழ், குறைகள் முதலியவற்றை எடுத்தியம்புகின்ற பேராற்றல் படைத்தவராக இருந்துள்ளார். அதேவேளையில் அவர்களின் சிறுமைகளையும் இடித்துக் கூறுகின்ற அஞ்சாத நெஞ்சினை உடையவராகவும் விளங்கியுள்ளார். அதனால்தான் அதியமான் கற்ப மருந்து என்று போற்றப் படுகின்ற வாழ்நாளை நீட்டிக்கச் செய்யும் கருநெல்லிக் கனியினை ஔவையாருக்குக் கொடுத்தான். நீண்டகாலம் வாழ்ந்து தமிழ்த்தொண்டும், சமயத்தொண்டும் புரிய வேண்டும் என்று நினைத்தான். ஔவை தம் பாடலில்,

*“பிறப்பினால் பெற்ற பயன் ஆவது எல்லாம்*

*துறப்பதாம் தூநெறிக்கண் சென்று”*[23]

என்று மனிதப் பிறப்பின் பயனையும், தூய நெறியில் நின்று, உலகப் பற்றுக்களைத் துறந்து ஈசனை அடையும் துறவு நெறிப் பாடலாக அமைவது தெளிவாகிறது.

சித்தர் பாடல்களுக்கிணையாக, காலத்தால் அழியாத இளமை பூத்துக் குலுங்கும் பாடல்களை ஔவையார் பாடியுள்ளார். அதன்மூலம் இவரும் ஒரு சித்தர்தான் என்பதையும் அறிய முடிகிறது.

**பட்டினத்தார்**

பட்டினத்தாரைத் துறவறத்தாரும், இல்லறத்தாரும் போற்றிப் புகழுகின்றனர். அவரைத் தாயுமானவர், ‘பட்டினத்துப் பிள்ளைபோல் யார் துறக்க இயலும்’ என்று குறிப்பிடுகிறார். அவருடைய பாடல்கள் துறவறம் மேற்கொள்வதற்கு வழிகாட்டியாக அமைகிறது.

*“மாடுண்டு கன்றுண்டு மக்களுண்டு என்று மகிழ்வதெல்லாம்*

*கேடுண்டு எனும்படி கேட்டுவிட்டோம் இனிக் கேண்மனமே*

*ஓடுண்டு கந்தையுண்டு உள்ள எழுத்து ஐந்தும் ஓதவுண்டு*

*தோடுண்ட கண்டனடியார் நமக்குத் துணையும் உண்டே !”*[24]

என்னும் பாடலில் புற இன்பத்தை விட்டுவிட்டு அகமாகிய உள்ள மகிழ்வுக்குப் பஞ்சாட்சர மந்திரத்தைக் கூறிச் சிவபெருமனைத் தொழுது வணங்குவது வாழ்வின் நெறியெனக் கூறப்பட்டுள்ளது. பட்டினத்தாருக்குத் ‘திருவெண்காடர்’ என்ற பெயரும் உண்டு. பட்டினத்து அடிகளின் துறவுக்கு, இறைவனின் திருவார்த்தையான ‘காதற்ற ஊசியும் வாராது காண் கடைவழிக்கே’ என்ற வாசகம் அடிப்படைக் காரணமாகியது.

அவர் கோயில் நான்மணிமாலை, திருக்கழுமலமும், மணிக்கோவை, திருவேகம்பமுடையார் திருவந்தாதி, திருவொற்றியூர் ஒருபா ஒருபஃது முதலிய நூல்கள் எழுதியுள்ளார். இந்நூல்கள் பதினோராம் திருமுறையில் சேர்க்கப்பட்டுள்ளது. இவரதுகாலம் பத்தாம் நூற்றாண்டு அல்லது பதினோராம் நூற்றாண்டாக இருக்கலாம் என்று கருதப்படுவதாக ஞானக்கோவை நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

இவரது பாடல்களில் நிலையாமை கருத்துகள் மிகுதியாகக் காணப்படுகிறது. மேலும் பெண்ணாசையை வெறுக்கச் செய்யும் பல பாடல்கள் கூறப்பட்டுள்ளன. ஒருமனிதன் ஞானமடைவதற்கு மண், பெண், பொன் ஆகியவை தடையாக இருப்பதையும், இவையாவும் இம் மண்ணுலகில் நிலையற்றவை எனும் கருத்தினையும் அடிப்படையாகக் கொண்டு அமைந்துள்ளது.

*"பிறந்த மண் மீதில் பிணியே குடிகொண்டு பேரின்பத்தை*
*மறந்து சிற் றின்பத்தின் மேல் மயலாகிப் புண் மாதருக்குள்*
*பிறந்துழன் றேதடு மாறிப்பொன் தேடிஅப் பாவையர்க்கீந்து*
*இறந்திடவோ பணித்தாய் இறைவா! கச்சி ஏகம்பனே"*[25]

என்பதன் மூலம் ஆசைகளை ஒழிக்க காஞ்சியில் உறைந்திருக்கும் ஏகம்பநாதரை வேண்டிப் பாடுவது தெளிவாகிறது. மேலும்,

*"முடிசாய்ந்த மன்னரும் மற்று முள்ளோரும் முடிவிலொரு*
*பிடிசாம்பராய் வெந்து மன்னாவதுங்கண்டு பின்னும் இந்த*
*படி சார்ந்த வாழ்வை நினைப்பதல்லால். . . . ."*[26]

என்னும் பாடலில், பிறந்தவர் இறப்பது எண்ணி மனம் நோவது மடமை என வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

பட்டினத்தார் அனைத்துத் துறைப் பாடல்களையும் பாடினார். எனினும், அவர் திருவொற்றியூரில் சமாதி கொள்ளு முன்பு தன் நிலையை,

*"விட்டேன் உலகம் விரும்பேன் இருவினை; வீணருடன்*

*கிட்டேன்; அவர்உரைகேட்டும் இரேன்; மெய்கெடாத நிலை*

*தொட்டேன்; சுகதுக்கம் அற்றுவிட்டேன்; தொல்லைநான் மறைக்கும்*

*எட்டேன் எனும் பரம் என்னிடத்தே வந்து எய்தியதே!"*[27]

என்னும் இப்பாடலில் பிறப்பு இறப்பு அற்ற நிலையை அடைந்ததும் நான்கு வேதங்களுக்கும் எட்டாத பரமன் நிலையை அடைந்ததும் ஆனந்தம் கொண்டதும் விளக்கப்பட்டுள்ளது. இவர் திருவொற்றியூர் கடற்கரையருகே சமாதியில் ஆழ்ந்தார். இன்றும் சமாதி நிலைத்து இருந்து வருகிறது. பத்திரகிரியார் பட்டினத்தாருடைய மாணவர் ஆவார். இவர் ஒரு மன்னருமாவார். பட்டினத்தாரின் ஞான நிலைக்கு அடிபணிந்து அவரைத் தன் ஞான குருவாக ஏற்றவர். இவர் 'மெய்ஞ்ஞானப் புலம்பல்' எனும் பெயரில் முக்திக்கு வித்தாகும் ஞானப் பாடல்களை வழங்கியவர்.

*"மாயத்தை நீக்கி வருவினையைப் பாழாக்கிக்*

*காயத்தை வேறாக்கி காண்பது உனை எக்காலம்!"*[28]

என்று வினவுதல் மூலம் அவருடைய பாடல் அனைத்தும் கேள்வியாக அமைவது விளங்குகிறது. மேலும் அவர் இறைவன் திருவருளாலே குருவுக்கு முன்பே முக்தியடைந்தவர் என்று சித்தர்பாடல் எனும் நூல் குறிப்பிடுகிறது.

**வள்ளலார்**

வள்ளலார் கருணையின் வடிவமாகத் திகழ்ந்தவர். ''உலக மாந்தர்களின் முகத்தில் வாட்டம் கண்ட போது தானும் வாடிய ஞான வள்ளலாவார்.

*'அருட்பெருஞ்சோதி அருட்பெருஞ்ஜோதி*

*தனிப் பெருங் கருணை அருட்பெருஞ்ஜோதி'*

என்னும் மகா மந்திரத்தை மக்களுக்கு அளித்தவர், அதன்மூலம்

பல்லாயிரக்கணக்கான மக்களைச் சன்மார்க்கச் சங்கத்தில் இணையச் செய்தவர். அவர் 'திருவருட்பா' என்னும் வாழ்வியல் நூலை ஆறு திருமுறைகளாக அருளியவர். அதன் வழியாகப் பஞ்ச பூதத்தத்துவத்தையும், மனித உடல் தத்துவத்தையும், ஒளியியல் வகைககளையும், இறைவன் அருட்பெருஞ் சோதியாக இருப்பதையும் எடுத்துக் கூறியவர். மேலும் பாடுபட்டு முயற்சித்தால் சோதியான இறைவனைத் தன்னுள்ளே கண்டு பேரானந்த நிலை எய்தலாம் என்பதை உணர்ந்து கூறியவர். அவர் வடலூரில் சத்திய ஞான சபையினை அமைத்து மேட்டுக்குப்பம் என்னும் ஊரில் சித்தியின் மூலமாக (30.1.1874 அன்று) திருக்காப்பிட்டுக் கொண்டவர்.''[29]

## சிவானந்த பரமஹம்சர்

சிவானந்தபரமஹம்சர் முற்போக்கு வழி நின்ற ஞானிகளுள், கேரள மாநிலத்தின் வடகரையை சேர்ந்தவர். இவர் தமிழகத்தில் பழனியிலும், சேலத்திலும் ஆசிரமங்கள் அமைத்து வாழ்ந்தவர். பாரத மண்ணில் பல்வேறு சமயங்கள், மதங்கள், சாதிகள் ஆச்சாரங்கள் நிலவிய காலத்தில் மனித நேயமே கடவுள் நிலையென உணர்த்தியவர். அதன் வழியாகச் சித்த வித்தையெனும் நெறியைப் போதித்தவர். 'கேரள அனாச்சாரம்' எனும் நூலையும் தந்தவர். ''மூச்சுக்காற்றை முறை செய்வதன் மூலம் சாகாமல் சமாதிநிலை பெறலாம்'' என்று மக்களுக்கு வழி காட்டியவர். ஞானமடைவதில் ஆண் பெண் வேற்றுமை இல்லை என்பதை உணர்த்த அவர் தான் அமைத்த ஆசிரமங்களில் பெண்ணுக்கும் உபதேசம் கொடுத்து ஞான நிலையடைவித்த ஞானத் தந்தையாவார் 'சித்தவேதம்' என்னும் ஞான சித்தாந்த நூலை மக்களுக்கு அளித்து தன்னுணர்வு பெறச் செய்தவர். ஜீவனை அடக்கி 'நிர்விகற்ப' சமாதி நிலை அடைவதற்கு வழி வகுத்தவர்.

*“உள்விளக்கை நீயே ஏற்று வேறு யாராலும் உனக்கு மோட்சத்தை அளிக்க இயலாது. உன்னையே நீ உணர முயற்சிசெய், பிறவித்துன்பம் ஒழிந்துவிடும்,”* [30]

வினைகள் மாயும் என்ற சூட்சுமத்தை நாட்டு மக்களுக்குத் தெளிவித்த ஞானபிதா அவர்கள் **1949** ஆம் ஆண்டு ஜீவசமாதி அடைந்தார். கேரள மாநிலம், வடகரையில் இவரது சமாதி அமைந்துள்ளது.

## நாற்குரவர்களும், ஆழ்வார்களும்

சைவ சமயத்தில் எண்ணற்ற ஞானிகள் தோன்றினார்கள். சேக்கிழார் அறுபத்து மூன்று நாயன்மார்கள் பற்றிக் குறிப்பிடுகிறார். அறுபத்து மூவரும் சிவாகம வழிநின்றவர்கள், அவர்கள் ஆன்மா தம்மையும், தம்மை உடைமைப் பொருளாகக் கொண்டத் தலைவனாகிய சிவபெருமானையும் உணர்ந்தவர்கள். இவர்கள் தவத்தால் தெளிந்த ஞானிகளாவர். இவர்கள் நிலையை,

*“ஞானம் ஏதெனக் கேட்டிடின் தத்துவம்*
*நானென உணர்ந்திந்த*
*ஊனை நானென உரைத்திதை அகன்றுபின்*
*ஒழிவரத் தனைக் கண்டு*
*மானம் வெட்கமும் துக்கமும் கவலையும்*
*வஞ்சனை தான் போக்கி*
*ஈன மற்று நான் சிவமெனத் துணிந்ததும்*
*இழந்ததும் முடிவாமே!”* [31]

என்னும் பாடலில் ஊனாகிய உடம்பில் நான் எனும் சிந்தனை அகல வேண்டும். தானென்னும் அகங்காரம் ஒழிய வேண்டும். மானம், வெட்கம், இன்பம், துன்பம், பொறாமை, வஞ்சம் ஆகியவற்றைப் பொருட்படுத்தக்

கூடாது. மான, ஈனத்துக்கு அப்பாற்பட வேண்டும். நானே சிவமெனத் துணிந்து சிவமாகியவர்கள் தான் ஞானிகள் எனச் 'சிவஞான போதம்' எடுத்துரைக்கிறது.

ஞானிகள் வரிசையில் சைவ நெறி நின்று மக்களுக்கு இறை நிலையைத் தெரிவிக்கப் பெருந்துணையாய் நின்றவர்களுள், கருவிலே திருவிளங்கிய திருஞான சம்பந்தர், அப்பர் என அன்புடன் அழைக்கப்படும் திருநாவுக்கரசர், இறைவனுக்கு நண்பராய் விளங்கிய சுந்தரர், இறைவனால் உபதேசிக்கப்பட்ட மாணிக்கவாசகர் ஆகிய நால்வரும் முக்கியமானவர்கள் ஆவர். இறைவனைத் துதிக்கும் தேவாரப் பாடல்கள் மூலம், ஆன்மிகப் புரட்சியை உண்டாக்கிவர்கள் பசிப்பிணிப் போக்குகின்ற அன்னச் சாலைகள் பல அமைப்பதற்கும், துறவிகள் தங்கி ஆன்மப் பேறடைய சத்திரங்களைக் கட்டுவதற்கும் உறுதுணையாக இருந்தனர். அவர்கள் இறை நிலை அடையும் காலத்தில் தன்னுடன் இருந்த அடியவர்களையும் இறைநிலை அடையச் செய்தவர்கள். மேலும் குருவாகவும், ஞானாசிரியராகவும் விளங்கி முக்திப் பேறடைய வழிவகுத்தனர். அவர்கள் இயற்றியுள்ள தேவாரம், திருவாசகம் ஆகியவை தமிழின் மேன்மைக்கும், வளர்ச்சிக்கும் பெரிதும் துணை நிற்கின்றன. அவர்களின் வழித் தோன்றலாகத் தாயுமானவர், அருணகியார், உலகநாதர், குமரகுருபரர், அபிராமிபட்டர், சேக்கிழார், வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள், சிதம்பர சுவாமிகள், வள்ளலார் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர். இவர்கள் இறைவனுக்குத் தொண்டு செய்வதுடன் தமிழுக்கும் தொண்டாற்றி இறைநிலை அடைந்த ஞானிகளில் முக்கியமானவர்களாவர்.

மேற்கூறியவர்கள் சிவனை வழிபட்டுச் சிவாகமங்கள் வழி நின்ற ஞானிகள் ஆவர். இவர்களைப் போன்று திருமாலை வழிபட்டு வைணவத்திற்குச் சமயத் தொண்டாற்றிய ஆழ்வார்கள் பன்னிருவர் ஆவர். அவர்கள் இயற்றிய நூல்கள் நாலாயிரத் திவ்விய பிரபந்தமாகத் தொகுக்கப்

பட்டுள்ளது. அந்நூல் திருமாலின் பெருமையைப் பேசுவதாகும். அரியும், சிவனும் ஒன்றென சிவவாக்கியச் சித்தர் கூறியிருப்பினும், சைவர்கள் சிவனைக் கடவுளாகவும், வைணவர்கள் திருமாலைக் கடவுளாகவும் கருதினார்கள். ஆழ்வார்கள் பல்லாயிரக்கணக்கான பாசுரங்களை இறைவன்மீது பாடிப் பரவசமடைந்தனர். ஆழ்வார்களில் குறிப்பிடத்தக்கவர் திருப்பாவை நல்கிய ஆண்டாள் எனப் போற்றப்படும் கோதை நாச்சியார் ஆவார். தனது அருள் பாடல்களால் அரங்கனின் திருவடியைச் சேர்ந்ததாகப் புராணங்கள் கூறுகின்றன. ஆண்டாள் பிறந்த திருவில்லிப்புத்தூரும், அவர் நீராடிய கிணறும், நந்தவனமும் இன்றும் உள்ளது என்பதை அறியமுடிகிறது. ஆண்டாளைப் போன்று ஸ்ரீராமானுஜப் பெருமான் திருமாலை வழிபட்டவர் ஆவர். வைணவ விடிவெள்ளியாக மக்கள் நெஞ்சங்களில் இவர் நிலைத்த இடம் பெற்றவர். மக்களுக்கு ஆன்மீக விழிப்புணர்வை ஏற்பத்தியதோடு, தான் பெற்ற இன்பத்தை உலக மக்களும் அடைவதற்கு துணை நின்றார். இவர் தனது குருவாகிய திருக்கோட்டியூர் நம்பியின் வாக்கின் மூலம் "காரேய் கருணை இராமானுஜர்"[32] என்று அழைக்கப்பட்டார். அந்த அளவிற்கு கருணையாளராக விளங்கியுள்ளார். இராமனுஜர் மேலும், 'ஓம் நமோ நாராயணா' எனும் மறைபொருள் மந்திரத்தைக் கோபுரத்தின் மீதேறி ஒலிக்கச்செய்து அனைவருக்கும் முக்திப் பேற்றினை அளித்தவராவார். இவரது காலம் கி.பி. 11ஆம் நூற்றாண்டாகும். இவர் காலத்திலே வாழ்ந்தவர் திருக்கச்சி நம்பிகளாவர் இவர் காஞ்சி வரதராஜ பெருமாளுடன் பேசியதாகவும் செவி வழிச் செய்திகள் மூலம் அறிய முடிகிறது.

இவர்களன்றி பௌத்த துறவிகளும், சமணத் துறவிகளும், இறை தொண்டாற்றியுள்ளனர். குறிப்பாகத் திருக்குறளைத் தந்த திருவள்ளுவரும் சமணத் துறவியாகக் கருதப்படுகின்றார். சிலப்பதிகாரம் நல்கிய இளங்கோவடிகளும், மணிமேகலையின் ஆசிரியர் சீர்த்தலைச்சாத்தனார் ஆகியோரும் சமணத் துறவிகளாகக் கருதப்படுகின்றார். இதனன்றிச்

ஆகமங்கள் பொதுவாக சிவன், விஷ்ணு, சக்தி வழிபாடு பற்றிய நூல்கள், தந்திரங்கள் என்றும் பெயர் பெறும். வைணவ ஆகமங்கள் 108, சிவாகமங்கள் 28, சக்தி ஆகமங்கள் 107 என்பர். "ஆரிய வேத மதக் கோட்பாடுகள் மகாபாரதப் போருக்குப்பின் அழிந்துவிட்டது. இன்றைய இந்தியாவில் இந்துக்களின் சமயமாக இந்து சமயம் நடைமுறையில் இருப்பது வேதங்களில் பெறப்பட்ட வழிபாட்டு முறைகள் அல்ல! மாறாக முழுக்க முழுக்க பண்டைய திராவிட ஆகமங்களின் அடிப்படையில் அமைந்த வழிபாட்டு முறைகள் என்று பி.டி.சீனிவாச அய்யங்கார் குறிப்பிடுவதாக ஆனைவாரி ஆனந்தன் கூறுகிறார்."[28] பல நூற்றாண்டுகளாக வேதங்களும், ஆகமங்களும் இரண்டறக் கலந்து விட்டாலும் அவற்றிற்கிடையே உள்ள ஒற்றுமை எண்ணெயும், நீரும் போல உள்ளது. இன்றைய தலை முறையினருக்கு இந்த வேற்றுமையை உணர முடியவில்லை என்றாலும் வேதங்களிலிருந்து ஆகமங்கள் வெளிவரவில்லை என்பது தெளிவாகியது.

வேதங்களையும், ஆகமங்களையும் விளக்க வேண்டுமெனில், 1. பண்டைய இந்து சமயம் வேதங்களை அடிப்படையாகக் கொண்டது. 2. ஆகமங்கள் சைவம், சாக்தம், வைணவம் ஆகியவற்றைச் சார்ந்ததாகும். இவை சிவன் அல்லது விஷ்ணுவின் திருவாக்காக வெளிப்படுபவை, 3. ஆகமங்கள் சிவன், விஷ்ணு, சக்தி வழிபாட்டு முறைகளையும், யோகப் பயிற்சிகளையும், மருத்துவ முறைகளையும், ஆன்மீக முறைகளையும் விவரிக்கும் விளக்க நூல்கள் ஆகும். ஆகமங்கள் அக்னி (தீ) சார்ந்தவையல்ல, 4. ஆகம வழிபாட்டில் ஒரே முறையில் ஒரே கடவுள் மட்டுமே வணங்கப்படுகிறார். 5. ஆகம வழிபாட்டில் வேத மந்திரங்களுக்கு வேலையில்லை, இங்கு இறைவன் திருநாமம் மட்டும் திரும்பத்திரும்ப கூறப்படும் (உ.ம்) ஓம் நமோ நாராயணாயநம, ஓம் சிவாய நம, ஓம் சரவணபவாய நம, ஆக இறைவனை ஒரு மனித விருந்தினராகவும், ஓர் அரசனாகவும் வரவேற்று அருள்பெறுவதாகும்.

1. வேதங்கள் பிற்காத்தில் ஆகமங்களோடு ஐக்கியமாகி விட்டன.

2. இவை மந்திரங்கள் இயற்றப்பட்ட காலத்திற்குப் பிறகு ஈஸ்வரனால் உபதேசிக்கப்பட்டவை எனக் கருதப்படுகிறது.

3. வேத சம்ஹிதைகள் எல்லாம் வைதிகச் சடங்குகள் செய்யும்போது கூறப்படும் மந்திரங்களே ஆகும்.

4.வேதங்கள் தொடக்கத்தில் கர்ம காண்டம், ஞானகாண்டம் என்றழைக்கப்பட்டன.

5. வைதிகச் சடங்குகள் வேள்வியைச்சார்ந்தவை. ஒவ்வொரு சடங்கிலும் தீ வளர்க்கப்பட்டு அதில் அவிப்பலிகள் கொட்டப்படும். இம்முறையில் தீயில் கொட்டப்பட்டவற்றை யெல்லாம் இறைவன் எடுத்துக் கொள்வதாகக் கருதப்படுகிறது. ஆதலால் மேற்காணும் விளக்கம் மூலமாக ஆகமத்திற்கும் வேதத்திற்குமுள்ள வித்தியாசங்கள் தெளிவாகிறது.

தமிழில் உயிர்ப்பு ஒலிகளான மந்திரங்களை உச்சரிப்பதன் மூலம் மனப்பிணியும், உடல்பிணியும் தீருகின்றன என்று நம்பப்படுகிறது. சைவத்தின் மூலமந்திரமான 'ஓம் நமசிவய' என்னும் பஞ்சாட்சர எழுத்துகளைச் செப்புத் தகடுகளில் மாற்றி, மாற்றி எழுதுவதன் மூலம் அவற்றுக்கு ஆற்றல் கிடைக்கிறது. அதனைக் கோயில் கருவறை மூலவர் சிலைப் பீடங்களில் வைத்து மக்கள் நன்மையடையச் செய்வது இந்து சமயத்தின் முதன்மை பணியாகும்.

ஓம் நமசிவய, ஓம் சரவணபவ, போன்ற மந்திரங்களில் ந,ம,சி,வ,ய என்னும் ஐந்து எழுத்துகளும் சிவனது ஐந்து முகங்கள் ஆகும். ஓம் என்பது பிரணவ எழுத்தாகிறது. ச ர வ ண ப வ என்னும் மந்திரத்திலுள்ள ஆறு எழுத்தக்களும் முருகனின் ஆறு முகங்களாகும். இதேபோன்று 'ஓம் நமோ நாராயணாய நம' என்னும் மந்திரம் திருமாலின் பத்து அவதாரங்கள் எனக் கூறுவதை அறியமுடிகிறது.

நமசிவய என்னும் ஐந்து எழுத்துகள் பஞ்ச பூதங்களோடு தொடர்புடையது. இதனை ஞானிகள் மனித உடம்புடன் தொடர்பு படுத்துவர் நிலம், நீர், தீ, காற்று ஆகாயம் என்னும் பிரிவுகளை முறையே,

காலிலிருந்து இடுப்புவரை நிலமும் (மண்தன்மை)
இடுப்பு முதல் நெஞ்சுவரை நீர்தன்மையும்
நெஞ்சுமுதல் தோள்வரை நெருப்புத்தன்மையும்
தோள்முதல் மூக்கு வரை காற்றுத்தன்மையும்
மூக்கு முதல் மண்டை வரை வான் அல்லது ஆகாயத் தன்மையும் கொண்டுள்ளது என்பர்.

ஓம் என்னும் ஓங்காரத்தின் 'ஓ' வடிவம் தான் எல்லா உயிர்களின் கரு வடிவமாக அமைந்துள்ளதைச் சைவசித்தாந்தம் கூறுகிறது.

## மந்திரங்களின் வகைகள்

மந்திரம் என்பது (மன்+திரம்=மந்திரம்) மனத்தைத் திரமுடையதாக ஆக்குவது ஆகும். அது எந்நிலையிலும் மாயை வசப்படாமல் தியானிப் போரைக் காக்கும். இத்தகைய மந்திரங்கள் மிகத் தொன்மையான காலத்திலிருந்தே தொடர்ந்து வருகிறது இதனைத் தொல்காப்பியம்,

*"நிறைமொழி மாந்தர் ஆணையின் கிளந்த*
*மறை மொழி தானே மந்திரம் என்ப"*[29]

எனக் கூறுகிறது. மேற்கூறிய நூற்பாவின் மூலம் நிறைமொழி மாந்தர்களான சித்தர்கள், ஞானிகளின் மறைமொழியான வேதங்களே மந்திரம் என்பது தெளிவாகிறது. இம்மொழியை அருளாற் கூறினும், வெகுண்டு கூறினும் அவ்வப் பயன்களை உரியவர்களுக்கு அளித்துவிடும்.

இத்தகைய மந்திரங்கள் மூவகையில் கீழ்வருமாறு பாகுபடுத்தப் பட்டுள்ளன.

1. இறைவனை வாழ்த்தி வணங்கும் மந்திரங்கள்
2. மக்களுக்கு ஆக்கம் தருதற்குரிய மந்திரங்கள்
3. எதிரிக்கு கேடுதரும் மந்திரங்கள்.

இவற்றுள் பின்னைய இரண்டும் நல்லோரை வாழ்விக்கவும் தீயோர்களைத் திருத்தி நல்வழி நடக்க செய்யவும் எழுந்தவையாகும். காலப்போக்கில் இது பொருள் கருதியும், பிறபயன்கள் கருதியும் தவறான நெறிகளில் பயன் படுத்தப்படுகிறது.

தமிழில் திருமூலரால் ஆக்கப்பட்ட 'திருமந்திரம்' எனும் நூல் இறைவனை நோக்கி எண்ணுதற்குறியதாகும். மறைபொருள் கூற்றாகக் கூறப்படும் செய்திகள் இதில் அதிகம் காணப்படுகிறது. ஆதலால் இது 'திருமந்திரம்' என்று பெயர் பெற்றது.

**மந்திரத்தின் பயன்கள்**

'நமசிவாய' என்னும் மந்திரத்தைப் ஐந்தோடு ஐந்தாகப் பெருக்கும் போது இருபத்தைந்தாக வரும். இவ்வைந்தெழுத்தில் ஏழு வகைக் தோற்றமும், ஏழு வகைத் தோற்றத்தில் உருவான உலகமும் இதனுள் அடங்கும். இதனால் அறுபத்து நான்கு சித்துக்கள் உண்டாகும்.

ஐந்து எழுத்து ஐம்பத்தோரு எழுத்தாக விரிந்து நிற்கும். ஒவ்வொன்றாக விரித்துச் சொல்ல முடியாது. அதற்கு எல்லை என்பது இல்லை. இதனை,

*"ஆமப்பா அச்சரங்கள் அஞ்சு பின்னை*
*அயம்பத்தோர் அட்சரமாய் விரிந்து நிற்கும்*
*ஓமப்பா ஒவ்வொன்றாய் வழுத்த வென்றால்*
*உரையேது கரையேது உரைப்பாரரோ!*
*-----------------------------------*

*நாமப்பா அறிந்த மட்டுஞ் சொல்வோங் கேளு*

*நாதாக்கள் தவறாமல் பார்த்திட்டாரே!"*[30]

என்று கருவூர்ச்சித்தர் பாடல் கூறுகிறது.

இந்த நமசிவாய அல்லது சிவாயநம ஆகிய மந்திரத்தின் மூலம் யோக சித்தியும், ஆயுளையும் அடைய முடியும். அதே மந்திரத்தால் தேக சித்தியும், மோட்சமும் உண்டாகும். ஆதலால் இந்த மந்திரம் முக்கியமாக பயன்படுத்தப்படுகிறது. செல்வம் பெருகவும், கடலைக் கடக்கவும், வானில் புதுமைக்காணவும், தேவ கன்னிகளை வெற்றி கொள்ளவும் இம்மந்திரத்தைச் சித்தர்கள் பயன் படுத்தியுள்ளனர். எடுத்துக்காட்டாக,

'ஹ்ரீ ஸ்ரீ சிவாய நமா' என்று சொன்னால் ஆறும் அதில் வெள்ளமும் ஓடும் என்றும்,

"சங்சங்ய வாசிநம"[31] என்று சொன்னால்

தண்ணீரிலும் நடக்கலாம் என்றும்

அடுத்து, வானத்தில் உள்ள அற்புதங்களைக் காண வேண்டுமெனில் 'அங்கிஷ அங்கிஷ ஓம்சிவாய நமா' என்றும்

"ஓம் ஓம் டேபுர நமசிவாயம்"[32] என்று கூறும்போது தன்னுள் உள்ள அமிர்தத்தை உண்ணலாம் என்றும் மேலும்,

"ஓம் அங்கிஷ ஊங் சிவாயநம"[33] என்று கூறிடில் நினைத்த இடத்திற்கு மனோ வேகத்தில் அவ்விடம் செல்ல முடியும் என்றவாறு கருவூரார் பதிவு செய்துள்ளார்.

இவ்வாறாக மந்திரங்கள், அதன் விதிமுறைகளை அறிந்து தவத்துடன் இருப்போர்கள் பலன்களை அடைய முடியும் என்பதைச் சித்தர்களின் வழியாக அறியமுடிகிறது.

## அரியும் சிவனும் ஒன்றுதான்

சித்தர்கள் சிவபெருமானையும் திருமாலவனையும் ஒன்றாகவே எண்ணி வழிபட்டுள்ளனர். அரியும் சிவனும் வேறு வேறல்ல! என்பதில் அவர்கள் முழு நம்பிக்கை கொண்டிருந்தனர். கீழ்வரும் சிவவாக்கியர் பாடல் இரண்டும் ஒன்றுதான் என்பதற்கு,

*"ஒன்றுமொன்று மொன்றுமே யுலகனைத்து மொன்றுமே*
*அன்று மின்று மொன்றுமே யனாதியான தொன்றுமே*
*கன்றல் நின்ற செம்பொனைக் களிம்பறுத்து நாட்டினால்*
*அன்று தெய்வ மும்முளே யறிந்ததே சிவாயமே"*[34]

என்பதன் மூலம் உள்ளத்துள் வீற்றிருக்கும் இறைவனாகிய சிவமும், விட்ணுவும் ஒன்றை காணலாகும் என்பதை அறிய முடிகிறது.

மேலும், இவ்வுலகத்தில் பிறந்த உயிர்களனைத்தும் வீடுபேறு அடைய வேண்டுமாயின் இராம நாமத்தைச் செபிப்பதன் மூலம் அடையலாம் என்கிறார் சிவவாக்கியர்,

*"நீடுபாரிலே பிறந்து நேயமான காயந்தான்*
*வீடுவேறி தென்றபோது வேண்டியின்பம் வேண்டுமோ?*
*பாடி நாலு வேதமும் பாரிலே படர்ந்ததோ*
*நாடு ராம ராம ராம ராமமென்ற நாமமே!"*[35]

என்றும்

*"எருதில் ஏறும் ஈசனும் இயங்கு சக்ரத் தானையும்*
*வேறுவேறு பேசுவார் விழ்வர் விண் நரகிலே!"*[36]

என்று இறைவனை வேறுபடுத்திப் பார்ப்போர் நரகத்தில் வீழ்வர் என்றும் அச்சுறுத்துகிறார்.

மேற்கூறியவாறு அரியாகிப திருமால் வேறு அயனாகிய சிவன் வேறு என்று பாகுபடுத்திப் பார்க்காமல் இருவரும் ஒன்றுதான், ஒரேப் பொருள்தான் என்று சிவவாக்கியச் சித்தர் தெளிவுபடுத்தியுள்ளார்.

## ஓரிறைக் கொள்கை

சித்தர்கள் வகுத்த வாழ்வியல் நெறியில் தலையாயது இறைக் கொள்கையாகும். இறைநிலைக் கொள்கையில் பாரத மண்ணில் தோன்றிய சித்தர்கள் மட்டுமின்றி உலகத்தில் தோன்றிய அனைத்துச் சித்தர்களும் ஒரே குரலாக, இறைவன் ஒருவனே! என்று ஏகக் குரலாய் ஒலித்தனர். திருமூலரும் 'ஒன்றே குலம் ஒருவனே தேவனும்' என்று மனித குலம் அனைத்திற்கும் ஒரே தெய்வமென அறிவுறுத்துகிறார்.

அடுத்து மூர்த்திகள் இருவரும் பெரியது சிறியதுமல்லாமல் கருமை, செம்மை, வெண்மையெனும் நிறங்களையும் கடந்து, துரியம் எனும் வெட்ட வெளிக்கு அப்பால் காணுகின்ற அந்த அரிய பொருள் அரியாகிய திருமாலும் அல்ல! அயனாகிய சிவமுமல்ல என்று சிவவாக்கியர் கூறுகிறார்.

> *“அரியுமல்ல வயனுமல்ல வப்புறத்திலப்புறம்*
> *கருமை செம்மை வெண்மையைக் கடந்துநின்ற காரணம்*
> *பெரியதல்ல சிறியதல்ல பற்று மின்கள் பற்றுமின்கள்*
> *துரியமுங் கடந்து நின்ற தூரதூர தூரமே”*! [37]

என்கிறார்.

## தில்லையும் திருவரங்கமும்

மக்கள் மனங்களின் வேறுபட்டு நிற்கும் இறைவனாகிய தில்லைவாணரை 'நடராசர்' என்றும், திருவரங்கநாதரை 'ரெங்கநாதர்' என்றும் இருக்கும் நினைப்பை யொழிக்கக் கீழ்வருமாறு பாடுகிறார்.

*"பங்குகொண்ட சோதியும் பரந்தவஞ் செழுத்துமே*

*சிங்க நாத ஓசையுஞ் சிவாயமல்ல தில்லையே!"* [38]

என்றும். மேலும்

*"இருவரங்கமும் பொருந்தி யென்புருகி நோக்கிலீர்*

*உருவரங்கமாகி நின்ற வுண்மை யொன்றை யோர்கிலீர்*

*கருவரங்கமாகி நின்ற கற்பனை கடந்து பின்*

*திருவரங்க மென்றுநீர் தெளிந்திருக்க வல்லீரே!"* [39]

என்று கூறுவதன் மூலம் தில்லையும், திருவரங்கமும் ஒன்றுதான் என்பதை உணரமுடிகிறது.

மானுடப் பிறப்பைத் தொகுத்துப் பார்த்தால் அனைவரின் பிறப்புக்கும் சுக்கிலம் என்னும் விந்துக் கூறுதான் முக்கியம். எல்லா உயிர்களும் தோன்றுவதற்கு இதுவே காரணமாக அமைகிறது. அதுபோன்று ஒரே பிரம்மத்தினின்றுதான் அனைத்துயிர்களும் தோன்றுகிறது. அதாவது பரமாத்மாவிலிருந்துதான் சீவாத்மா தோன்றுகிறது. இது இவ்வாறிறிருக்க இறைவனை வணங்கும் முறையில் வேறுபாடு கற்பிப்பதைச் சித்தர்கள் மறுக்கின்றனர். இவர்களின் தலையாயக் கொள்கை அன்பு ஒன்றே! அன்புக்கு வேற்றுமையில்லை. இதனால், கடவுளிலும் வேற்றுமையில்லை என்பதைத் திருமூலர்,

*"அன்பு சிவம் இரண்டு என்பர் அறிவிலார்*

*அன்பு சிவமாவது ஆரும் அறிகிலார்*

*அன்பே சிவமாவது ஆரும் அறிந்தபின்*

*அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே!"* [40]

என்று கூறுகிறார்.

இறைவனைப் புறமாகிய வெளியில் காணாமல் அகமாகிய உள்ளத்தில் கண்டனர். அகவழிபாட்டின் மூலம், சீவர்களாகிய (சீவாத்மா) மக்களை நடமாடுங் கோயில்களாகக் கண்டவர்கள் சித்தர்களாவர்.

மனித உடல் தத்துவத்தையும் ஆலயத் தத்துவத்தையும் ஓரிறைத் தத்துவமாக உணர்ந்தனர். புற உலகில் இறைவனைத் தேடியலையாமல் அன்பு கொண்டு நேயமாக வாழ்வதே 'சிவநிலை' என இறைநிலைப் பற்றிச் சித்தர்கள் கருதினர்.

அருவம், உருவம், அருவுருவம் என்றும் மூவகை நிலையைக் கடந்தே இறைவன் முழுமுதற் பொருளாக விளங்குகிறான். அருவம் கட்புலன் ஆகாத உருவம், உருவம் கட்புலனாய்த் திணை, பால், உணரும் செம்மை வாய்ந்தது. அருவுருவம் கட்புலனாகியும் திணை, பால் முதலியவற்றை உணர முடியாத நிலையானது. அரூவுருவ நிலையிலே இறைவனைச் சிவக் கொழுந்தாய் காண்கிற நிலை சித்தர்கள் நிலையாகும். ஆதலால்தான் சித்தர்கள் உருவ வழிபாட்டையும், சாத்திரச் சடங்குகளையும் வெறுத்தார்கள். பரம்பொருள் ஒன்று உண்டென்று கருதிய ஓரிறையாளர்கள் என்றும் அவர்களைக் கூறப்படுகிறது.

ஞானிகளும், சித்தர்களும் தவமியற்றி ஒரு நிலைக்கு வந்த பின்பு ஆனந்த மேலீடாக இறைவனைப் பூரணனாகப் போற்றுகின்றனர். பட்டினத்தடிகளும் அப்பூரணப் பொருளை,

*"உடலுக்குள் நீ நின்று உலாவினதைக் காணாமல்*
*கடல்மலை தோறும் திரிந்து கால் அலுத்தேன் பூரணமே!"*[41]

என்னும் பாடலடியின் மூலம் குறிப்பிடுகிறார்.

ஆதலால் மனித மனம் இறைவன் அந்த மதத்திலா? அல்லது இந்த மதத்திலா? ஆணா? பெண்ணா? புறத்திலா? அகத்திலா? ஒன்றா?

பலவா? என்பது போன்ற ஐயப்பாடுகளை நீக்கி இறைவன் ஒருவனே! என்னும் உறுதியான நிலைக்கு வந்தபின் தன்னுள்ளிலே அப்பொருளைக் கண்டு உணர்ந்து பேரின்பமடைய கொங்கணச்சித்தரும், கீழ்வருமாறு, குறிப்பிடுகிறார்

*"இந்த விதத்திலே தேகத்திலே தெய்வம்*
*இருக்கையில் புத்திக் கறிக்கையினால்*
*சந்தோட வாலையைப் பாராமல் மனிதர்*
*சாகிறதேதடி வாலைப் பெண்ணே!"* [42]

என்று இறைவனைத் தனது உடம்பிலே காணுமாறு தெளிவுறுத்துகின்றார்.

**நபியின் கொள்கை**

முகம்மது நபியின் மார்க்கமான இசுலாமியமும் இறைவன் ஒருவனே என்பதை வலியுறுத்துகிறது. இதனை, "நீங்கள் ஏற்படுத்திக் கொண்ட கடவுளர்களுள் படைப்புக்களை முதன்முறையில் படைத்துப் பின்னர் மறுமுறையும் அவற்றைப் படைக்கக் கூடியவர் எவரும் உள்ளனரா? 'அல்லாஹ் தான் படைப்புக்களை முதன்முறையும், பின் அவற்றை மறுமுறையும் படைக்கிறான்' என்றும்,சத்தியத்தின் பக்கம் வழிகாட்டுகின்ற இறைவனையன்றி ஊகத்தை (உருவ வழிபாட்டை) பின்பற்றிச் சென்று கொண்டிருக்கிறார்கள். ஆனால் ஊகமோ சத்தியத்தின் தேவையை சற்றும் நிறைவேற்றாது என்றும்,மேலும் மக்களே உங்கள் இறைவன் ஒருவன்தான் அவனைத் தவிர வேறு இறைவன் இல்லை"[43] என்றும் உறுதியாகக் கூறுகிறது.

இவ்வாறு அனைத்து ஞானிகளும் இறைவனை ஒருவனாகவே! ஓரிறையாகவே! கண்டுள்ளது தெளிவாகிறது.

## ஒளிநிலையில் இறைவன்

இப்பரந்த பூமியில் செழித்தோங்கும் விஞ்ஞானம் எவ்வளவுதான் கண்டுபிடிப்புகளை மேற்கொண்டிருப்பினும், மனித உடம்பினுள் இயங்குகின்ற பேராற்றலை அளவிட எந்தக் கருவிகளையும் இதுவரை கண்டு பிடிக்க இயல வில்லை என்கின்றனர். அம்மனிதனுக்குள் இயங்கும் ஆன்ம சக்தியையும், அதனால் பெறுகின்ற எண்வகைப் பேறுகளையும் மெய்ஞ் ஞானத்தின் மூலமாகவே உணர்ந்து அறிய முடியும். இந்நிலை எய்திட ஒவ்வொருவரும் தன்னையறிந்த பிறகு தன்னுள் இருக்கின்ற தெய்வ ஆற்றலையறிய இயலும். அதற்குச் சித்தர்கள் கண்டுணர்த்திய பயிற்சிகளை மேற்கொள்ள வேண்டும். ஞானியர்களான சித்தர்கள் பேச்சுகள் எல்லாம் பேசாத பேச்சாக ஊமை மொழியாக, இரகசியங்களை உள்ளடக்கியுள்ளது. அதனால் தான் சிவவாக்கியர்,

> *"ஓடி ஓடி ஓடி ஓடி உட்கலந்த சோதியை*
> *நாடி நாடி நாடி நாடி நாட்களும் கழிந்து போய்*
> *வாடி வாடி வாடி வாடி மாண்டு போன மாந்தர்கள்*
> *கோடி கோடி கோடி கோடி எண்ணிலாத கோடியே!"* [45]

என்னும் பாடலில் ஆன்மிகத் துறைக்கு வந்தவர்கள் அனைவரும் சித்தர்கள் பெற்ற உன்னத நிலையை அடைய முடியாமல் செத்து போனவர்களும் கோடி கணக்காகும் எனத் தெளிவிக்கிறார். இதைப் பாம்பாட்டிச் சித்தர்,

> *"கண்டவர்கள் ஒருக்காலம் விண்டிடார்களே!*
> *விண்டவர்கள் ஒருக்காலம் கண்டிடார்களே*
> ------------------------------
> *கூத்தாடிக் கூத்தாடியே நீ ஆடுபாம்பே!"* [45]

என்னும் பாடலில் ஞானத்தைக் கண்டவர்கள் விண்ணுலகில் செல்வதில்லை

அவ்வாறு விண்ணுலகம் சென்றவர்களால் கூட தேவரகசியங்களைக் காணவும் இயலாது எனப் பாம்பாட்டிச் சித்தர் தெளிவாக்குகிறார்.

சித்தர்கள் இறைவனை ஒளிவடிவாகக் கண்டுணர்ந்தனர். மூலாதாரம் என்னும் புருவ மத்தியில் தோன்றுகின்ற ஞான தீபத்தைச் சோதி வடிவ இறைவனாகக் கண்டனர். தவத்தின் பயனாக யோக சக்தியான குண்டலினிச் சக்தியைக் கீழிருந்து மேலேற்றி அச்சக்தியை வாலைக் குமரியாக, ஒளி வடிவத்தில் கண்டுணர்ந்ததாகக் கருவூர்சித்தர். குறிப்பிடுகிறார்.

*"ஓசைமணிப் பூரமதில் உதிக்கும் வீடு*
*ஓகோகோ அதிசயங்கள் உள்ள வீடு*
*ஆசுகவி மதுரகவி பொழியும் வீடு*
*அவள் அருளும் கூடி விளையாடும் வீடே !"*[46] என்று குறிப்பிடுகின்றார்

என்று ஔவையாரும் தனது வீட்டு நெறிப் பாடலில் இறைவனைத் தன் உடம்பினுள்ளே ஒளியாகக் கண்டுள்ளார்,

*"ஐம்பது மொன்று மழல் போலத் தானோக்கில்*
*உம்பர் ஒளியாய் விடும்"* [47]

என்பதன் மூலம் ஒலி எழுத்துக்களை மந்திரங்களாக எண்ணப்படும், 'நமசிவய' என்னும் பஞ்சாட்சரத்தின் விரிவான ஐம்பத்து ஒரு எழுத்தில் கூறப்படும் (அட்சரங்கள்) சக்திகளை அகக் கருவிகள் மூலம் கனல் மூட்டி ஒளியேற்றி யோக நிலைக்குச் சென்றால் இறைவன் ஒளியாகத் தோன்றுவான் என்பதை மெய்ப்பிக்கின்றார். இவ்வாறு உடம்பிற்குள்ளிருந்து ஒளிரும் ஒளியானது மூலாக்கினி மூலம் சீவான்மாவிற்கு அருளைக் கொடுக்கின்றது அவ்வொளி 'அருள்ஒளி' என கூறப்படுகிறது.

## உயிர்ஒளியும் அருள்ஒளியும்

வள்ளலார் சுவாமிகள் ஞான ஒளியை மூன்றாகப் பிரித்துக் கூறுகிறார். அவை,

1. வெள்ளொளி 2. உயிர்ஒளி 3. உள்ளொளி என்பனவாகும். இதை,

> *“உள்ளொளி ஓங்கிட உயிர்ஒளி விளங்கிட*
> *வெள்ளொளி காட்டிய மெய் அருட் கனலே!”*[48]

என்கிறார். அதாவது அனைத்து உயிர்களிலும், இவ்வொளி வட்டம் (ஆரா) உயிரை இயக்கும் இறைவொளியாகத் தன் அனுபவத்தில் வள்ளலார் கண்டுள்ளதாகத் தெரிகிறது.

**வெள்ஒளி** (வெள்ளொளி) – இது மனிதனுடைய தூல உடலைக் குறிக்கும். உயிர்ஒளி சூட்சும உடலைக் குறிக்கும். **உள்ஒளி** இது காரண உடலைக் குறிக்கும்.

| | | |
|---|---|---|
| வெள்ளொளி | – | கண்ணால் காணப்படுவது |
| உயிர்ஒளி | – | மூளையால் சிந்திக்கப் பயன்படுவது |
| உள்ளொளி | – | பிறஉயிர்களிடம் அன்புகாட்டி நெகிழும் போது உருக்கம் தருகிற ஒளியாகும். இதனை இறையொளி என்பர் |

## ஞானிகள் இறைவனைக் கண்டவிதம்

அருணகிரியார், [illegible]

> *“உருவாய் அருவாய்*
> *உளதாய், இலதாய்*
> *மணியாய் ஒளியாய்”*[49]

என்று திருப்புகழில் முருகப் பெருமானை அழைக்கிறார்.

திருவாசகத்தில் மாணிக்க வாசகர்,

*"விண் நிறைந்து மண்நிறைந்து மிக்காய்*
*விளங்கொளியாய்"*

*"மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே!*

*"ஓராதார் உள்ளத்து ஒளிக்கும் ஒளியானே!"*

*"காக்கும் என் காவலனே காண்பரிய பேரொளியே!"*[50]

என்று இறைவனைப் பல்வேறு ஒளிநிலையில் கண்டுள்ளதாக அன்னை சரளாதேவி குறிப்பிடுகிறார்; தாயுமானசுவாமிகளும்

*"தீதணையா கற்பூர தீபமென நான்கண்ட*
*ஜோதியுடன் ஒன்றித் துரிசறுப்ப தெந்நாளோ!"*[51]

என்று இறைவனைக் கற்பூர தீபமாய்க் கண்டு தன் எண்ணத்தை வெளிப் படுத்துகிறார்.

கருவூர்சித்தரும் தம் பாடலில் சுழிமுனை என்கிற கண்புருவ மத்தியில் ஆன்ம ஒளியாகிய இறைவனைக் காணும் உத்தியை உறுதிபடக் கூறுகிறார், இதனைச் சித்தர்கள் முழுமையாகக் கண்டுணர்ந்ததை,

*"சுழியதற்குள் சுழியிருந்த சூட்சம் சொன்னோம்*
*சொல்லாத மவுனமுதற் கருவும் சொன்னோம்*
*ஒளிபிறக்கு முறுதியிந்த உறுதி சொன்னோம்*
*உற்பனமாய் பார்த்தவர்கள் சித்தர்தாமே!"*[52]

என்று கூறுவதன் மூலம் இறைவன் ஒளி நிலையில் சுழிமுனையில் நிலைத்திருக்கின்றான் என்றும் அவன் ஒளி நிலையில் காட்சிதருவான் என்று கூறுவதையும் உணரமுடிகிறது.

திருநாவுக்கரசு சுவாமிகள் இறைவனை,

*"விறகினில் தீயினன் பாலிற்படு நெய்போல்*
*மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்"*[53]

என்று இறைவனின் பல்வேறு நிலைகளைக் கூறுகிறார்.

இவ்வாறு ஞானிகளும், சித்தர்களுமின்றி, பிற்காலத்தில் ஏற்பட்ட சமரச சுத்த சன்மார்க்கச் சத்திய சங்கம், சித்த வித்தியார்த்திகள் இயக்கம், பிரம்மகுமாரிகள் நிலையம், உலக சமாதான இயக்கம், மெய்வழிச் சாலை ஆண்டவர் இயக்கம் ஆகியவை உருவமில்லா இறைவனை, ஒளிக் கடவுளையே போற்றிவருகிறது.

**அறிய வருவன**

இந்த இயலில் வினைகளைப் பற்றியும், அவ்வினையின் மூலம் உண்டாகும் பிறவி பற்றியும் அறியப்பட்டது. தவ வாழ்வை மேற்கொண்ட வர்களுக்கு வினை நீக்கம் பெற்று விடும். என்பதையும், மனத்தை ஒருநிலைப்படுத்துவதன் மூலம் யோகம் கூடிவரும் என்பதும் வெளிப்படுத்தப்பட்டது. ஆன்ம வேட்கை கொண்ட ஒருவருக்கு குருவின் அவசியமும், அவரைப் போற்றும் விதமும் விளக்கப்பட்டது. ஆன்ம விளக்கத்தால் இறைவனைக் காணமுடியும் என்றும், இறைவனை எப்போதும் தியானிப் பவர்களுக்கு துன்பங்கள் கிடையாது எனவும், வினைகள் நெருங்காது என்றும் அறியப்பட்டது. சமயங்கள் பலவாயினும் சித்தர்கள் சமயங்ளைக் கடந்து நின்று செயலாற்றினர். இறைத்தன்மை பற்றியும் ஆன்ம விளக்கத்தைப் பற்றியும், இறைவன் ஒருவனே என்பதைப் பற்றியும் அறியமுடிந்தது. ஆகம, வேதங்கள், மந்திரங்கள் அதன் தன்மைகள் அறியப்பட்டது. மனத்தை வென்று யோக நிலையில் இருப்பதற்கான சித்தர்களின் எண் விதத் தந்திரங்களான இயமம், நியமம் பற்றி விளக்கப்பட்டு குரு உபதேச முறைகளையும் அறியப்பட்டது. அரியும்,

சிவனும் ஒன்றுதான் என்றும், அந்தத் தெய்வங்களும் உருவத்தில் இல்லை எனவும், ஒளி நிலையிலேயே உள்ளதென்றும் சித்தர்கள் உணர்த்தியதை அறிய முடிந்தது.

உள்ளொளியைப் பற்றியும், உயிர்ஒளி, அருள்ஒளி, வெள்ளொளி ஆகிய சோதி நிலைகளைப் பற்றியும் அந்தச் சோதியினுள் சோதியாக இறைவன் நிறைந்திருப்பதை ஞானிகளும், சித்தர்களும் கூறிய செய்திகளை விரிவாகக் காண முடிந்தது.

இவ்வாறாகச் சித்தர்களும், ஞானிகளும் இறைவனை ஒளிவடிவமாகக் கண்டுணர்ந்து, ஆனந்தமடைந்தனர். அதோடன்றி உருவமில்லாத இறைவனைக் கற்சிலைகளிலும், செப்பு, பித்தளையிலான வடிவத்திலும், மண்சிலைகளிலும் தேடுவதை விடுத்து, ஒளி வழிபாட்டினை மக்களுக்கு வலியுறுத்தியவர்கள் சித்தர்களாவார்கள் என்பதை அறிய முடிகிறது.

## குறிப்புகள்

1. திருமூலர், திருமந்திரம், பா. 1720.
2. மாணிக்க வாசகர், திருவாசகம், பா. 60.
3. திருவள்ளுவர், திருக்குறள், பா. 620.
4. அகப் பேய்ச்சித்தர், சித்தர்பாடல்கள், ப. 129.
5. தாயுமானவர் பாடல், ப. 133.
6. மேற்படி, ப. 134.
7. திருவள்ளுவர், திருக்குறள், பா. 999.
8. அரு.இராமநாதன், ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள், ப. 570.
9. சித்தர்பாடல், தனிப்பாடல்
10. க.நாராயணன், சித்தர் சிவவாக்கியர், ப. 189.
11. திருமூலர், திருமந்திரம், பா. 1680.
12. கொங்கணவர், சித்தர்பாடல், பா. 30.
13. இரகுநாதன். எஸ், புத்தர், ப. 15.
14. சிவானந்த பரமஹம்சர், சித்தவேதம், ப. 29.
15. ஓசோ, தந்திரா ஆன்மிகமும் பாலுணர்வும், ப. 5.
16. திருமூலர், திருமந்திரம், பா. 139.
17. மேற்படி, பா. 531.
18. மேற்படி, பா. 533.
19. மாணிக்கவாசகர், சிவபுராணம்
20. திருமூலர், திருமந்திரம், பா. 2011.
21. மாணிக்கவாசகர், சிவபுராணம் வரி 76

22. பட்டினத்தார், சித்தர் பாடல்கள், பா. 16.

23. திருமூலர், திருமந்திரம், பா. 2548.

24. க.நாராயணன், சித்தர் சிவவாக்கியர், ப. 73.

25. திருமூலர், திருமந்திரம், பா. 1823.

26. மேற்படி, பா. 2958.

27. அகத்தியர், அந்தரங்க தீட்சாவிதி, ப. 11.

28. ஆனைவாரி ஆனந்தன், சித்தமருத்துவ வரலாறு, ப.122.

29. தொல்காப்பியர், தொல்காப்பியம், சூ. 480.

30. கருவூர்சித்தர், சித்தர்பாடல்கள், ப. 159.

31. மேற்படி, பா. 268.

32. மேற்படி, ப. 269.

33. மேற்படி, ப. 270.

34. சிவவாக்கியர், சிவவாக்கியம் ஆயிரம், பா. 301.

35. மேற்படி, பா. 238.

36. மேற்படி, பா. 294.

37. மேற்படி, பா. 392.

38. மேற்படி, பா. 321.

39. மேற்படி, பா. 195.

40. திருமூலர், திருமந்திரம், பா. 270.

41. பட்டினத்தார், சித்தர் பாடல்கள், ப. 220.

42. மேற்படி, பா. 60.

43. நபிகள் நாயகம், திருக்குர்ரான், ப. 423, பத்தி–34.

44. சிவவாக்கியர், சித்தர்பாடல்கள், பா. 720.

45. பாம்பாட்டிச் சித்தர், மேற்படி, பா. 32.

46. கருவூர்சித்தர், மேற்படி, பா. 48.

47. சத்திய நாராயணன், நீதி நூல்கள் ஏழு, பா. 57.

48. சிதம்பரம் இராமலிங்கம், திருஅருட்பா, அகவல், 1539.

49. அருணகிரிநாதர், திருப்புகழ், பா. 50.

50. மாணிக்கவாசகர், திருவாசகம், ப. 29.

51. தாயுமானவர் பாடல்கள், ப. 209.

52. கருவூர்சித்தர், சித்தர்பாடல்கள், பா. 48

53. திருநாவுக்கரசர், தேவாரம், பா. 98.

## இயல் – 5

# மரணமிலாப் பெருவாழ்வும் சமாதி நிலையும்

மனிதனுக்கு வாழ்வாதாரம் உயிராகும். உயிர் பிரிந்தால் இறப்பு நேரிடும். அவ் இறப்பை எவ்வாறு தவிர்க்கலாம் என்பதை இவ்வியலில் எடுத்துரைக்கப்படுகிறது. உயிர் என்னும் சொல்லுக்குச் சீவன் என்று பொருள் உண்டு, சீவன் என்பது சிவமாகும். இச்சிவமாகிய உயிரைக் கண்டறிய மெய்ப்பொருள் விளக்கம் வேண்டும். இந்த 'மெய்' என்னும் பொய்யுடலில் உண்மை எனும் உயிர்ப் பொருளை அறிவதற்குப் பகுத்தறிவாகிய ஏழாம் அறிவு (தேவ அறிவு) வேண்டும். இதுவே பேரறிவு அல்லது 'ஞானம்' எனப்படும்.

உயிர், உடலில் எங்கிருந்து செயல்படுகிறது என்பதை மெய்ஞ்ஞானிகள் அறிந்துள்ளனர். அவ்வுயிரைக் கண்டறிந்து பிறவிப் பயனை அடைந்திட மெய்ஞ்ஞானிகளான சித்தர்கள், ஞானிகள், குருமார்கள் தன்னை நாடிவரும் மனிதர்களுக்கு அறிவுறுத்தினர். அவர்கள் மனிதர்களுக்கு உடலினுள் உயிர்விளங்கும் இடத்தைச் சுட்டிக்காட்டி அதனுடன் மனத்தைத் தொடர்புப்படுத்தி முக்தி அல்லது மோட்சமடைய வழிவகுத்து அருளினார்கள். இவ்வாறு உலகத்தில் பிறந்த மனிதர்கள் தத்தம் நல்வினைக்கு ஏற்றவாறு இறைஞானமும், குருவை நாடலும் ஏற்படுகிறது. அதன்மூலம் தெளிவு, விழிப்பு ஏற்பட்ட, ஞானத் தேடலை உடையவர்களுக்கே உயிர்விளக்கமாகிய, சீவ விளக்கம் கிட்டுகிறது. அச்சீவன் சிவமாகி நிற்றலை 'திருமூலர் தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவனே சிவலிங்கம்' என்று திருமந்திரப் பாடலில் குறிப்பிடுகிறார்.

இவ்வாறுள்ள சீவனின் (உயிரின்) வடிவம் எவ்வளவு என்பதன் திருமூலர் கருத்தை முன் இயலில் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

இவ்வுயிரைக் காண்பதற்கு மெய்ஞ்ஞான குருக்கள் மெய்உபதேசம், திருவடி தீட்சை, பஞ்சாட்சர தீட்சை, வாசியோகம், சன்யாச தீட்சை, சரப் பழக்கம் (பிரணாயாமப் பயிற்சி) ஆகியவற்றை அருளினர்கள். அதன் மூலம் ஆன்மா பரமான்மாவை அடைய அவர்கள் வழி வகுத்தார்கள். கிறித்துவ வேதமான பைபிள் வார்த்தையும் இங்கே குறிப்பிடத்தக்கது.

*"நானே வழியும் சத்தியமும் ஜீவனுமாய் இருக்கிறேன்.*
*என்னாலே யல்லாமல் ஒருவனும் பிதாவிடத்தில் வாரான்"*[1]

என்று மேற்கண்ட (14 : 6) கருத்தினைப்புனித பைபிள் மெய்ப்பிக்கிறது.

திருக்குரானின் தீர்க்க தரிசனத்திலும் இதே கருத்தினைக் கீழ்க்கண்டவாறு தெளிவிக்கிறது

*"அவரே தன் தூதரை நேரான வழியைக் கொண்டும்*
*சத்திய மார்க்கத்தைக் கொண்டும் அனுப்பி அருளினார்"*[2] (48:28)

திருமூலர், சீவனும் சிவனும் வேறுவேறில்லை என்று திருமந்திரத்தில் குறிப்பிடுகிறார்.

*"சீவனென சிவனென்ன வேறில்லை*
*சீவனார் சிவனாரை அறிகிலர்*
*சீவனார் சிவனாரை யறிந்தபின்*
*சீவனார் சிவனாயிட் டிருப்பாரே!"*[3]

என்று இரண்டும் ஒரு நிலையாவதை விளக்குகிறார்.

ஆகையால் உயிரைப் பற்றி அறிவது மனித உடலில் உள்ள கடவுளைப் பற்றி அறிவதாகும் என்பது தெளிவாகிறது. இறைவனைப் பற்றியறிவதற்கு இறைவன் தட்சிணாமூர்த்தி, தானே குருவாகவும், சனகர், சனாதனர்களையும். நாதச்சித்தர்களையும், பதினெண் சித்தர்களையும் உருவாக்கினார். கிருஷ்ணபகவான், ஆதிசங்கரர், ஏசுபிரான், முகம்மது நபிகள், திருமூலர், திருவள்ளுவர், இராமலிங்க வள்ளலார், இராமகிருஷ்ண பாரஹம்சர், சிவானந்த பரமஹம்சர் போன்ற எண்ணில்லாத ஞானிகளை மண்ணுலகிற்குத் தூதர்களாக அனுப்பி உயிர்கள் உய்வு பெறச் செய்துள்ளமையும் தெளிவாகின்றது.

## அல்லல் பிறவி

மனிதப்பிறவி துன்பத்திற்குரியது என்று மாணிக்க வாசகர் வேதனைப்படுகிறார். ஆதலால் பிறவியில் வரும் துன்பங்களை நீக்க இறைவனை வேண்டுகிறார். இறைவனால் மட்டுமே பிறவித் தொடரை அறுக்க முடியும் என்பதை உறுதிபடுத்திட,

*"அல்லல் பிறவி அறுப்பானே"*[4]

என்று கூறுவதன் மூலம் அறியவருகிறது துன்பமாகிய பிறவியை அறுப்பதற்கு முக்திநிலை பெற வேண்டும் என்று சித்தர்கள் வலியுறுத்தினர். யோக மார்க்கத்தின் மூலம் அவர்கள் 'சித்து' நிலை அடைந்தனர். சீவன் முக்தி பெற்றவர்கள் சூக்கும வடிவத்தோடு (ஒளியுடலாக) இறப்பைப் புறந்தள்ளி இறப்பிலா பெருவாழ்வு வாழ்ந்து கொண்டிப்பதாகக் கருதப்படுகிறது. மறு பிறவி என்னும் உயிர்ச் சுழற்சி முறையை நிறுத்திப் பிறவிக்குக் காரண வித்தாகிய வினைகளை அழித்து இறைவன் திருவடியில் நாட்டம் கொண்டவர்கள் சித்தர்கள், ஞானிகளாவர்.

இதனை வள்ளுவரும்,

*"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்*
*இறைவனடி சேரா தார்"*[5]

என்பதன் மூலம் இறைவனுடைய திருவடியைச் சாராதவர்களுக்கு இப் பிறவியாகிய பெருங்கடல் என்றும் துன்பம் விளைவிக்கும் என்பதை மறை பொருளாகத் தெளிவுறுத்துவது விளங்குகிறது. குதம்பைச் சித்தர் பிறவியை நீக்கிடப் பேரறிவாகிய ஞானம் வேண்டுமென்பதை,

*"பிறவியை நீக்கிட பேரின்பம் நோக்கிய*
*அறிவு பெரிதாமடி – குதம்பாய்*
*அறிவு பெரிதாமடி"*[6]

என்னும் பாடலடியின் மூலம் வலியுறுத்துகிறார்.

பிறவிகள் ஏழுவகை என்று கைவல்ய நவநீதம் எனும் நூல் கூறுகிறது அவை தேவர், மனிதர், விலங்குகள், பறவைகள், ஊர்வன, நீர்வாழ்வன, தாவரங்கள் முதலியனவாகும்.

## உடலின் பெருமை

உலகில் உள்ள பிறவிகளில் உயர்ந்த பிறவியாகக் கருதப்படுவது மனிதப் பிறவியாகும். ஔவையாரும் 'மானிடராய் பிறத்தல் அரிது' என்று கூறுகிறார். இந்த உடலை 'பொன்மணி மாளிகை' என்றும் 'நடமாடுங் கோயில்' என்றும் ஞானிகள் பெருமைப் படுத்தியுள்ளார்கள். திருமூலர் இவ்வுடம்பின் பெருமையை

*"உடம்பினை முன்னம் இழுக்கென்றிருந்தேன்*
*உடம்பினுக் குள்ளே யுறுபொருள் கண்டேன்*

*உடம்புளே உத்தமன் கோயில் கொண்டானென்*

*உடம்பினை யானிருந் தோம்பு கின்றேனே!”*[7]

என்னும் பாடலில் காயசித்தி உபாயம் எனும் தலைப்பில் உடம்பைப் போற்றுகின்றார்.

## மனிதத் தோற்றம்

அதிசயத்தக்க உடல் எதிலிருந்து தோன்றியிருக்கும் என்று “மேல் நாட்டு அறிஞர்களான டார்வின்ஸ், மிச்சினிக்காப் போன்றவர்கள் கூறியுள்ளனர். டார்வின்ஸ் ‘‘குரங்கிலிருந்து மனிதன் தோன்றினான் என்றும், மிச்சினிக்காப் குரங்கிலிருந்து மனிதன் தோன்றவில்லை என்றும் இருவேறுபட்ட கருத்துகளைக் கூறியுள்ளார்”[8]. என மனிதன் தோன்றிய விதம் பற்றிக் கூறுவதாகச் சித்தமருத்துவ உடல் தத்துவம் எழுதிய சிவதாணுப்பிள்ளை குறிப்பிடுகிறார்.

## உயிரியல் அறிஞரின் கருத்து

“பூமியில் அறிவியலார் கூற்றுப்படி 3000 மில்லியன் ஆண்டுகளுக்கு முன் உயிரினங்கள் தோன்றின. 500 மில்லியன் ஆண்டுகளுக்கு முன் முதுகெலும்பற்றவை தோன்றின. நிலம் – நீர் வாழ்பவை 325 மில்லியன் ஆண்டுகளுக்கு முன்னரும் 250 மில்லியன் ஆண்டுகளுக்கு முன் ஊர்வனவும், 165 மில்லியன் ஆண்டுகளுக்கு முன் பாலூட்டிகளும் தோன்றின.

மேற்கூறிய யாவும் தோன்றிய பின் பரிணாம வளர்ச்சியின் சிகரமாக இரண்டு மில்லியன் (இருபது இலட்சம்) ஆண்டுகளுக்குமுன் மனிதன் தோன்றியிருக்கின்றான்”[9] என்று உயிரியல் அறிஞர் கூறியிருப்பதாக ஆனைவாரி ஆனந்தன் குறிப்பிடுகிறார்.

## மனிதனின் தோற்றம் பற்றியச் சித்தர்கள் கருத்து

மனிதன் தோற்றம் பற்றிச் சித்தர்கள்வழி ஆராய்ந்து பார்க்கும் போது மண், நீர், நெருப்பு, காற்று, வெளி என்னும் ஐம்பூத கலவையால் மனிதன் உருவாகினான் என்பது விளங்குகிறது. இதனை மெய்ப்பிக்கும் வகையில் திருமூலர் ஞான உபதேசம் பாடல் மூலம், உயிரும் உடலும் உருவானதை விளக்குகிறார்.

*"மண்ணுடன் நீருமருவி யுடலதாய்*
*விண்ணொடு வாய்வு விரும்பியுயிரதாய்*
*திண்டழல் தன்னொடு சேர்ந்து கலந்து நின்*
*றண்டழ லாக லமரும் சிகாரமே!"*[10]

என்பதன் மூலம் மண்ணும் நீரும் சேர்ந்தது உடம்பு என்றும், காற்றும் வெளியும் சேர்ந்தது உயிர் என்றும் இவை இரண்டையும் சேர்த்து வைத்து இயக்குவது நெருப்பு என்றும் விளக்குகிறார். உடலையும், உயிரையும் இயக்குவதற்கு 'நெருப்பு' முக்கியச் செயல்வகிக்கின்றது. நெருப்பை உண்டாக்குகின்ற சக்தி உடலில் எப்பொழுது நின்று விடுகிறதோ அப்போது உயிர் உடலைவிட்டு நீங்கிவிடுகிறது. அவ்வுடலை மண்ணில் புதைத்து சில ஆண்டுகள் சென்றபின் பார்த்தால் எல்லாம் மண்ணோடு சேர்ந்து மண்ணாகிவிடும். உயிர்கள் பலவிதமாய்த் தோன்றுகின்றன அவை மாட்டுச்சாணியிலிருந்து புழுக்களும், கழுதையின் வெட்டையிலிருந்து தேள், வண்ணத்துப்பூச்சி, தம்பலப்பூச்சிகளும், தம்பலப் பூச்சிகளை உலர்த்திப் பொடித்து வைக்கோலினால் மூடித் தண்ணீர் தெளித்துவைத்தால் நூற்றுக்கணக்கான வண்ணத்துப் பூச்சிகளும் உண்டாகி விடுகின்றன. இவை மண்ணும், நீரும், நெருப்பும் சேர்ந்து உருவாதல்போல உலகத்திலுள்ள எழுவகைத் தோற்றம், 84 இலட்சம் சீவராசிகள், உயிர்ப் பிராணிகள், மக்கள் ஆகியவை அனைத்தும் பஞ்சபூதத்திலிருந்து உருவானவை ஆகும்.

இவ்வாறு பஞ்சபூதங்கள் ஒன்றிணைந்து அதன் அடிப்படையிலே மனிதகுலம் தோன்றியது. பஞ்ச பூதங்களையும் அவற்றிற்குரிய தெய்வங்களையும் இம்மனித உடலிலேயே காணலாம் என்பது சித்தர்கள் கண்ட விஞ்ஞானமாகும்.

## மனித உடம்பின் உட்கூறுகள்

மனித உடலானது வெறும் சதைப்பிண்டம் மட்டுமல்லாமல் எலும்பு, தசை, நரம்பு, தோல் ஆகியவற்றையும் கொண்டுள்ளன. அவ்வுடல் சிந்திக்கும் ஆற்றலும், பேசும் திறனும் ஒருங்கே பெற்று மற்ற சீவராசிகளிடமிருந்து வேறுபடுகின்றன. மனித உடலை இயக்குபவை 96 தத்துவங்களாகும். அத் தத்துவங்கள் உடல் முழுவதையும் செயல்படுத்தி இயக்குகிறது. இவ்வுடலானது ஐந்து வகைப்படும். அவை, ''1. பருவுடம்பு, 2. வளியுடம்பு, 3. மனவுடம்பு, 4. அறிவுடம்பு, 5. இன்ப உடம்பு ஆகும். இதனை முறையே 1. அன்னமயக்கோசம், 2. பிராணமயக்கோசம், 3.மனோமயக்கோசம், 4. விஞ்ஞானமயக்கோசம். 5. ஆனந்த மயக்கோசம்''[11] என்று வடநூலார் கூறுவர்.

இவ்வுடலானது தலையிலிருந்து கால்வரையில் ஐந்து பிரிவுகளாக உள்ளன. அதனை ஐம்பூதங்கள் தாங்கி நிற்கின்றன என்பர். அவை முறையே பாதத்திலிருந்து தொப்புள்வரை நீர் என்றும், தொப்புளிலிருந்து மார்புவரை தீ என்றும், மார்பிலிருந்து தோள்வரை காற்று என்றும், கழுத்துக்கு மேல்பகுதியை வான்வெளி என்றும், உடலைத் தாங்கும் பாதத்தை நிலம் என்றும் திருமூலர் குறிப்பிட்டுள்ளார்.

*"உரமடி மேதினி யுந்தியி லப்பாம்*
*விரவிய தன்முலை மேவிக்கீ ழங்கி*
*கருமுலை மீமிசை கைக்கீழ்க் காற்றாம்*
*விரவிய கந்தமேல் வெளியாமே!"*[12]

என்றும் மேலும்,

உடம்போடு கூடிய உயிர் உறைகின்ற இல்லமாகவும், ஆலயமாகவும் உருவகிக்கின்றார் ஆதலால்,

'ஊனுடம்பே ஆலயம்' என்றும் 'படமாடும் கோயில்' என்றும் ஞானிகள் கூறுவதன் வழி அறியலாம். ஔவையாரும் இவ்வுடலில் ஈசனாகிய சிவ பெருமானைக் காண இயலும் என்பதை,

*"மாசற்ற கொள்கை மனத்தில் அடைந்தக்கால்*
*ஈசனைக் காட்டும் உடம்பு"*[13]

என்று கூறுகிறார்.

பஞ்சபூதத்திற்கு அதிதேவதைகளான, பிரம்மா பிருதிவிக்கும் (மண்) விஷ்ணு நீருக்கும், ருத்ரன் நெருப்புக்கும், மகேசன் வாயுவுக்கும் சிவன் ஆகயாத்திற்கும் மூலத் தெய்வங்களாகச் சித்தர்கள் கருதினார்கள். இதனை ஔவையாரும்,

*"மாயன் பிரமனு ருத்திரன் மகேசனோ*
*டாயுஞ் சிவ மூர்த்தி ஐந்து"*[14]

எனவும் ஐந்து மூர்த்திகளைப் பஞ்சபூதங்களுடன் கூறுகிறார்.

பஞ்சபூத சக்திகளைப் பிரணவத்தில் கலக்க வைத்து விட்டால் (சமாதியில் நிலை நிறுத்தினால்) உடலை விட்டு உயிர் போகாது என்பதை ஔவைக் குறள் கூறுகிறது.

*"அஞ்சு மடக்கி யறிவோ டிருந்த பின்*
*துஞ்சுவ தில்லை உடம்பு"*[15]

என்று கூறுவதன் மூலம் அறியலாம். அவ்வாறு நிலை நிறுத்த வில்லையெனில் உயிர் சென்று விடும் எனவும் கூறுகிறார். இவ்வாறான அண்ட பிண்டக் கோட்பாட்டினை உள்ளடக்கிய உடலைப் படைத்த இறைவனிடம் பணிய வேண்டும் என்று குதம்பைச் சித்தர் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்.

*"அண்டமும், பிண்டமும் ஆக்கிய தேவனை*
*தெண்டனிட் டேத்தடி – குதம்பாய்*
*தெண்டனிட் டேத்தடி"*[16]

என்றும் இறைவனை,

*"நீரும் நெருப்பும் நெடுங்காற்றும் வானமும்*
*பாருமாய் நின்றதைக் காண் – குதம்பாய்*
*பாருமாய் நின்றதைக் காண்"*[17]

என்பதன் மூலம் இறைவன் பஞ்சபூதக் கூறாகி நிற்பதைக் குதம்பைச் சித்தர் தெளிவுறுத்துகிறார்.

## தொண்ணூற்றாறு தத்துவங்கள்

மனித உடம்பானது பஞ்சபூதங்களால் நிர்மானிக்கப்பட்டுள்ளது எனினும் பொறி, புலன் முதலிய கரணங்களால் மிக நுண்ணியதாக இயக்கப்பட்டு வருகிறது. இதற்குத் தத்துவங்கள் என்று சித்தர்கள் பெயரிட்டு அழைக்கின்றனர். அதன் விபரத்தினை கீழ்க்கண்டவாறு காணலாம்.

"**1.** பூதங்கள் ஐந்து, **2.** பொறிகள் ஐந்து **3.** புலன்கள் ஐந்து **4.**பொறிச் செயல் ஐந்து **5.** புலன் செயல் ஐந்து **6.** கரணம் நான்கு **7.**உள்ளம் (அறிவு) – ஒன்று **8.** குடல் ஐந்து **9.** உடம்பு ஐந்து **10.**வினைகள்

இரண்டு 11. பண்பு மூன்று 12. பற்று மூன்று 13. இயல்பு மூன்று 14. மண்டலம் மூன்று 15. தூண்டல் எட்டு 16. நிலை ஐந்து 17. ஆதாரம் ஆறு 18. நாடி பத்து 19. காற்று பத்து 20. குற்றம் மூன்று முதலிய 96 தத்துவங்களும் மனிதனின் பிறப்புத் தொடங்கி உடல் இயக்கத்திற்குத் துணைபுரிந்து இறக்கும் வரையிலும் பெரும் பங்கு வகிக்கின்றன."[18]

இவ்வாறு மனித உடல் பல்வேறு தத்துவங்களை உள்ளடக்கி உயிரை நிலைநிறுத்தும் பணியைச் செய்கின்றன. அத்தத்துவங்கள் மெய்யுடம்பைச் சிவமாக்கும் தன்மைக்கும் கொண்டு செல்கின்றன. ஆதலால் உடலை வளர்த்தால் உயிர் வளரும். இவ்வுடல் அழியாமல் காக்க சித்தர்கள் காய கற்பம் முறையைக் கண்டனர்.

## நோய்கள்

ஆதிகால மனிதன் முதற்கொண்டு, விலங்கினங்கள் அனைத்தும் இயற்கையைச் சார்ந்தே வாழ வேண்டி இருந்தது. மனிதனுக்கு இயற்கைச் சீற்றங்களாலும், காடுவாழ் உயிரினங்கள் போன்றவற்றாலும், உண்ணும் பொருட்களில் நஞ்சாகியும் உடலுக்குத் தீங்குகள் நேர்ந்தன. அவன் தன்னைத் தற்காத்துக் கொள்ளவும், நோயின் தாக்கத்திலிருந்து விடுபடவும், முன்னெச்சரிக்கையாகச் செயல்பட வேண்டியிருந்தது. அவற்றில் நோய் என்பது அவனுக்கு நீண்ட நாள் துன்பத்தை உண்டாக்கியது. அதனால் உடல் குன்றும் நிலையை அடைந்து இறப்பிற்கு ஆளாக்கியது. இந்த நோயைச் சித்தர்கள் உடற்பிணி 4448 என்று வகைப்படுத்தியுள்ளனர்.

## நோய் - பிணி - சொல்லாய்வு

தொல்காப்பியம், சங்க இலக்கியம் ஆகியவற்றில் நோய், பிணி என்ற சொற்கள் உடல்நலக்குறைவு என்ற நிலையினைச் சுட்டிக் காட்டப் பயன்படுத்தப்பட்டுள்ளன. நோய், பிணி என்ற சொற்கள் ஒன்றனுக்கு

ஒன்று பதிலியாகப் பயன்படுத்தப்பட்டுள்ளதையும் தொல்காப்பியத்தில் காணமுடிகிறது என்று ஆனைவாரி ஆனந்தன் குறிப்பிடுகிறார். எடுத்துக்காட்டாக,

*‘பையுளும் சிறுமையும் நோயின் பொருள’*

*‘நோயும் இன்பமும் இருவகை நிலையில்’*

*‘அவரவர் உறுபிணி தமபோற் சேர்த்தியும்’*

*‘மூப்பே பிணியே வருத்தம் மென்மையொடு*
*யாப்புற வந்த இளிவரல் நான்கே’*

என்றும், மேலும் சங்க இலக்கியங்களிலும் நோய், பிணி என்ற சொற்கள் உடல், மனத்துன்ப நிலைகளைக் குறிப்பனவாகக் கையாளப்பட்டுள்ளன.”[19]

திருவள்ளுவர் மருந்து எனும் தலைப்பின்கீழ் நோய், பிணி, ஊறுபாடு போன்ற சொற்களைப் பயன்படுத்தியிருக்கின்றார். நோய் என்பது உடலைப் பற்றி மட்டுமின்றி உள்ளத்தைப் பற்றியும் துன்பம் தருவதாகக் குறிப்பிடுகின்றார். ‘நோதல்’ எனும் அடிப்படையில் நோய் உருவாவதை அறியமுடிகிறது. எடுத்துக்காட்டாக,

*‘மிகுனும் குறையினும் நோய் செய்யும்’*

*‘மாறுபாடு இல்லாத உண்டி மறுத்துண்ணின்*
*ஊறுபாடு இல்லை உயிர்க்கு’*

*‘நோய் நாடி நோய் முதல் நாடி’*

*‘உற்றான் அளவும் பிணி அளவும்’* [20]

என்னும் குறட்பாக்கள் நோய், மருத்துவம் சார்ந்தது என்று குறிப்பிடப் பட்டுள்ளன.

*“நோய் எல்லாம் நோய் செய்தார் மேலவாம் நோய் செய்யார்*

*நோயின்மை வேண்டு பவர்”*

என்னும் குறட்பாவில் பிறர்க்குத் துன்பம் செய்தால் துன்பம் செய்தவரைத் துன்பம் சாரும் எனும் கருத்தில் துன்பத்தையே நோய் என்றும் வள்ளுவர் குறிப்பிடுவது தெளிவாகிறது.

மேலும், காமம் வயப்பட்டத் தலைவி தன் கண்களின் மூலம் காம நோயைத் தெரிவித்தலை,

*“பெண்ணினால் பெண்மை உடைத்து என்ப கண்ணினால்*

*காமநோய் சொல்லி இரவு”* [21]

என்னும் குறட்பாவில் தலைவித் தன் தலைவனைப் பிரியாதிருக்க வேண்டும் என்ற குறிப்பு அறிவுறுத்தலாக வள்ளுவர் கூறுகிறார். திருமூலர் நோயினைப் பற்றி,

*“மறுப்பது உடல்நோய் மருந்தென லாகும்.*
*மறுப்பது உளநோய் மருந்தெனச் சாலும்*
*மறுப்பது இனிநோய் வாரா திருக்க*
*மறுப்பது சாவை மருந்தென லாமே!”* [22] (திருமூலர் எண்ணாயிரம்)

என்னும் பாடலில் உடல் நோய், உள்ளநோய் ஆகிய இரண்டுக்கும் மருந்தாகவும், சாவை மறுக்கவும், நோயை மறுக்கவும் தவமே மருந்தெனக் குறிப்பிடுகின்றார். இவ்வாறு நோய், பிணி பற்றிய விளக்கங்களை அறிய முடிகிறது. உயிர் உடலை விட்டுப் பிரிந்தால் மீண்டும் உடலைச் சேராது என்பதைத் தெளிவாக்கத் திருமூலர், உடல் தத்துவங்கள் கெடுவதால் மரணம் ஏற்படும் என்கின்றார். இறப்பு நேர்ந்தவுடன் சீவனாகிய ஆத்மா உடலை விட்டு போவதை,

*“காக்கை கவரிலென் கண்டார் பழிக்கிலென்*

*. . . . . . . .     . . . . . . .     . . . . . . .*

*தோற்பையுள் நின்று தொழிலறச் செய்தூட்டுங்*

*கூத்தன் புறப்பட்டுப் போன இக்கூட்டையே”*[23]

என்னும் பாடலில் சீவன் போவதைத் தெளிவுறுத்துகிறார். மேலும்

*‘ஆண்டாண்டு தோறும் அழுதுபுரண்டாலும்*

*மாண்டார் வருவரோ’*

என்று ஞானிகள் மாண்டவர் மீள்வதில்லை என்னும் கருத்தில் கூறியுள்ளனர். சிவவாக்கியரும்,

“இறந்தவர் பிழைப்பதில்லை, இல்லை இல்லை இல்லையே!”[24] என்று கூறியுள்ளார். மேற்கூறியவற்றிலிருந்து உயிர் உடலை விட்டுப் பிரிந்தால் மீண்டும் அவ்வுடலுக்குள் நுழைய முடியாது என்று உறுதியுடன் திருமூலர், சிவவாக்கியர் பாடல்கள் உணர்த்துகின்றன.

## மன மகிழ்ச்சி

மனிதர்களின் நோய்த்தாக்கத்திற்கு மன இறுக்கம் முக்கியக் காரணமாக அமைகிறது. ‘வாய்விட்டு சிரித்தால் நோய்ப்போகும்’ என்பது முதியோர் வாக்கு, ஆதலால் சிரிப்பு என்பது பலவிதமான நோய்களை நீக்கும் மாமருந்தாகும். ‘அகத்தின் அழகு முகத்தில் தெரியும்’ என்னும் பழமொழிக் கேற்ப, மனமகிழச்சியை, மன வருத்தத்தை முகமானது எடுத்து காட்டும் கண்ணாடியாகும். மனித உடலில் உள்ள அனைத்துத் தசைகளையும் ஒருங்கிணைக்கும் உறுப்பு ‘வாய்’ ஆகும். மனிதன் ‘சிரிப்பதன் மூலம்’ மனதிலுள்ள சுமைகளும், சோர்வுகளும், கவலைகளும் நீங்கி விடுகின்றது. உலகத்தில் உள்ள அனைத்து மக்களும்

நகைச்சுவையை ஒரு மாமருந்தாகவே எண்ணி வாழ்ந்து வருகின்றனர். தமிழர்களின் இயல், இசை நாடகங்களில் நகைச் சுவைப் பகுதி பெரும் பங்கினை வகித்து வருகிறது. “நகையே அழுகை.... மெய்ப்பாடென்ப”[25] என்று தொல்காப்பியம் ‘நகை’ என்று நகைச்சுவையை முதன்மைப் படுத்துகிறது. துன்பம் வருகின்றபோது சிரிக்க வேண்டுமென வள்ளுவரும் ‘இடுக்கண் வருங்கால் நகுக’ என்று கூறுகிறார்.

சிரிப்பதன் மூலம் மனம் மகிழ்ச்சியடைந்து தெளிவாகிறது, மனம் விரிவடைந்து வாட்டத்தைப் போக்குகிறது. நன்றாகச் சிரிப்பவர்கள் என்றும் இளமையுடனும், அழகுடனும் திகழ்வார்கள். சிரிப்பைக் குறைத்துக் கொண்டவர்கள் விரைவில் வயோதிகத் தோற்றத்தை அடைந்துவிடுவர். நன்கு சிரிப்பதன் மூலம் மனித உடலிலுள்ள நாளமில்லாச் சுரப்பிகளும், பிட்யூட்டரி சுரப்பியும் சிறந்த முறையில் செயல்படுகிறது. சிரிக்கும்போது காற்றுப்பை விரிவடைந்து இதன் மூலம் பிராணவாயு கிடைப்பதால் நீண்டகாலம் மனிதன் வாழ முடியும் என்பது அறிவியல் அறிஞர்களின் கருத்தாகு

## நோய் வரக்காரணம்

மனிதனுக்கு நோய்வர அடிப்படைக் காரணமாக அமைவது உடலில் தோன்றும் கிருமிகள் ஆகும். இக்கிருமிகள் உணவைச் சரியாகச் சீரணிக்க விடாமலும், கல்லீரல், நுரையீரல், பெருங்குடல், சிறுகுடல், இரைப்பை ஆகியவற்றைத் தாக்கி மனிதனை நோய்க்கு ஆட்படுத்துகிறது. கிருமிகள் அவர்கள் உண்ணும் உணவுகள் மூலமாகவும், பாலுறவு தொடர்பாகவும்நோயை ஏற்படுத்துகிறது. ஒழுக்க வாழ்வும், நெறியான உணவு முறைகளும் மேற்கொண்டு வாழ்வதன் மூலம் ஓரளவுக்கு இந்த வகையான கிருமித் தாக்கத்திலிருந்து விடுபட முடியும். அடுத்ததாக மனிதனின் நோய்க்கு சமுதாயத்தில் நிலவும் பொருளாதாரப்

பற்றாக்குறை, வறுமை, பாலுறவில் பற்றாக்குறை முதலியவை மூலமாகப் பிறரை நாடும் சூழ்நிலை, கட்டுப்பாடில்லாத வாழ்க்கை முறை, உணவு முறை ஆகியவற்றால் மனிதனுக்கு நோயின் தன்மை வீரியம் பெறுகிறது. அவன் உண்ணும் மருந்துகளும் நோய்க்கேற்றவாறு வீரியம் பெற்றதாக இருக்க வேண்டும். நோய்க்கு ஆட்பட்ட மனிதன் மனத்தளவில் தளர்ச்சி அடைந்து மன அழுத்த நோய்க்கு தள்ளப்படுகின்றான். இதனால் சமுதாயத்தில் ஒதுக்கி வைக்கும் நிலையும் ஏற்படுகிறது. குறிப்பாகத் தொழுநோய், காசநோய், பாலுறவு தொடர்பான நோய்கள், மனநோய் போன்றவற்றைக் குறிப்பிடலாம். இந் நோய்களால் மனிதருக்கு வெறுப்புணர்ச்சியும், அருவருப்புத் தன்மை உண்டாக்குவதும் இதற்குக் காரணமாகும்.

இந்நிலை ஏற்படக் காரணமான மனிதனின் உணர்வுகளுக்கு முதலில் மருத்துவம் தேவை. அவை மருந்தாக மட்டுமே இருக்க வேண்டியதில்லை. அறிவுரைகளாகவும், நீதிபோதனைகளாகவும் இருக்க வேண்டும். உணர்வுகளுக்கு இடந்தராத பண்புகளும், அறிவை முறைபடுத்துகின்ற பக்தியும், கல்வியும், ஆன்மிக உணர்வுகளாலும் இதனை ஓரளவு கட்டுபடுத்த இயலும். ஆதலால் மனிதனுக்கு நோய் ஏற்பட பலகாரணங்கள் இருப்பினும் நல்ல மனநிலை, நற்சிந்தனை, நெறியான வாழ்க்கை முதலியவற்றால் நல்ல வாழ்வையும், நல்ல உடல் கட்டமைப்பையும், செயல்பாடுகளையும் பெறமுடியும் என்பது தெளிவாகிறது.

## மூப்பு

மூப்பு என்னும் சொல் ‘முதுமை’ என்ற பொருள்படுகிறது. மூப்பு என்பது மனிதனுக்கு மட்டுமிலாது உலகில் வாழ்கின்ற அத்தனை சீவராசிகளையும் வந்தடையக் கூடிய ஒன்றாகும். மனிதனைப் பொறுத்தமட்டில் இயற்கையோடு இயைந்த வாழ்வில்லாமல் நாகரிகம் என்ற பெயரில் வாழ்வை அமைத்துக்கொண்டு மனம் போனபோக்கில் வாழ்கின்றான். அதனால் அவனுக்கு முதுமை விரைவில் ஏய்துகிறது.

முதுமையைக் கண்டு மனிதன் வெறுப்பும், துயரமும் அடைகிறான். இறப்பினை எண்ணி ஆறாத்துயரமும் கொள்கிறான். முதுமையை யாரும் விரும்பி வரவேற்பதில்லை. முதுமை ஏற்படுவதற்கு உடலில் ஏற்படுகின்ற தட்ப வெப்ப மாற்றங்கள், நோய்கள், மன வாட்டங்கள், கவலைத்துன்பங்கள், பொருளாதாரச் சீரழிவு ஆகியவை முக்கியக் காரணமாயிருக்கிறது. மேலும் நல்ல உணவும், உடையும், உறையுளும் இல்லாமல் போகும் நிலையினால் உடல்நலமும், மனநலமும் குன்றி விடுகிறது. குடும்பச் சூழலும், பெண்டு, பிள்ளைகளும், சுற்றத்தாரும் காரணிகளாக அமைந்து விடுகின்றனர்.

முதுமைக்கு முக்கியக் காரணம் மனித உடலில் இருக்கின்ற உயிர்ச்செல்கள் அழிவது, உணவு நஞ்சாகி உடல் உறுப்புகள் சிதைவு ஏற்படுதல், உடலின் கழிவுகள் சரியான முறையில் வெளியேறாமல் இருத்தல், உள்ளுறுப்புகள், வெளியுறுப்புகள் முதலியவை வலிமைக் குன்றிப் போதல், தலைமுடி நரைத்தல் முதலியவற்றால் மூப்பு எனும் முதுமைத் தன்மை ஏற்பட மேற்சொன்னவை அடிப்படைக் காரணங்களாகிறது.

இந்த முதுமைக்குக் காரணங்களாக மருத்துவ இயல் நூல்களும், உளவியல் நூல்களும் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறது.

1. அதிகச் சத்துள்ள உணவு உண்பதன் மூலம் இதயத்திற்கு வலுவூட்டப்படுகிறது. சத்துள்ள உணவின் மூலம் ஆயுள் விருத்தி ஏற்படுகிறது. மிதமிஞ்சிய உணவுகள் முதுமைத் தோற்றத்தை ஏற்படுத்துவதுடன் இதயம், இரைப்பை ஆகியவற்றில் கெடுதலை உண்டாக்குகிறது.

2. மாமிச உணவு உடலில் அதிகமான கொழுப்புத் தன்மையை உருவாக்கி மாரடைப்பு, இதயத்தில் கோளாறு, எளிதில் செரியாத நிலைமை, அசீரணம், ஊளைச்சதைப் போன்றவற்றை உருவாக்குகின்றது. சீரான உடல் வளர்ச்சிக்கு மரக்கறி உணவான ‘சாத்வீக’ உணவு இன்றியமையாததாகும்.

3. புகைபிடித்தல், மது அருந்துதல் போன்றவற்றினால் ஏற்படுகின்ற நச்சுப் பொருட்கள் மூலம் நுரையீரல், இரத்தக் குழாய்கள் ஆகியவை பாதிப்பு அடைகின்றது. இதனால் உயிரணுக்களில் பிராணவாயு சேராமல் தடுத்து உடல் பாதிக்கப்பட்டு முதுமை நிலை அடைகிறது.

4. மனக்கவலை ஒரு மனிதனுக்கு விரைவிலேயே முதுமையை கொண்டுவந்து விடுகிறது. இடைவிடாத கவலையினால் உடம்பினுள் இரத்த ஓட்டம் பாதிக்கப்பட்டு, இதயம் சீரற்ற நிலையில் சென்று நாடித்துடிப்பை அதிகரிக்க, அல்லது குறைக்கச் செய்கிறது. இந்த மன நிலையில் உள்ள மனிதர்கள் மற்றவருடன் கருத்துப் பரிமாறிக் கொள்ளுதல், பழகுதல், சிரித்து மகிழ்தல் முதலிய செயல்கள் இன்மையால் உடல் மெலிந்து, வலிமைக்குன்றி, முகம்வெளுத்து முதுமைத் தோற்றம் அடைகின்றனர்.

5. கடும் உழைப்பு அல்லது உழைப்பிற்கேற்ற உணவு கிடைக்காமை போன்றவற்றாலும், அதிகப்படியான உணவு உண்டு சதாகாலமும் உறக்கத்தில் இருப்பதாலும் உடல் நலத்திற்குக் கேடுவிளைவிக்கும்.

இதனால் மூளைச் சோர்வை ஏற்படுத்தி உறக்கமின்மைக்கு ஆளாக நேரிடும் நன்கு உறக்கமில்லாத நிலையால் முகத்தில் சுருக்கத்தையும் வயோதிகத் தன்மையையும் ஏற்படுத்தும்.

### இறப்பு - ஓர் விளக்கம் (சாக்காடு)

இறப்பு என்பது ஒரு மனிதனின் வாழ்வுப் பயணத்தை முடிவுக்கு கொண்டுவரும் நிகழ்வாகும். இதற்கு சாவு, எமன், மறலி, கூற்றுவன், காலன் என்னும் பெயர்களும் உண்டு. வயது முக்கியமன்று, எந்த வயதிலும்

மரணம் நிகழக்கூடிய ஒன்றாகும். மரணத்தைப் பற்றித் திருக்குறளில் நிலையாமை என்னும் அதிகாரத்தில் பேசப்பட்டாலும், உயிரானது இவ்வுடலை விட்டு எவ்வாறு பிரிகிறது என்பதை,

*"குடம்பை தனித்து ஒழியப் புள் பறந் தற்றே*
*உடம்போடு உயிரிடை நட்பு"*[26]

என்னும் குறட்பாவில் இந்த உயிர் உடலோடு நட்பு கொண்டிருந்ததை உயிரைப் பறவையாகவும், சிதைவுக்கு உட்பட்ட உடலைப் பறவையின் கூடாகவும் உவமையாகக் வள்ளுவர் கூறுகிறார். எனவே இந்த உடல் நிலைத்தால் உயிர் நிலைக்கும் இல்லையெனில் மரணம் ஏற்படும் என்பது தெளிவாகிறது.

**இறப்பு - பலநோக்குகள்**

இறப்பு என்பது ஒரு தனிமனித அனுபவம், பிறரால் உணர இயலாத ஒன்றாகும். "மரணத்தின்போது உடலில் திடீரென ஏற்படும் பௌதீக இரசாயன மாற்றங்கள் வலியையும், வேதனையையும் ஏற்படுத்தி மரணிக்கும் நிலையை உருவாக்குகிறது. மருத்துவ நோக்கில் கூறும்போது மரண வேதனை என்பது பல்வலியைக் காட்டிலும் குறைவானதென்றும் மரணத்தின் போது மத்திய நரம்பு மண்டலம் பிராணவாயு நீங்கி, கரியமில வாயுவால் சூழப்பட்டு வேதியல் மாற்றங்கள் ஏற்படுவதால் மயக்க உணர்வே மிகுத்திருந்து அம்மயக்க உணர்விலே உயிர் பிரிந்து மரணம் நிகழ்கிறது. உளவியல் நோக்கில் காணும்போது, மனிதன் தன் வாழ்நாளில் செய்த தவறுகட்கும், தீய செயல்கட்கும் என்னென்ன தண்டனைகள் இறைவனால் கிடைக்குமோ என்றெண்ணி இறப்பின்போது அஞ்சுகிறான் இதுவே மரண வேதனை"[27] என்று உளவியல் அறிஞர் கருதுவதாக க.நாராயணன் கூறுகிறார். ஆன்மிக நோக்கில் இறப்பைக் காணும்போது மரணத்தை தவிர்க்க இயலுமெனச் சித்தர்களும்,

ஞானிகளும் கூறியுள்ளனர். அவர்கள் இறப்பை வென்று வாழ முடியு மெனப் பல்வேறு ஆய்வுகளுக்கு இவ்வுடலை வேதியல் மாற்றம் செய்தனர். காய கற்பம், முப்பு ஆகியவற்றினால் உடலை நிலைபெறச் செய்து பல நூற்றாண்டுகள்வரை சித்தர்கள் வாழ்ந்து நிலைத்ததை அவர்களின் பாடல்கள் மூலம் உணர முடிகிறது.

*"சாவாது இருந்திடப் பால்கற சிரம்*
*தன்னில் இருந்திடும் பால்கற;*
*வேவாது இருந்திடப் பால்கற – வெறு*
*வெட்ட வெளிக்குள்ளே பால்கற"*[28]

என்னும் இடைக்காட்டுச் சித்தர் பாடலி சாகாமல் இருப்பதற்கு தலைக்குள்ளிருக்கும் அமுதத் தாரணை மூலம் கிடைக்கும் அமுதத்தை உண்டு உயிர் போகாமல் செய்வதைக் கூறுகின்றது. சாகாத்தலை, வேகாக்கால், போகாப்புனல் என்பன மூன்றும் சாகாக் கல்வியைத் தெரிவிக்கும் யோக அனுபவங்களாகும். இங்கு இடைக்காடர் உடலைச் சுடலையில் வைத்துச் சுடாத நிலைக்கு உயிரையும் உடலையும் விடாமல் பாதுகாக்க மதியமுதமாகிய 'அமுதப்பாலை' உண்ணுமாறு வேண்டுவதும் சிந்திக்கத் தக்கதாகும்.

மேலும் பாம்பாட்டிச்சித்தர், உடலை விட்டு உயிர் நீங்காதவாறு பார்த்துக்கொள்ள கீழ்வருமாறு குறிப்பிடுகிறார்.

*"ஆறுகலைக் குச்சுக்குள்ளே ஆடும் ஒருவன்*
*அயல் வீடு போகுமுன்னே அரண் கோலிக் கொள்ளு!*
*வேறுபட்டால் அவன் தனை மீட்டல் அரிதே;*
*மேவி முன் னேவிடாது கொண்டு ஆடுபாம்பே!"*[29]

என்று கூறுவதன் மூலம் உயிர் உடலைவிட்டு நீங்காமல் காக்க வேண்டும் என்னும் கருத்தில் பாடுவது தெளிவாகிறது.

இறப்பை எவ்வாறு தவிர்க்கலாம் என்பதற்கு ஞானிகளும் சித்தர்களும் பல்வேறு யூகங்களைக் கூறியிருக்கின்றனர். வள்ளலார் இவ் இறப்பைப் போக்கும் வழி முறை நான்கு வகை யெனக் கூறியுள்ளார். அவை,

1. ஆகாரம், 2. தூக்கம், 3. மைதுனம், 4. பயம் ஆகிய நான்கும் மரணத்திற்கு அடிப்படைக் காரணமாகக் குறிப்பிடுகிறார். அதன் விளக்கத்தைக் கீழவருமாறு விவரிக்கப்படுகிறது.

ஆகாரம் :– உண்ணும் உணவு பாதியாக இருக்கவேண்டும் அரைவயிறு உணவும், கால்வயிறு காற்றும், கால்வயிறு நீரும் சிறந்தது.

'சோற்றிலே விருப்பம் சூழ்ந்திடில் ஒருவர்தவம் ஆற்றில் கரைத்த புளியெனப் போகும்' என்பது விளக்கமாகும்.

தூக்கம் :– ஒரு நாளைக்கு மூன்று மணி நேரம் உறக்கம் கொள்வது நன்மைதரும் இரவு பன்னிரண்டு மணிமுதல் மூன்று மணிவரை அதாவது எட்டுமணிக்கு 1 மணி வீதம் மூன்று மணிநேரம் உறக்கம் வேண்டும்.

'*தூக்கமெனும் கடைப் பயலே சோம்பேறி*' என்றும்,

*'தூங்காத தூக்கத்தில் தூக்கிய பாதம்*
*துரியத்தில் ஊன்றித் துலங்கிய பாதம்'* என்றும்,

சோம்பேறித்தனம் குடி கொண்டுவிட்டால் இறைவனை அடைவது கடினம் என்று வள்ளலார் கூறுகின்றார்.

மைதுனம்:– உலகினுள்ள மனிதர்கள் அடிக்கடி காம இச்சை மேலீட்டால் உடல் உறவு கொள்வதைக் கட்டுப்படுத்த வேண்டும். அதாவது கணவன் மனைவி இருவரும் 16 நாட்களுக்கு

ஒருமுறை புணருதல் உத்தமாகக் கருதப்படுகிறது. இது ஞானிகளுக்குப் பொருந்தாது, அக்கிரம உடலுறவு இறப்பை ஏற்படுத்தும். 'விந்து விட்டான் நொந்து கெட்டான்' என்பது சித்த மருத்துவப் பழமொழியாகும்.

'மருவுப் பெண்ணாசையை மறக்கவே வேண்டும்' என்று வள்ளலார் கூறுகிறார்.

பயம் :– ''மனிதர்களுக்குப் பயம் என்பது பூச்சியமாக இருக்க வேண்டும். அதாவது எதைப்பற்றியும் பயம் கொள்ளக் கூடாது. அதற்காக ஆணவமாகவும் திரியலாகாது. பயம் மனிதனைக் கொன்று விடும் ஆயுதமாகும்.

*"பயமெனுமோர் கொடும்பாவிப் பயலே நீ இதுகேள்*

---------------------------------

*அயலிடை நேர்ந் தோடுக நீ யென்னையறி யாயோ*
*அம்பலத்தென் னப்பனருள் நம்புபிள்ளை நானே!"*

என்று இறைவன் என்னருகில் இருப்பதால் இறப்பு பயம் ஏதும் இல்லை என்கிறார் வள்ளலார்''[30] இதனையின்றி யோக, தியான முறைகளைக் கையாண்டு குருவின் மூலமாக ஆன்மீக அறிவுரைகளைத் தெளிந்து, மூலிகைக் கற்பங்களை உண்டு, பிராண வாயுவைப் பேணி, குருவைப் போற்றி வந்தால் மரணப்பிணி என்னும் சாவை தள்ளிப் போடலாம் என்பது வள்ளலாரின் கருத்தாகும். திருமூலரும் 'மறுப்பது சாவை மருந்தெனலாமே' என்னும் பாடலடியில் சாவை மறுப்பதே மருந்தென தெளிவுறுத்துவதை முந்தியத் தலைப்பில் அறியப்பட்டது.

அழியக் கூடிய இந்த உடலானது அழியாத பண்பினைத் தனது கருவில் சுமந்து நிற்கிறது. உடல் என்பது துன்பப் பெட்டகம் என்று

கருதப்பட வேண்டியதில்லை. அது மனிதனின் இறுதி விடுதலைக்கான கருவி ஆகும். மேலும் சாவாதிருக்கச் சில வழிகளாக இரசவாதமுறை, குண்டலினி யோகமுறை, உல்டா சாதனை முறை என்னும் தலைக்கீழ்ப் பயிற்சி முறை ஆகியவற்றை மேற்கொள்வதனாலும் இறப்பைத் தள்ளிப் போடலாம். மேற்கூறியவாறு சித்தர்களும் ஞானிகளும் அழியக்கூடிய இவ்வுடலை அழியாமல் பாதுகாத்து, உடலை ஓம்புதல்மூலம் உயிரை நிலைக்கச் செய்தனர், பஞ்ச பூதத் தத்துவத்தின் கோட்பாட்டை உணர்ந்து அதன் செய்கைகளுக்கு ஏற்றவாறு உடலைக் காயக்கற்பம் செய்து சித்தர்கள் சாவை வென்றனர் என்பதை அறியமுடிகிறது.

## சித்தர்களின் சாகாக்கலை

சாகாக்கலை என்பது சித்தர்களின் வாழ்வியல் நெறிகளில் தலையானதாகும். மரணத்திலிருந்து தங்களை விடுவித்துக் கொள்ளவும், நீண்ட நாள் நிலைத்து வாழும் முறைகளையும் உணர்த்துவதாகும். இந்தச் சாகாக்கலையைக் கற்பிக்கும் கல்வி ஆன்ம கல்வியாகும். சித்தர்கள் மனித உடலுடன் கூடிய ஆன்மாவை இழக்காமல் அது எப்போதும் இறைவனிடம் இணைந்திருந்து பணிபுரியும்படிச் செய்யும் உபாயத்தைத் தெரிந்து கொள்ளும் கலை சித்தர்களின் 'சாகாக்கலை' எனப்படும்.

சித்தர்கள் "இறைவனின் சின்மய வடிவத்தைத் தனதனுபவத்தில் கண்டுற்று அருள் ஞானம் பெற்றனர். அந்தப் பேரின்ப அருள் அனுபவத்தைக் கண்டு சாகாக் கலையில் வெற்றியும் கண்டனர். 'சாகாக்கலை' என்னும் காயகல்ப முறையானது என்றும் இளமையுடன் இருப்பதற்கான வழிமுறையைக் கூறுவது. உடம்பிலுள்ள இரத்த ஓட்டம் தடைபடாமல், தசைகள் சுருக்கமடையாமல், நரம்புகள் தளர்ச்சியடையாமல் எலும்புகளின் உறுதித்தன்மை மாறாமல் வைத்திருப்பதாகும்"[31] சாகாக் கலையில் வெற்றி பெற்ற சித்தர்களில் காகபுசுண்டர், அகத்தியர், திருமூலர், போகர், கொங்கணவர், காலாங்கி நாதர் போன்றவர்களைக் குறிப்பிடலாம்.

## முப்பு

சித்தர்களின் சாகாக்கலைக்குப் பெரிதும் துணையாக நின்ற பொருள் 'முப்பு' என்னும் கற்ப மருந்தாகும். இதற்கு உடலை அழிவிலிருந்து காப்பாற்றி அழிந்த அணுக்களைப் புதுப்பிக்கும் ஆற்றல் உடையது.

## முப்புவின் வேறு பெயர்கள்

முப்பு என்னும் பொருள் சித்தர்களின் வழக்கு முறையில் பல்வேறாக இருப்பினும் இதனைப் பொதுவாகச் சிவமுப்பு என்றும் சக்தி முப்பு என்றும் அழைக்கப்படுகிறது. அண்டக்கல், சுத்தகங்கை, அமுரி போன்ற பெயர்களிலும் பொதுவாக அழைக்கப்படுகிறது. இந்தாலும் இதைக் கீழ்வரும் பெயர்களில் சித்தர்கள் பலர் வழங்கியுள்ளனர். "சிங்கம், வெள்ளைச்சாரை, சிறு நாகம், பட்சிராசன், சத்துருகாலன், ஆதியுப்பு, சத்தியுப்பு, வழலையுப்பு, நாதவுப்பு என்றும் வாலை, ஓங்காரம், அமிர்தம், செந்தேன், ஏகமூலி, வழலை, அண்டபிண்டம், ஆதிஅந்தம், மூலப்புளி, கல்லுப்பு, குருவண்டு, கொடிமூலம், கன்னிப்பெண், வாலைப்பெண், ஞானப் பெண் போன்ற அடைமொழிகளாலும் முப்பு என்னும் சொல் அழைக்கப்படுகிறது."[32]

## முப்புவின் வகைகள்

முப்புவை வைத்திய முப்பு, வாதமுப்பு, யோகமுப்பு, ஞானமுப்பு என்று நான்கு வகைப்படுத்துவர். ஒன்றைவிட ஒன்று மேலானது என்ற நிலையில் இவ்வகைப்பாடு அமைந்துள்ளது. அதாவது வைத்திய முப்பை விட வாத முப்பு கூடுதல் பலன்தரும். வைத்திய முப்பு மருந்துகளின் வீரியத் தன்மைக்கு உதவுகிறது. வாத முப்பு தாழ்ந்த உலோகங்களை உயர்ந்த உலோகமாக மாற்றும் இரசவாதக் கலையில் பயன்படுகிறது. வாத முப்புவை விட யோக முப்பு சிறந்தது இது யோகிகளை இயற்கைச் சீற்றங்களிலிருந்து பாதுகாக்கிறது. இதைவிடவும் ஞான முப்பு கூடுதல்

பலனை அளிக்கவல்லது. இது இறந்த உயிர்களை உயிர்ப்பிக்கச் செய்யவும், உடலை பஞ்ச பூதங்களோடு பிரித்து மீண்டும் ஒன்று சேர்க்கவும் பயன்படுகிறது. இதுவே மனிதனின் பிறவாத நிலைக்கு இட்டுச் செல்லும் முப்பு மருந்து என்னும் 'கல்பமுப்பு' ஆகும். முப்பு என்பது மூன்று உப்புக்களின் கூட்டாகும். அவை கல்லுப்பு, அண்டக்கல், பூ நீறு என்பன. இதுவே குருமருந்தாகும். இரவியுப்பு, மதியுப்பு, கல்லுப்பு என்ற மூன்றின் கூட்டும் முப்பாகும். இதனை.

*'எண்ணவே வானத் திடியினில் ஒன்று*
*பொன்னெனப் பூத்த பூமியில் ஒன்று*
*கண்ணிய மான கடலினில் ஒன்று*
*முன்னவர் சொன்ன முப்புஇம் முன்றே'*

என்பதை அறியமுடிகிறது. மேற்கூறிய முன்றும் விண், மண், கடல் ஆகிய மூவிடங்களில் உருவாவதாகும். இதனை வாதஉப்பு, பித்தஉப்பு, கபஉப்பு என்றும் சித்தர்கள் பிரித்தாள்வார்கள் என்று தட்சிணா மூர்த்தி குருமுகம் எனும் நூல் கூறுகிறது. இம்முப்பு பற்றி மேனாட்டார்கள் ஆய்ந்து இதற்கு 'ஞானிக்கல்' (PHILOSOPHER'S STONES) என்றும் கற்ப முப்பு (ELIXIR OF LIFE) என்றும் பெயர்களையும் சூட்டியுள்ளனர்.''[33]

### முப்புவின் ஆற்றல்

முறையாகச் செய்யப்பட்ட முப்பு கற்பமருந்தை ஓர் ஊசி முனையில் தொட்டு வாழைப்பழத்தில் குத்தி வைத்துச் சிறிது நேரம் கழித்துப் பார்த்தால் பழம் காயாகி விடும். பழத்திற்குக் காயினது தன்மை ஏற்படுவது போல் வயதான முதியவரும் இம்முப்புக் கற்பத்தை உண்டால் இளமைத் தோற்றம் பெற்றுவிடுவர். தொடர்ந்து உண்டுவரின் மரணமில்லாமல் வாழமுடியும் என்று போகர் கற்பம் 300 எனும் நூல் கூறுகிறது. மேலும் 'இறந்து போனவரின் மூக்கில் முப்பு மருந்தைப் பாலில்

கலக்கி விட்டால் உடலானது உயிர் பெறும். அந்த உயிர்பெற்றவரிடம் எதை வேண்டுமானாலும் கேட்டுக் கொள்ளலாம்' என்பதை அகத்தியர் இலக்க சௌமியம் கூறுவதாக மகாலட்சுமி கூறுகிறார்."[34]

## காயகற்பம் அல்லது தேகவேதியல்

திருமூலர், திருவள்ளுவர், ஔவையார், சிவவாக்கியர், போகர், அகத்தியர், கொங்கணர், வள்ளலார் போன்றவர்கள் காய கற்பத்தின் மூலம் வாழ்நாளை நீடிக்கச் செய்யும் வழிகளை உணர்த்திச் சென்றுள்ளனர். பலருக்குக் 'காயகற்பம்' என்பது உண்மையா? என்ற குழப்பங்களும், தவிப்புகளும் ஏற்படுவது உண்மை, எனினும் சித்தர்கள் அதைத் தம் அனுபவத்தின் மூலம் கண்டறிந்ததைப் பாடல்களில் விளக்கியுள்ளனர்.

## அறிவியல் நோக்கு

உலக முழுவதிலுமுள்ள அனைத்து மனிதர்கள் உடம்பில் சராசரியாக உடல்வெப்பம் 98.3$^{0}$F என்று தெர்மா மீட்டர் மூலம் நவீன அறிவியல் கண்டுபிடித்துள்ளது. இந்த உடல் சூடு எந்த இடத்திலிருந்து கொண்டு உடம்பின் சீரான இரத்த ஓட்டத்தை இயக்குவிக்கிறது என்பதை விளக்கம் செய்ய இயலவில்லை. 'மனித உடம்புக்குள் பாஸ்பரஸ் என்னும் ஒளிரும் தன்மை கொண்ட பொருள் இருக்கிறது, 'பாஸ்பரஸ்' இல்லாமல் எண்ணங்கள் தோன்றாது. தசைகள் சக்தியைச் சேகரிக்க முடியாது. எல்லா உயிர்களுக்கும் பாஸ்பரஸ் இன்றியமையாதது. பாஸ்பரஸ் எவ்வாறு ஒளிர்கிறது எனில் பாஸ்பரஸ்மேல் பாஸ்பரஸ் ஆவி சூழ்ந்துள்ளது. இந்த ஆவியே சக்தியை வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறது. சக்தியை வெளிப்படுத்தும்போது ஆக்ஸீகரணம் அடைகிறது. அப்போது பாஸ்பரஸ் அணுக்கள் ஒளிர்கிறது. ஆதலால் இந்தத் தன்மை உடம்பில் இருந்து குறையாதபடி பார்த்துக் கொண்டனர் ஞானிகள். இந்த ஒளிநிலையை ஔவையார்,

*‘சந்திரனுள்ளே தழலுற நோக்கினால்*

*சுந்தரமாகும் உடம்பு எனினும்*

*உந்தியினுள்ளே பொங்கச் சுடர் பாய்ச்சில்*

*அந்தி அழலுருவாம்’*

என்னும் பாடலில் உடம்பின் ஒளிநிலைப் பற்றிக் கூறியுள்ளார்.

சித்தமருத்துவத்திலும், நவீன மருத்துவத்திலும், அணுவிஞ்ஞான முறைகளிலும் கந்தகம், இரசம், பாஸ்பரம் ஆகிய மூன்றையும் மிக முக்கியமாகக் கையாண்டுள்ளனர். சித்தர்கள் இரசவாதத்திற்கும் உடல் மாற்றத்திற்கும் கந்தகத்தைப் பெரிதும் தேர்ந்தெடுத்தனர். மேலும் ‘சுண்ணம்’ என்று கூறுவது பாஸ்பரஸ் என்னும் பொருளையே ஆகும். இப்பொருள் மஞ்சளோடு சேர்ந்து சிவப்பதையே ஆக்ஸீகரணம் எனப்படுகிறது. கடுங்காரச் சுண்ணம் என்பது கால்சியம் என்னும் சுண்ணாம்புச் சத்தாகும். பாஸ்பரஸைப் பஞ்ச பூதங்களான நெருப்பு, காற்று, ஆகாயம் ஆகிய மூன்றிலிருந்துதான் பெறமுடியும். இம் மூன்றும் உடலை அழியாமல் காக்கும் காயகற்பத்திற்கு முதன்மையானதாகும். அருவுருவமான நெருப்பு, காற்று, ஆகாயம் ஆகிய மூன்றும், உடலையும், உலகத்தையும் ஆளுகின்றன.

இவ்வுலகில் ஹைட்ரஜன், நைட்ரஜன், ஆக்ஸிஜன் ஆகிய அணுக்கள் இயங்கிக் கொண்டிருப்பதை அறிய முடிவதில்லை. ஆகாய வெளி முழுவதும் எலக்ட்ரான், புரோட்டான், நியூட்ரான் ஆகியவை சுழன்று கொண்டிருகின்றன. இதற்கெல்லாம் இடங்கொடுப்பது ஆகாயமாகும் இதனை இயக்குவது காற்றாகும்,வேதியல் புரியச் செய்வது நெருப்பாகும்.

அணுக்களின் விஞ்ஞானத்தைச் சித்தர்கள் நன்கு புரிந்து கொண்டனர். எந்த மூலிகையில் என்னென்ன தாதுக்கள் அடங்கியுள்ளன என்றும், எந்த உலோகங்களில் எப்பொருள் நிறைந்துள்ளது என்றும் தன்

ஞானத்தின் மூலம் உணர்ந்துள்ளனர். அப்பொருளின் தன்மை அறிந்து கொண்டு உடலுக்கு ஏற்றவாறு கற்பமாக்கி உண்டனர். அதன் மூலம் உடலைக்கற்ப தேகமாக்கிக் கொண்டனர். தேகவேதியல் மருந்தை உண்டவுடன் உடலின் ஒவ்வொரு அணுவிலும் பரவுகின்றது. அம் மருந்து உடலில் இறந்த அணுக்களை உயிர்ப்பெறச் செய்கிறது. அவ்வாறு பரவி மாற்றத்தை ஏற்படுத்துவதன் மூலம் உடலுக்கு நீண்ட ஆயுளை அளிக்கிறது. வியாதிகளால் தாக்க முடியாதவாறு அழியாத உடலைப் பெறுவது தேக வேதியலின் செயலாகும். இதனைச் செய்ய வல்லது சித்த மருத்துவத்தின் தலையாய மருந்துகளான இரசமும், கந்தகமும் ஆகும்.

காயகற்பம் சாப்பிட விரும்புபவர்கள் உடலையும், உள்ளத்தையும் தூய்மையாக்கிக் கொள்ள வேண்டும். தன்னை இயம, நியமத்திற்கு உட்படுத்துதல், உணவில் புளி, காரம், உப்பு ஆகியவற்றையும், மது, மாமிசம், புகை, பெண்போகம் ஆகியவற்றையும் நீக்குதல் வேண்டும். தூயவாழ்வு வாழ்தல் வேண்டும். வஞ்சம், சூது, பொறாமை, களவு ஆகியவற்றை நீக்குதல் வேண்டும். துறவு வாழ்க்கை மேற்கொள்பவருக்கு இந்தக் காயகற்பம் பலிதமாகும் இதற்குக் குரு மிகமிக அவசியம்.

**சாகாக்கால் - வேகாத்தலை - போகாப்புனல்**

சாகாக்கால் (வாசி) என்பது உடலில் நித்தியமாய் ஓடிக் கொண்டிருக்கும் வாசியாகும். இது சீவனை நிலை நிறுத்தும். இதனைச் சாகாத்தலை என்றும் 'ஞானம்' என்றும் வேறு பெயர்களில் அழைக்கப் படுகின்றன. சாகாக்கால் என்பதை நித்தியமான கடவுள் அறிவு என்றும் கூறுவர். இந்த சாகாக்காலின் அருள் ஞானம் பெற்றதை நித்திய ஜீவ நிலை அடைதல் என்பர். இந்நித்திய ஜீவநிலையே வேகாக்கால் என்றழைக்கப்படுகிறது. மேற்கூறிய நிலையடைந்தவர்களின் உடலில் நிலையான உயிர் ஆற்றல் செயல்படத் தொடங்கும். அதனால் மூளையில்

அமுதம் சுரக்கும். அதன் வழியாக உடலில் அசுத்தம் நீங்கிச் சுத்த நிலையான நித்தியத் தன்மை ஏற்படுகின்றது. உடலை அழியாதிருக்கச் செய்யும் அருளமுதமே 'போகாப்புனல்' என்று கூறப்படுகிறது. இந்த நிலை அடைந்த இராமலிங்க அடிகள் அனுபவப் பாடலாக,

*"சாகாத தலையிது வேகாத காலாம்*
*தரம்இது காண்எனத் தயவுசெய் துரைத்தே*
*போகாத புனலையும் தெரிவித்தென் உளத்தே*
*பொற்புறம் அமர்ந்ததோர் அற்புதச் சுடரே!"* [35]

என்னும் பாடலில் சாகாத தலையையும், வேகாத காலையும், போகாத புனலையும் தெரிவித்து உள்ளமதில் நிறைந்து விளங்கும் சோதியாகிய இறைவனைப் போற்றிப் பாடியுள்ளதை அறியமுடிகிறது.

மேற்கூறிய மூன்று நிலையின் அனுபவத்தைப் பெற்றுச் சாகா நிலையடைந்து நித்திய சீவன்களாய் வாழ்ந்து வரும் சித்தர்கள் மரணத்தை வென்றவர்களாவர்.

**பஞ்சீகரணம் (பஞ்ச பூதங்கள்)**

பிருதிவி, அப்பு, தேயு, வாயு, வெளி என்னும் ஆகாயம் ஆகிய ஐந்து பூதங்களும் இறைவனால் உருவாக்கப்பட்டது. பூதன் என்றால் ஆன்மா என்ற பொருளுமுண்டு. சித்தர்கள் ஆன்மாவினால் உடலில் உள்ள பஞ்ச பூதங்களைச் சரி செய்தனர். அதனால் அவர்கள் உடலில் உள்ள குற்றங்களைப் போக்கிப் பேரின்ப நிலையை அடைந்தனர். பஞ்ச பூதங்களால் ஒன்றிணைந்த உடலை பிரித்துச் சேர்க்கும் கலையிலும் வல்லவர்களாகச் சித்தர்கள் விளங்கினர்.

"மனித உடலானது பிருதிவி பாகம் ஒன்றறைப் பங்கும், அப்பு பாகம் ஒன்றேகால் பங்கும், தேயு பாகம் ஒரு பங்கும், வாயுபாகம் முக்கால் பங்கும், ஆகாய பாகம் அரைப் பங்கும் ஆகிய ஐம்பூதக் கூட்டுறவால்

இயங்கிக் கொண்டிருக்கிறது. இந்தக் கலப்பு விகிதத்தில் பிருதிவியாகிய மண் பாகம் குறைந்தால் உடலில் மடிப்புகள் (சுருக்கம்) ஏற்படுகின்றன. உடலில் அப்புவாகிய நீர் பாகம் குறைந்தால் சீக்கிரமாய் நரை உண்டாகும். தேயுவாகிய அக்கினி பாகம் குறைந்தால் பசியும், உடல்சூடும் குறையும். வாயுவாகிய காற்று பாகம் குறைந்தால் உடலில் நடுக்கம் ஏற்படும். ஆகாயபாகம் குறைந்தால் நினைப்பும், மறப்பும் இல்லாமல் போகும்.''[36] மேற்கூறியவை உடலின் பஞ்சீகரண விதியாகும்.

உடலில் தோன்றும் பஞ்சபூத ஏற்றத் தாழ்வுகளைச் சரிசெய்து கொள்ளும் முயற்சியே காயகற்பம் உண்ணும் முறையாகும். பஞ்சபூத உலோகம் பஞ்சபூத பாடாணம், பஞ்சபூத உப்பு முதலியவற்றை செய்து உண்டு வாழ்வை வென்றனர் சித்தர்கள். அவர்களைச் சார்ந்த மக்களுக்கும் பற்பம், செந்தூரம், சுண்ணம் போன்ற மருந்துகளை அளித்து கடுமையான நோய்களையும் நீக்கி வந்தனர். உடம்பைக் கற்பமாக்க பஞ்சீகரண மூலிகைகளையும் கண்டு பிடித்தனர். அதன் மூலம் பயனடைந்தனர். ஔவையும் விநாயகர் அகவல் பாடலில், கற்ப மருந்துகளை உண்டால் வரும் நன்மைகளைக் கீழ்வருமாறு குறிப்பிடுகிறார்.

*“வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம் மாமலராள்*
*நோக்குண்டாம் மேனிநுடங்காது பூக்கொண்டு*
*துப்பார் திருமேனி தும்பிக்கையான் பாதம்*
*தப்பாமல் சார்வார் தமக்கே!”*[37]

என்பதன் மூலம் வினைகளை நீக்கவும், பிறவியை நிறுத்தவும் கற்பம் பயன்படுவதாகக் குறிப்பிட்டுள்ளதை அறியமுடிகிறது. துளசி, குப்பைமேனி, தும்பை, கையான் என்கின்ற கரிசாலை, பாதம் என்னும் சிறு செருப்படை, பூ என்னும் செந்தாமரைப்பூ, துப்பு என்னும் பசு நெய் ஆகிய அனைத்தையும் சேர்த்து உண்ணுதல் ஒரு கற்ப மருந்தாக ஔவையார் பாடுவதை

அறியமுடிகிறது. பாம்பாட்டிச் சித்தர் கற்ப மருந்தின் பெருமையைக் கீழ்வருமாறுக் கூறுகிறார்.

*“காலமென்னும் கொடிதான கடும்பகையை*
*கற்பமென்னும் வாளினாற் கடிந்து விட்டோம்*
*சாலப்பிறப் பிறப்பினை நாம்கடந்தோம்*
*தற்பரம் கண்டோ மென்றாடாய் பாம்பே!”* [38]

என்று கூறுவதன் மூலம் சித்தர்கள் காலத்தை வென்று வாழ்தலுக்குக் கற்பமருந்து பயன்பட்டதையும் பிறப்பு, இறப்பற்ற நிலைகளைக் கடந்து தனக்குள்ளே பரம்பொருளைக் கண்டு பேரானந்தம் அடைந்ததையும் அறியமுடிகிறது. வாழ்நாளை நீட்டிக்கும் ‘கற்பம்’ என்னும் மாமருந்தினை இளமையில் தவமிருந்து உண்ணல் வேண்டும். வயதாகி உடல் நெகிழ்ச்சித் தன்மையடையுங் காலத்தில் உண்டும் பயனில்லை என்னும் கருத்தில் கீழ்வரும் பாடல் குறிப்பிடுகிறது.

*‘காலங்கழிந்து காயம் நெகிழ்ந்து காற்றுமிழந்து*
*தோலும் துருத்தியும் நாடி நரம்பும் துவண்டபின்பு*
*சாலவும் கற்பம் சாராது சார்ந்தும் சத்திலை காண்*
*வாலிப மெய்திடுங் காலத்தில் கற்பம் வசப்படுமே’*

என்பதன் மூலம் வாலிபப் பருவந்தொட்டுக் கற்பமுண்ண வேண்டும் என்றும், வயது முதிர்ந்து கற்பமுண்ணுவதில் பலனில்லை எனவும் கூறுவது தெளிவாகிறது.

## கற்பம் உண்ணுவதின் பயன்கள்

கற்ப மருந்தை உண்ணுவதன் மூலம் உடலானது அழியாமல் காக்கவும், இறைவனைக் காணவும் எனக் கீழ்க்காணும் பாடலில்,

*'கற்பத்தை யுண்டால் காயமழியாது*

*கற்பத்தினாலே காணலாம் கைலையை*

*கற்பத்தினாலே காணலாம் சோதியை*

*கற்பத்தினாலே காலையுங் கட்டிடே !'*

என்று கற்பம் உண்ணுதலால் உடம்பின்னுள்ளே சோதியாகிய இறைக் காட்சிகளைக் காணமுடியும் எனவும், உயிர்க் காற்று வெளியில் செல்லாமல் இயங்கி உயிரை நிலைக்கச் செய்யும் என்று கூறுவதன்மூலம் தெளிவாகிறது. மேலும் இம்மருந்து உண்ணுவதன் மூலம் உடற்பிணிகள், உயிர்ப்பிணிகள் அனைத்தும் நீங்கும். இருவினைகளும் சேராமல் சித்தர்கள் வாழ்ந்ததை இதன்மூலம் அறியமுடிகிறது.

## பஞ்சபூதங்களும் - தன்மைகளும்

1. பிருதிவி – (மண்) – எலும்பு, தோல், தசை, மயிர், நாடி முதலிய உடல் உறுப்புகள்
2. அப்பு – (நீர்) – குருதி, கொழுப்பு, சுக்கிலம், சிறுநீர், மூளை முதலிய உடல் உறுப்புகள்
3. தேயு – (நெருப்பு) – இறுமாப்பு, சோம்பல், மைதுனம், அச்சம், துக்கம் முதலிய செயல்பாடுகளை உடையது.
4. வாயு – (காற்று) – ஓடல், இருத்தல், நடத்தல், கிடத்தல், நிற்றல் முதலிய உடல் செய்கைகளைக் கொண்டது.
5. வெளி – (ஆகாயம்)– ஆசை, பகை, மோகம், மதம், வஞ்சனை முதலிய தன்மைகளை உடையது.

மேற்கூறப்பட்ட பஞ்சபூதங்களின் தனித்த செயல்கள் உடலில் ஒன்றோடு ஒன்று இணைந்து செயல்படும்.

## மண் (பிருதிவி)

மண், பொன் நிறத்தைக் கொண்டதாகும். இம்மண்ணிற்கு வேனல் கட்டிகளையும், இரணங்களையும், வாதப் பொருமலையும் நீக்கும்

குணம் உடையது. மேலும் இம் மண் நான்கு கோணமுடைய சக்கரத்தைப் போன்று பிரம்மனுக்கு இருப்பிடமாய் இருக்கிறது என்பதையும் 'ந' என்ற மூல எழுத்தை பெற்றுள்ளது என்பதையும் சைவ சித்தாந்தம் கூறுகிறது.

மண்ணானது மனித உடலில் வாதம் என்கிற நாடியின் ஆதாரமாக விளங்குகிறது.

"மண்ணில் மண் – எலும்பு
மண்ணில் நீர் – மாமிசம்
மண்ணில் தீ – தோல்
மண்ணில் காற்று – நரம்பு
மண்ணில் ஆகாயம் – மயிர்"[39]

போன்ற புறக் காரணங்கள் பெற்றுள்ளன. இதற்கு ஆதாரமாக இறைவன் உறைகின்ற தலமாகக் காஞ்சிபுரம் விளங்குகிறது.

**நீர் (அப்பு)**

இதன் நிறம் படிக நிறம் நீரினால் சுக்கில விருத்தி உண்டாகும். பற்களுக்கு உறுதியுண்டாகும். கண்காசம், பித்தமேகம், உடல்சூடு, பித்தகுன்மம், வெட்டு காயங்களிலிருந்து வரும் குருதி, சொறி, சிரங்கு ஆகியன குணமாகும். இது உடலில் மூன்றாம் பிறை வடிவமாகச் சக்கரத்தைப் பெற்றுள்ளது. இது மகாவிட்ணுவின் இருப்பிடமாகும் இது 'ம' எனும் மூல எழுத்தையுடையது.

இது குளிர்ச்சி, மென்மை, தோய்ந்து போதல், தளர்ந்து பெருகுதல், நனைந்து கசிதல் போன்ற கூறுபாட்டை உடையது. மனத்தின் கண் ஆனந்தம் உண்டாக்கும். சிதறிக் கிடப்பதை ஒன்று கூட்டும் என்பதுவும் இதன் செயலாகும். இது மனித உடலில் சிலேத்துமம் என்னும் நாடியின் கூறாய் விளங்குகிறது.

நீரில் நீர் – சிறு நீர்

நீரில் மண் – உமிழ் நீர்

நீரில் தீ – வியர்வை

நீரில் வாயு – குருதி (இரத்தம்)

நீரில் ஆகாயம் – சுக்கிலம் (விந்து)

போன்ற கூறுபாட்டை உடையதாகும். இதற்கு இறைவன் உறையும் தலமாகத் திருவானைக் காவல் (திருச்சி) விளங்குகிறது.

**நெருப்பு (தேயு)**

இதன் நிறம் செந்நிறமாகும். நெருப்பினால் கண்டைக்கால் என்கிற சிறு தொடையில் ஏற்படுகின்ற நோயும், உடற்கடுப்பும், காந்தலும், கண்ணெரிச்சலும், நீர்ச்சுருக்குப் போன்ற நோய்களையும் ஏற்படுத்தும் இதன் தொழில் உலர்தல் தன்மையனவாகும்.

இது உடலில் முக்கோணம் என்னும் உடல் சக்கரத்தைப் பெறுகின்றது. மேலும் உருத்திரன் இருப்பிடம் 'சி' என்ற மூல எழுத்தையுடையது உப்பு சுவையுள்ளது. வெம்மை, வறட்சியுண்டாக்கல் இதன் செய்கைகளாகும்.

"நெருப்பில் நெருப்பு – தூக்கம்

நெருப்பில் மண் – பசி

நெருப்பில் நீர் – தாகம்

நெருப்பில் காற்று – ஆலசியம்(தாமதம், சோம்பேறித்தனம்)

நெருப்பில் ஆகாயம் – சேர்க்கை"[50] (இணை விழைவு)

ஆகிய குணப்பண்புகளை ஏற்படுத்தும். இது நாடித்தத்துவத்தில் பித்தக் கூறாகும். இதனில் காணும் இறைவனின் தலம் திருவண்ணாமலை (அண்ணாமலை) ஆகும்.

### 4. காற்று (வாயு - நிறம்-நீலம்)

காற்றின் தன்மை அதன் அளவில் குறையும்போது உடலில் நோய் உண்டாகும். அதாவது குறிகளில் (பிறப்புறுப்புகளில்) கடுப்பு காணும். மேக விரணம், உடற்தளர்ச்சி, வீக்கம், வலி வேதனைகள் மிகும். உடல் பருத்துச் சோர்வையும், மந்த நிலையையும் உருவாக்கும். இது மகேசுவரனுக்கு இருப்பிடமாய் இருந்து 'வ' என்ற மூல எழுத்தை உடையதாகும். இதன் சுவை புளிப்புச் சுவையாகும். இது மனவாட்டம், உடல் வாட்டத்தை ஏற்படுத்தக் கூடியது.

| | | |
|---|---|---|
| வாயுவில் வாயு | – | ஓடல் |
| வாயுவில் மண் | – | படுத்தல் |
| வாயுவில் நீர் | – | நடத்தல் |
| வாயுவில் காற்று | – | உட்காருதல் |
| வாயுவில் ஆகாயம் | – | தாண்டுதல் |

போன்ற கூறுகளைப் பெற்றுள்ளன. இதன் இறைவன் உறையும் தலமாக திருக்காளத்தி கூறப்படுகிறது.

### 5. ஆகாயம் (வெட்டவெளி - நிறம்-புகை)

ஆகாயத்தின் தன்மை எல்லா உயிரினங்களுக்கும் அடிப்படையான உணவுகளும், பலவகைப்பட்ட மருந்துகளும், மழையும், அண்டங்களையும், கோள்களையும் பெற்றுள்ளது. இது மேற்கூறப்பட்ட நான்கு பூதங்களையும் உள்ளடக்கியது.

இது வட்டமான உடற்சக்கரத்தைப் பெற்று சதாசிவனைத் தன்னிடத்தில் பெற்றுள்ளது.

நுட்பம், தெளிவு, துணிவுத் தன்மையை உண்டாக்குதல், தோலை உடைய பாகங்களில் அடைவது என்பது இதன் செயலாகும். சுவையில் இனிப்புத்தன்மை பெற்றுள்ளது.

| | | |
|---|---|---|
| ஆகாயத்தில் ஆகாயம் | – | மோகம் |
| ஆகாயத்தில் பூமி | – | இராகம் |
| ஆகாயத்தில் நீர் | – | வெறுப்பு |
| ஆகாயத்தில் காற்று | – | நாணம் |
| ஆகாயத்தில் நெருப்பு | – | பயம் |

ஆகிய மனத்தின் வெளிப்பாடுகளை உள்ளடக்கியது. இதன் இருப்பிடம் தலைக்கு மேலுள்ள பாகம். இது உடலில் சக்கரமாக அமைந்த நிலை 'ய' ஆகும். இதன் தலம் சிதம்பரம் ஆகும். ஆக இந்த முறை வரிசையில் பஞ்ச பூதங்களும், அதற்கு உரிய அட்சரங்களாகிய 'நமசிவய' எனும் பஞ்சாட்சரங்களும் உடலாகிய பிண்டத்தில் உள்ளது; இதன்மூலம் பிரணவமான ஓங்காரத்தை எட்டித் தன்னைத்தானே உணரும் நிலையெய்தலாம் என்பது ஞானிகளின் அனுபவமாகும்.

*'அண்டத்திலுள்ளதே பிண்டத்தில்'*

எனும் வார்த்தைக்கிணங்க,

*'அண்டமும் பிண்டமும் ஒன்றே*
*அறிந்துதான் பார்க்கும் போதே!'*

என்று சட்டை முனி கூறுகின்றார் இந்த ஐம்பெரும் பூதத் தத்துவமாகிய மண்ணிலேதான் தாவரச் சங்கம உருவங்களும் பிரபஞ்சம் அனைத்தும் உருவாகின்றன.

## தசவித நாடிகளும் - செயல்படும் இடங்களும் -(முக்கிய நாடிகள்)

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | இடகலை | – | இடதுபக்க நரம்பில் மூச்சு | |
| 2. | பிங்கலை | – | வலதுபக்க நரம்பில் மூச்சு | வாதத்தில் |
| 3. | சுழுமுனை | – | நடுவில் உள்ள நரம்பில் மூச்சு | |

| | | |
|---|---|---|
| 4. சிங்குவை – உள்நாக்கு நரம்பில் மூச்சு | | |
| 5. புருடன் – வலக்கண் நரம்பில் மூச்சு | | பித்தத்தில் |
| 6. காந்தாரி – இடக்கண் நரம்பில் மூச்சு | | |
| 7. அத்தி – வரிச்செவி நரம்பில் முச்சு | | |
| 8. அலம்புடை – இடச்செவி நரம்பில் மூச்சு | | கபம் எனும் |
| 9. சங்கினி – கருவாய் நரம்பில் மூச்சு | | சிலேத்துமத்தில் |
| 10. குரு – மலவாய் நரம்பில் மூச்சு"[40] | | |

## ஞானிகளின் ஒடுக்க நிலை (தவநிலை)

ஞானிகள் உணவு பிராணவாயு ஆகும். அவர்கள் பசித்தன்மை நீங்கியவர்கள். நடு நாடியாகிய சுழுமுனையில் சந்திரகலையாகிய இடகலையைச் (இடது மூக்குத்துவாரம்) செலுத்துவர் அதன் மூலம் பஞ்சபூதங் களாகிய மண், நீர், நெருப்பு, ஆகாயம், காற்று ஆகியவை ஒடுங்கி விடும். சலனமற்ற நிலை உருவாகும். இந்நிலை சும்மாயிருக்கும் சுகம் ஆகும்.

சூரிய கலையாகிய பிங்கலை (வலது மூக்குத்துவாரம்)யில் நடு நாடியாகிய சுழுமுனையில் காற்றைச் செலுத்தவர். அதன் மூலம் ஐம்புலன்களாகிய சுவை, ஒலி, ஓசை, ஊறு, நாற்றம், ஆகியன ஒடுங்கி அறிவுப் பெருகும் (ஞானம்). இதில் இடகலை, பிங்கலை (சூரியகலை, சந்திரகலை) ஆகிய இரு நாடிகளும் சுழுமுனையாகிப் புருவ மையத்தில் கூடும்போது அறிவும், தசவாயுக்களும் ஒடுங்கிவிடும். மூன்றும் நிற்கும் இடத்தில் வாசியை சேர்ப்பின் சதா சிவமாகச் சஞ்சலமற்று இருப்பார்கள். அவர்களுக்குப் புறஉலகத்தைப் பற்றிய சஞ்சலங்களில்லை எனலாம். அதோடு இயற்கையில் நிகழும் வெயில், மழை, காற்று, குளிர், நெருப்பு, நீர் முதலியவை தீண்டாது. மேலும் அவர்களுக்கு உலகத்தில் பிறந்த அத்தனை உயிர்களையும், பிரம்மமாகக் காணும்போது பரப்பிரம்ம மாகவே மாறிவிடுகின்றனர்.

## உடலை ஒன்பது துண்டாகப் பிரித்துச் சேர்க்கும் நவகண்டயோகம்

சித்தர்களும், ஞானிகளும் உடலைக் கைவேறு, கால்வேறாகப் பிரிக்கும் சொரூபச்சித்து செய்து, சிலநேரங்களுக்குப் பிறகு ஒன்றாக இணைத்துக் கொள்ளும் அரிய கலையில் சிறந்து விளங்குகின்றனர். அவர்கள் இவ்யோகத்தைப் பெரும்பாலும் ஆளில்லாத இடங்களில் செய்து யோகத்தில் ஆழ்ந்திருப்பர்.

சித்தர் ஒருவர் போளூர் மாவட்டம் கலசப்பாக்கம் என்னும் கிராமத்தில் ஒரே திண்ணையில் பத்தொன்பது ஆண்டுகாலம் இருந்தார். அவர் மக்களுக்கு அருளாசி வழங்கியும் நோய்கள், துன்பங்கள் முதலியவற்றைப் போக்கியும் வந்தார். இவர் ஆற்றுச்சாமி என மக்களால் அழைக்கப்பட்டவர். ஆற்றில் சிறிது நாட்கள் ஜல சமாதியில் இருந்து மீண்டும் சகஜ நிலைக்கு வந்ததால் இப்பெயர் பெற்றார் என்பது குறிப்பிடத்தக்கதாகும். ஒருமுறை கலசப்பாக்கம் தங்கவேலு நைனார், சண்முக நைனார் ஆகிய இருவரும் செய்யாற்றின் கரையோரப் புதரில் இருக்கும் சுவாமிக்கு உணவளிக்கச் சென்றனர். காக்கங்கரை சுடுகாட்டில் சுவாமி இருப்பதையறிந்து அவ்விடம் சென்றதும் அங்குச் சுவாமிகள் கைவேறு, கால்வேறாகவும் கிடப்பதை அவ்விருவரும் கண்டனர். அதன் பின் சுவாமிகள் பிரிந்த உடலின் பாகத்தை ஒன்று சேர்த்து முழு உருவம் அடைந்ததைக் கண்டனர். இச்சொருபச் சித்தினைப் பெற்ற யோகிகள் இன்றும் உள்ளனர் என்பதை அறியமுடிகிறது. மேலும் காவாங்கரை சட்டிச் சுவாமிகள், இராமலிங்க சுவாமிகள் ஆகியோர்களும் இந்நிலையிலிருந்ததை மக்கள் கண்டுள்ளதாக அறியப்படுகிறது.

போகர், சொரூபச் சித்தைப்பற்றி 'போகர் 7000' எனும் நூலில் யூகி முனிவர் இந்நிலையிலிருந்ததை,

*'வேறாகத் தானிருந்த வண்ணம் சொல்வேன்*
*வேண்டியே கைவேறாய்க் கால் வேறாய்*

*நேராக உடல் வேறாய்த் தலைவேறாய்*

*நேர்மையுடன் பூமிதனில் இருந்தசித்து'*

என்னும் பாடல் உணர்த்துகின்றது. மேலும் போகர் பாடல்,

*"சீராக லோகமதில் அனேகங் கூத்துச்*

*சிறப்புடனே யாடினது மெத்தவுண்டு*

*.............................................................*

*வேனான வெகுசித்து சொரூபச் சித்து*

*வெளியான நாதவொளி வதீதமாமே"* [41]

என்னும் பாடலில் வியந்து போற்றுவது தெளிவாகிறது.

மேலும், குணங்குடி மஸ்தான் சாகிபு அவர்கள் பாடலில்

*''வஞ்சமறலிக்கு அஞ்சா திருக்கவும்*

*வஞ்சியரை முத்தங் கொஞ்சா திருக்கவும்*

*கஞ்சா அபின் வர்க்கம் கசப்பா யிருக்கவும்*

*. . . . . . . . . . . . . . . . . . . . . . . .*

*நவகண்ட யோகநா லஞ்சா யிருக்கவும்*

*நெஞ்சம் பதைப்பற்ற நெஞ்சா யிருக்கவும்*

*நித்தன் குணங்குடி நித்த மிருக்கவும்''* [42]

என்று நவகண்ட யோகத்தின் பெருமையினைக் கூறுகிறார்.

சொரூபச் சித்தாடும்போது ஞானிகளை மனிதர்கள் கண்டால் அவர்களுக்கு மறுபிறவி வாய்க்காது என்று ஞானநூல்கள் கூறுகின்றது.

சித்தர்கள் உடலிலுள்ள தொண்ணூற்றாறு தத்துவங்களைத் தன்வசப்படுத்தினர். பஞ்சபூதங்களைத் தன் சொல்படி இயங்க வைத்தனர்.

வெட்ட வெளியில் திளைக்கும் யோக கலையைக் கற்றனர். அவர்களின் வாழ்வுத் தத்துவங்களைப் போற்றி வணங்கி ஏற்பது உலக மக்களின் கடமையாகும்.

## உடலை மறைத்து சூட்சும சரீரத்தில் இயங்குவது

சித்தர்கள் எண்வகை சித்திகளில் அணிமா என்னும் சித்து நிலையில் தன்னுடலை அணுவாக மாற்றினர். அதன் மூலம் பல்வேறு இடங்களுக்கும், கண்ணுக்கு எட்டமுடியாத அண்டவெளிகளுக்கும் பயணித்தனர் .

இதன் செயல் முறையை நூற்று முப்பத்தேழு ஆண்டுகட்கு முன்னர் வாழ்ந்த வள்ளலார் மூலம் அறியப்படுகிறது அப்பாசாமிச் செட்டியார் அடிகளாரின் அன்புக்குரியவர் ஆவார். (இவரின் தமையனார் நாக்கில் புற்று நோய் இருந்தது. அந்நோய் போக்க சுவாமி . திருநீற்றைக் கொடுத்து நோயைத் தீர்த்தவர் என்பது குறிப்பிடத்தக்கது.)

கடலூரில் திருவிழா நடைபெற்ற சமயம் செட்டியாரின் வீட்டுத் திண்ணையில் உறவினர், நண்பர்கள் ஆகியோர் உரையாடிக் கொண்டிருந்தனர். சுவாமிகள் உள்ளே அறையில் தியானித்துக் கொண்டிருந்தார். அச்சமயம் ஒளித்திரு மேனியுடன் ஒருவர் உள்ளே காற்றைப்போல் வேகமாகக் கடந்து செல்வதை அன்பர்கள் கண்டனர்.

சிறிது நேரங்கழித்து செட்டியார் அவர்கள் சுவாமியிடம் யாரோ உள்ளே வந்ததுபோல் இருந்தது என்று வள்ளலாரிடம் வினவினார். சுவாமிகளும் அதற்கு, ஆம் காசியிலிருந்து ஒரு சித்தர் லட்டு கொண்டு வந்து கொடுத்துவிட்டுப் போகிறார். இந்நேரம் அவர் காசி சென்று விட்டிருப்பார் என்று கூறினார். இச்செய்திகள் கேட்பதற்கு விநோதமாகவும், ஆச்சரியப்படும் விதத்திலும் இருக்கிறது எனினும் இச்செயல் மன உருவாக்க முறையிலே நடைபெறுகிறது.

## உளவியல் உண்மை

சித்தர்கள் மன உருவாக்கம் என்ற உணர்வில் மனத்தை ஊன்றிச் செய்தனர். அதன் விளைவாக உணர்வுக் கேற்ப உருவம் கிடைத்தது. அவ்விதச் சூட்சும தேகத்திற்கு உருக்கொடுப்பதன் மூலம் மனம் திரிபடைந்து மீண்டும் ஒன்றி இணை‿கிறது. அவ்வித உணர்வலைகளால் பாதிக்கப் பெற்ற மனம் எது பற்றிப் பாவித்ததோ அல்லது கற்பனைச் செய்ததோ அந்த வடிவமாக 'மானசீக' உருவாக்கம் ஏற்படுகிறது.

## விண்ணும் மண்ணும் சமம்

சித்தர்கள் விண்ணையும், மண்ணையும் சமமாகவே பாவித்தனர். கோரக்க முனிவரும், போகர் சித்தரும் வான்வழியே சீன தேசம் சென்றிருப்பதைக் கோரக்கரின் சந்திரரேகை200 என்னும் நூல் தெரிவிக்கிறது. ஒருமுறை கோரக்கரது சித்தாசிரமத்திற்குச் (தஞ்சை மாவட்டம் பொய்கை நல்லூர்) சில சித்தர்கள் வந்தனர். அவர்கள் கோரக்கரிடம் சில நூல்களைப் பெற்றுக் கொண்டு விண்ணிடை பறந்து சென்றதை, ''கோரக்கர்''[43] என்னும் நூல் தெரிவிக்கிறது.

சித்தர்கள் தங்கள் சூட்சும உடலை வான் வழியிலும், நிலவழியிலும் சென்று வருவதற்குப் பயன்படுத்தி கொண்டனர் என்றும், வெகுதூரத்தை சில நிமிடங்களில் கடந்தனர் என்றும், கனத்த உடலை லேசானதாக மாற்றிக் கொள்ளும் கலையைக் கற்றிருந்தனர் என்றும் தெரியவருகிறது. திருமூலர் பஞ்சுபோல் பறக்கும் நிலையை,

*"முடிந்திட்டு வைத்து மயங்கிலோ ராண்டில்*
*அணிந்த அணிமா கை தானாம் இவனுந்*
*தணிந்தவப் பஞ்சினுந் தானொய்ய தாகி*
*மெலிந்தங் கிருந்திடும் வெல்ல வொண்ணாதே!"*[44]

என்று வியந்து பாடுகிறார்.

## வேற்றுடல் நுழைவு

திருமூலர் மாடு மேய்த்து இறந்த மூலன் உடலில் புகுந்து சிறிது நாள் வாழ்ந்து பின் சமாதியில் திளைத்து மூவாயிரம் திருமந்திரப் பாடலைப் பாடியுள்ளார். அதனை,

> *“மாலாங்க னேயிங்கு யான்வந்த காரணம்*
> *நீலாங்க மேனியள் நேரிழை யாளொடு*
> *மூலாங்க மாகமொழிந்த திருக்கூத்தின்*
> *சீலாங்க வேதத்தைச் செப்ப வந்தனே!”* [45]

என்னும் பாடலில் மூலன் உடலில் தான் நுழைந்தைத் திருமூலர் குறிப்பிடுகிறார். அருணகிரிநாதர் வல்லாள மகராசனுக்கு மூலிகை கொண்டுவருதற்குக் கிளியுருவம் கொண்டார். மூலிகையைக் கொண்டு வருவதற்குள் அவர் உடல் சிதைந்துவிட்டது. அதனால் அவர் கிளிவுருவமாகவே நின்றதைப் புராணம் கூறுகிறது. தேனீர்க்கடைக்காரர் ஒருவர் பூண்டி சுவாமியின் அனுமதியின்றி அவருடைய அறையைத் திறந்து பார்த்ததும் சுவாமிகள் அவருக்கு மலைப் பாம்பைப்போல் காட்சியளித்ததை அறியமுடிகிறது.

சித்தர்கள் உடலைக் கற்ப தேகமாக்கியதன் மூலம் நினைக்கின்ற உருவத்திலும், கூடுவிட்டுக் கூடு பாய்வதிலும் வல்லவர்களாக விளங்கினர் என்பது அறியப்படுகிறது.

## சித்தர்கள் அடைந்த சமாதிநிலைகள்

சித்தர்கள் கூறியுள்ள சமாதிநிலை (ஆத்ம தியானம்) என்பது தன்னையும், சுற்றுப்புறச் சூழலையும் மறந்த, ஒருமையுணர்வுடன் கூடியதொரு உயர்நிலையாகும். இது நிலைத்து விட்டபின் தான் செய்த பூர்வவினையும் ‘நான்’ என்ற அகந்தையும் ஒழிந்துவிடும். அதன்பின்

இறப்பும், பிறப்பும் இல்லை என்ற உயர்நிலை கிட்டும். இது பொதுவாகச் 'சம்பிகசாதனம்' (வழக்கத்தைவெல்லுதல்) அசம்பிகச் சாதனம் (மேலான உணர்வு பெறுதல்) என இருவகைப்படும். இவை 1. நிரு விகற்ப சமாதி (வேறுபாடற்ற நிலை) 2. சவ்விகற்ப சமாதி (விகல்பமுடன் கூடியது) 3.ஆருட சமாதி (முற்றும் துறந்தபின் செய்வது) 4.சஞ்சார சமாதி (ஓரிடத்திலும் நிலையில்லாதிருப்பது) 5. வியவகார சமாதி (உலக வழக்கில் இருந்தபடியே செய்வது) 6. சகச சமாதி (சுகதுக்கங்களைக் கருதாது சாதாரணமாக விருப்பப்படி செய்வது) என்ற ஆறுபிரிவுகளாகும்."[46] சித்தர்கள் சமாதியில் நுழைவதற்கு முன்பு தன் உடலைக் காயக்கல்பம் (காயசித்தி) செய்து கொள்வர்.

சமாதி நிலையில் மன ஒருமைப்பாடு முதன்மைப்படுத்தப்படுகிறது. ஆன்மாவைப் பிணைத்திருந்த மும்குற்றங்களான ஆணவம், கன்மம், மாயை ஆகிய அனைத்தும் நீங்கியபின் 'நான்' எனும் தன்முனைப்பு செயலற்றுப் போகிறது. அதன்பின் ஆன்மா தன்னியல்பான மெய்யுணர்வைப் பெற்று சத்–சித்–ஆனந்தமடைகிறது. (சச்சிதானந்தநிலை) அவ்வாறான பக்குவப் பட்ட ஆன்மா பூரணத்தில் ஒன்று கலந்து விடுவதைச் 'சமாதி' என்றழைக்கப்படுகிறது.

## சமாதி அடைந்தவர் உடல்

சித்தர்கள் பிணி, மூப்பு, சாக்காடு என்னும் மூன்று அவத்தை நிலைகளைக் கடந்தவர்கள். அவர்கள் சமாதி அடைந்தவுடன் உடலானது பார்ப்பதற்குச் சவம்போல் காணப்படும். சமாதி அடைந்த உடல் மரணித்த உடல்களில் காணப்படும் விறைப்புத் தன்மை இல்லாமலும், தலை தொங்கிவிடாமலும், வாய்பிளந்து அல்லது இறுக்கமாக மூடிக் கொள்ளாமலும், குழந்தையைத் தூக்குவது போலவும், உடல் இலகுவாய் நீட்ட, மடக்க கூடியதாகவும், துர்நாற்றம் வீசாதவாறும் இருக்கும். மேலும்

அவர்களின்மேல் நல்லமணம் வீசும். முகம் சாந்தமான நிலையில் அமைதியுடன் காணப்படும். உடலில் எங்கேனும் கீறல் ஏற்பட்டால் இரத்தக் கசிவும் உண்டாகும் இது இன்றைய அறிவியல் துறைக்கு முடிவுகாண இயலாத புதிராகும்.

இந்த நிலையடைந்தப் புண்ணிய சீலர்களின் உடலைப் பூமியில் எட்டடி முதல் 10 அடிவரை ஆழம் தோண்டிப் பள்ளமிட்டு 4x4 அடி அகல நீளத்தில் கட்டிடம் கட்டுவர் அல்லது பாறைக் கற்களை வைத்து விபூதி, வில்வம், துளசி, சந்தனம், சவ்வாது முதலிய பொருட்களைச் சமாதிக்குள் வைப்பர். அதன்மீது அவர்களை அமர்த்தி கழுத்துவரை விபூதியை இட்டு (தலை தெரியுமளவு) பிறகு சமாதியை மூடி விடுவர். இச் சமாதியை உட்கார்ந்த நிலையிலும், படுத்த நிலையிலும் வைப்பார்கள். மேற்கூறியவாறு சமாதி அடைந்தவர் நிலையை அறியமுடிகிறது.

**அடையாளங்கள் (சீவன்முத்தர்கள்)**

1. "உலகத்தில் செத்தவர்களுக்கு இறுதி நேரத்தில் 'தீட்டு' என்பது ஏற்படுகின்றது. ஆணுக்கு சுக்கில நீராகிய கசப்பு திரவமும் பெண்ணுக்குச் சுரோணிதக் கசப்பு திரவமும் வெளியாகிறது. அதன் பின் நாற்றம் எடுக்கிறது. இந்நாற்றமில்லாமல் கற்பூர மணத்துடன் இருப்பவர்கள் சாகாக்கலை பெற்ற சித்தர்கள் ஆவர்.

2. தேகத்தில் உச்சிமுதல் உள்ளங்கால்வரை வெதுவெதுப்பாக சூடு இருக்கும். கைகால் அங்கமெல்லாம் விறைக்காமல் துவண்டபடி இருக்கும்.

3. பாவக்கணம் ஏறாமல் தேகமானது பூக்கூடையைத் தூக்குவது போல இருக்கும்.

4. கைகால் விரல்களில் சொடுக்கு எடுத்தால் நெட்டிவரும்.

5. திருவாக்கியங்களோ! தோத்திரப்பாடல்களோ! பாடும்போதும் அவர்கள் மேனியில் வியர்வை கொப்பளிக்கும் துடைக்க துடைக்க மேலும் கொப்பளிக்கும்.

6. வயோதிகர்கள் சமாதியடைந்தால் அவர்கள் முகத்தில் இளமை பூத்துப் பசு மஞ்சள் வர்ணம் உலாவும்.

7. அவர்கள் வாயினில் தீர்த்தமாகிய கஷாயம் கொடுத்தால் அதைச் சாப்பிடுவர்

8. சமாதி அடைந்தவர்கள் உடல்கூனியிருந்தாலும், புண்கள் இருந்தாலும் எல்லா தேகக் குறைபாடும் நீங்கும்.

9. அடக்கமான பின்பு 40 நாட்கள் வெளியில் வைத்தாலும் தேகம் கெடுவதில்லை.

10. மண்ணில் புதைத்தாலும் தேகத்தை மண்தீண்டாது"[47]

மேற்கண்டவாறு சமாதி நிலையில் இருப்போர்களது உடல் தன்மை இருக்கும் என்பது தெரியவருகிறது.

'சித்தர்களின்றி சிவன்கோயில் ஏதுகாண்?' என ஒரு வினா ஆன்மிகத் துறையில் வினவப்பட்டு வருகிறது. இறைவழியில் நின்ற சித்தர்கள் மனித உடம்போடு எங்கும் அலைந்து திரிந்து எல்லோர் கண்களிலும் படுவது ஒரு கால எல்லைவரைதான். இறையருளில் பூரண நிலை அடைந்த பிறகு வந்த காரியம் முடிந்ததை உணர்ந்து கொள்வர். அதன்பிறகு தக்கதோர் இடத்தைத் தேர்ந்தெடுத்து சமாதிநிலை அடைவர். தங்கள் அருளாற்றலினால் சீடர்களையும், அன்புடை நெஞ்சங்களையும் உருவாக்கிக் கொள்வர். சமாதி அடைந்தவர்களின் உடலுக்கும் உயிருக்கும் யாதொரு அழிவும் துன்பமுமில்லை. இந்நிலை அடைந்த சித்தர்கள் ஐம்பூதங்களைத் தன் வசப்படுத்தி அரூபமாகவும், உருவமாகவும் தன்னை மாற்றிக் கொண்டு உலகுள்ளவரை களித்திருப்பர். அவ்வாறு

சமாதி அடைந்த சித்தர்கள் பக்தர்களுக்கு அருள்பாலித்துக் கொண்டு இருப்பர். அவர்கள் ஜீவனோடு இருக்கிறார்கள் அதனால் அவர்களுக்கு ஜீவசமாதி கோயில்களை மக்கள் உருவாக்கி வணங்கி வருகின்றனர்.

## திருமூலர் காட்டும் சமாதியின் வகைகள்

எண்வகை சித்துக்களைப் பெற்றவர்கள் சமாதிநிலை அடைய இயலும். இச்சமாதியின் வகைகளைப் பின்வருமாறு திருமூலர் வகைப்படுத்துகிறார்.

1. பூரணக் குகை நெறிச்சமாதி
2. மோனச் சமாதி
3. பிரணவ சமாதி

என மூன்று வகை சமாதி நிலைகளைக் குறிப்பிடுகின்றார்.[48]

சமாதிநிலை என்பது சித்தர்களின் வெற்றிச் சின்னங்களாகவும், அவர்களை வழிபடும் தெய்வ நிலையங்களாகவும் திகழ்ந்து வருகின்றன என்பதை அறியமுடிகிறது.

## பதினெண் சித்தர்களின் பிறப்பு, வயது, சமாதியுரைவிடங்கள்

| "சித்தர் பெயர் | பிறந்த நட்சத்திரம் | வயது | தலைமுறை | சீவசமாதி இடம் |
|---|---|---|---|---|
| 1. நந்தீசர் | விசாகம் | 680 | 3 | கைலாயம் |
| 2. திருமூலர் | பூசம் | 3000 | 27 | சிதம்பரம் |
| 3. அகத்தியர் | ஆயில்யம் | 4 யுகம் | 48 | அனந்தசயனம் (திருவனந்தபுரம்) |
| 4. சட்டமுனி | மிருகசீரிடம் | 800 | 14 | சீர்காழி / திருவரங்கம் |
| 5. கருவூரார் | அஸ்தம் | 300 | 42 | தஞ்சாவூர் |
| 6. புலஸ்தியர் | அனுசம் | 660 | 8 | ஆவுடையார் கோவில் (பாபநாசம்) |
| 7. கோரக்கர் | ஆயில்யம் | 80 | 11 | திருக்கோணமலை (பொய்கை நல்லூர்) |
| 8. கமலமுனி | பூசம் | 4000 | 12 | திருவாரூர் |

| | | | | |
|---|---|---|---|---|
| 9. பாம்பாட்டிச்சித்தர் | மிருகசீரிடம் | 163 | 4 | திருஞானம், துவாரகை, மருதமலை |
| 10. இடைக்காடர் | திருவாதிரை | 100 | 18 | திருவண்ணாமலை |
| 11. சிவவாக்கியர் | மகம் | 81 | 20 | கும்பகோணம் |
| 12. கொங்கணர் | உத்திராடம் | 1200 | 11 | கும்பகோணம் |
| 13. போகர் | பரணி | 300 | 18 | பழனி |
| 14. மச்சமுனி | ரோகிணி | 300 | 62 | திருப்பரங்குன்றம். |
| 15. புண்ணாக்கீசர் | சித்திரை | 112 | 18 | நண்ணாவூர் (சங்கணாச்சேரி) |
| 16. காலாங்கி | அசுவதி | 3000 | 10 | காஞ்சிபுரம் (கஞ்சமலை) |
| 17. சுந்தரர் | ரேவதி | 800 | 28 | மதுரை ஸ்ரீவல்லபசித்தர் |
| 18. தேரையர் | மூலம் | 700 | 90 | பொதிகைமலை"[49] |

மேற்கண்ட விபரம் சித்தமருத்துவ அமுது கூறும் செய்திகளாகும். இவ்வாறு சித்தர்கள் அறிவுக்கு எட்டாத அல்லது புலப்படாத ஆண்டுகள் வாழ்ந்து கொண்டிருக்கின்றனர் என்பது தெரியவருகிறது.

**அறிய வருவன**

'மரணமிலாப் பெருவாழ்வும் சமாதி நிலையும்' என்னும் இவ்வியலில் இறப்புக்கு அடிப்படையாக விளங்கும் 'உயிர்' அல்லது 'சீவன்' மனித உடலில் செயல்படும் விதத்தையும், அச் சீவன் சிவநிலையெய்தி இறப்பற்ற நிலை அடைவதையும், அதன் வடிவம் பற்றியும் அறியப்பட்டது. மனித உடலிலிருந்து உயிர் நீங்கினால் பிறவித்துன்பம் தொடர்வதையும், மனிதத் தோற்றம் பற்றிய அறிவியலாளர் கருத்துகளையும், உடம்பின் வகைகளையும் ஆராயப்பட்டுள்ளது.

தொண்ணூற்றாறு தத்துவங்கள், நோய், பிணி என்பனவற்றின் சொல்லாய்வும், மனமகிழ்வைப் பற்றியும், மனித உடம்புக்கு நோய் வருவதற்கான காரணம் பற்றியும், அந்நோயை நீக்கிட உடலில் புதிய அணுக்களை உருவாக்கும் 'முப்பு' எனும் கற்ப மருந்தினைப் பற்றியும் ஆராயப்பட்டுள்ளது.

சித்தர்களின் சாகாக்கலைக் குறித்தும் இறப்பின் விளக்கத்தினையும், முப்புவின் ஆற்றல் பற்றியும், பஞ்ச பூதங்களும் மனித உடலும் பற்றிய விளக்கத்தினையும், அவைகள் மாறுபட்டால் வரும் கேடுகளையும் அறியப்பட்டது. அத்துடன் பஞ்ச பூதங்களின் தன்மைகள், குணங்கள் குறித்தும் வாசியைப் பற்றிய கலைகள் (சந்திரக்கலை, சூரியக்கலை) பற்றியும் விரிவாக அறியப்பட்டது.

சித்தர்களின் வியப்பூட்டுகின்ற செயல்களான, உடலைப் பிரித்துச் சேர்க்கும் நவகண்ட யோகம், வேற்றுடல் நுழைவு, உடலை மறைத்துக் கண்ணுக்குப் புலப்படாமல் தோன்றுதல், சமாதி நிலை விளக்கங்கள் ஆகியவற்றைக் குறித்தும், சித்தர்களின் சமாதி நினைவிடங்கள் பற்றியும் இவ்வியலில் அறியப்பட்டுள்ளன.

## குறிப்புகள்

1. புனித பைபிள், 14:6.
2. திருக்குர்ஆன், 48:28.
3. திருமூலர், திருமந்திரம், பா. 2017.
4. அன்னை சரளாதேவி, சிவபுராணம் விளக்கவுரை, ப. 113.
5. திருவள்ளுவர், திருக்குறள், 10.
6. சித்தர் பாடல்கள், வானதி பதிப்பகம், ப. 262.
7. திருமூலர், திருமந்திரம், 725.
8. சிவதாணுப்பிள்ளை, சித்த மருத்துவ உடல் தத்துவம், ப. 3.
9. ஆனைவாரி ஆனந்தன், சித்தமருத்துவ வரலாறு, ப. 3.
10. திருமூலர், திருமந்திரம், 286.
11. முருகேசன், சித்தர்கண்ட மானுட ரகசியம், ப. 44.
12. திருமூலர், திருமந்திரம், 1974.
13. ஔவையார், சித்தர் பாடல், ப. 81.
14. மேற்படி, ப. 98.
15. குதம்பைச் சித்தர், சித்தர் பாடல்கள், ப. 262.
16. மேற்படி, ப. 268.
17. மேற்படி, ப. 269.
18. சிவதாணுப்பிள்ளை, சித்த மருத்துவ உடல் தத்துவம், ப. 19.
19. ஆனைவாரி ஆனந்தன், சித்தமருத்துவ வரலாறு, ப. 85.
20. திருவள்ளுவர், திருக்குறள், பா. 941, 945, 948, 949.
21. மேற்படி, பா 1280
22. திருமூலர் – எண்ணாயிரம் (எண் இல்லை)
23. மேற்படி, திருமந்திரம், பா. 167.
24. சிவவாக்கியம் ஆயிரம், பா. 43.

25. தொல்காப்பியர், தொல்காப்பியம், சூ. 247.

26. திருவள்ளுவர், திருக்குறள், 338.

27. க. நாராயணன், சித்தர் தத்துவம், ப. 112.

28. சித்தர் பாடல்கள், வானதி பதிப்பகம், ப. 107.

29. மேற்படி, ப. 106.

30. இராமலிங்க அடிகள், திருஅருட்பா, ப. 102.

31. சரவணானந்தா, சாகாக்கல்வி, முகவுரை, ப.V.

32. மகாலட்சுமி, தட்சிணாமூர்த்தி குருமுகம், ப. 29.

33. மேற்படி, ப. 28.

34. மேற்படி, ப. 33.

35. இராமலிங்க அடிகள் திருஅருட்பா, சற்குருமணிமாலை,

36. சிறப்பு மலர், சித்தமருத்துவச் சங்கம், காங்கயம் வட்டம், ப. 30.

37. சத்தியநாராயணன், நீதி நூல்கள் ஏழு, ப. 20.

38. சித்தர் பாடல்கள், வானதி பதிப்பகம், ப. 72.

39. அப்துல்காசிம், வாதநோய்கள், ப. 21.

40. இராகவன், அ. சித்தர்களின் பிரணவ சூத்திரம், ப. 60.

41. போகர், போகர் 7000, ப. 260.

42. குணங்குடி மஸ்தான் சாகிபு பாடல்கள், ப. 29.

43. அருண்குமார், நாகை. கோரக்கர், ப. 70.

44. திருமூலர், திருமந்திரம், பா.673.

45. மேற்படி, பா.77.

46. இராஜகோபாலன், சித்தமருத்துவ வினாவிடை, ப. 4.

47. அரங்க இராமலிங்கம், திருவள்ளுவர் இறைநெறி, ப. 96.

48. திருமூலர், திருமந்திரம், பக்.253, 356, 391

49. சிவதாணுப்பிள்ளை, சித்த மருத்துவ அமுது, ப. 52.

# முடிவுரை

'சித்தர்களின் வாழ்வியல் தத்துவம்' என்னும் தலைப்பிலான ஆய்வில் இயல்கள் தோறும் கண்ட முடிபுகள் தொகுத்துக் கூறப் பெறுகின்றன.

தமிழிலக்கிய வரலாற்றில் இடம்பெற்றுள்ள சித்தர் இலக்கியங்களின் தோற்றத்தையும், அதனாசிரியர்களையும் சரிவரக் கணிக்க இயலாத காரணத்தால் சித்தர்களின் தோற்ற வரலாறு பற்றியும் அவர்களது காலம் பற்றியும் அறுதியிட்டுக் கூற இயலவில்லை. கிடைத்தத் தரவுகளின் அடிப்படையில் ஆய்வு நடத்தப்பட்டுள்ளது. சித்தர்களின் நூல்கள் பல்வேறு துறைகளான மனித வாழ்வு, உடல்கூறு தத்துவம், உணவு முறைகள், வாழ்வியல் நெறிமுறைகள், சாதி சமயங்களை வேரறுக்கப் பாடுவது, கடவுள் கொள்கையில் தெளிவான முடிபு, என்றும் இளமையுடன் வாழ்வதற்கு வழிகோலுவது போன்ற கருத்துகள் ஆய்வுக்குப் பெரிதும் உறுதுணையாயிருந்தது. சோதிடத்தின்வழி எதிர்கால நடப்புகளைப் பற்றி அறிதல், வசியம் போன்ற தற்காத்தல் நிலைகள் காணக்கிடைக்கின்றன.

மனிதனாகப் பிறந்து, மனித ஆற்றலைத் தன்னுள்ளே கண்டு அனைத்தையும் துறந்த நிலையில், பற்றற்ற வாழ்வில் சித்து நிலையெய்தியச் சித்தர்கள் பாரத மண்ணில் மட்டுமின்றி உலகில் பல்வேறு பகுதிகளிலும் தோன்றியுள்ளனர். அவர்கள் நவநாதச் சித்தர்கள் என்ற எண்பத்து நான்கு பேர் ஆவர். ஒன்பது பேர் மட்டும் அதில் குறிப்பிடத்தக்கவர். தென்னாட்டுச் சித்தர்கள் பதினெண்மர் என்றும் ஆயப்பட்டனர். இவர்கள் அனைவரும் நாட்டு மக்கள் நலமடைய பல்வேறு வாழ்வியல் தத்துவங்களைத் தமது

படைப்புகள் வாயிலாக வெளிப்படுத்தியுள்ளனர். ஒருவரே பல இடங்களில் சமாதியடைந்தும், வேற்றுடல் நுழைவு மூலமாகக் காலங்கடந்து வாழ்ந்ததும் தெரியவருகிறது. இதற்குத் திருமூலரே எடுத்துக்காட்டாய் விளங்கிறார். நந்தீசர் எனும் நந்தியம்பெருமான் சித்தர்குலத் தலைவராகவும், சிவபெருமானின் முதற்சீடராகவும் காணப்படுகிறார் என்பதையும் அறியமுடிகிறது.

சித்தர்களின் நோக்கம் யாம் பெற்ற இன்பத்தை மற்றவர்கள் அடைய வேண்டும் என்கிற பிறர்க்காக வாழும் நிலையினை அடிப்படையாகக் கொண்டுள்ளது. பிறரிடம் எவ்வித எதிர்பார்ப்பும், பயனும் அடையாமல் தாங்கள் தவத்தின் மூலம் உணர்ந்த, பிறவிகளுக்கு மூல காரணமாயிருக்கும் வினைகளை நீக்குதல், இறைவனை உணர்ந்து, பிறருக்கும் உணர்த்தி எண் விதமான சித்தாற்றல்களைப் பெற்று, எதையும் சாதிக்கும் வல்லமையை அடைந்திருந்தனர் என்பது தெரியவருகிறது. அவ்வாறான பேராற்றலை அடைந்தவர்களாய் இருந்தபோதிலும் மக்களோடு மக்களாக மிக எளிமையாக வாழ்ந்து அனைத்துயிர்களிடத்தும் அன்புகாட்டி, உயிரையும், உடலையும் பேணுகின்ற வழிமுறைகளைக் கூறினர். தனக்கு இவ்வுலகில் எதிரிகளில்லாத நிலையை உருவாக்கிட மக்களையும், கொடிய விலங்குகளையும் தன் வசப்படுத்தி வாழ்ந்தனர் என்பது விளங்குகிறது.

சித்தர் பாடல்களில் பெரும்பாலும் உணர்த்துவது உலகில் பிறந்த உயிர்கள் அனைத்தும் ஆண்டவன் திருவடியை அடையவேண்டும் என்பதாகும். திருவடிப்பேறு எய்திட மனிதனுக்குத் தடையாயிருக்கும் பற்றுக்களை நீக்கியும், மனத்தை அடக்கி யோக முறைகளில் ஈடுபடுத்தவும் அறிவுறுத்தினர். பஞ்சபூதங்களான மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்பவற்றைத் தனது கட்டுப்பாட்டுக்குள் இருத்தி, நீர்மேல் நடந்தும், வானத்தில் பறந்தும் விந்தை புரிந்தனர் என்பதை அவர்கள் பாடல்கள் வாயிலாகவே அறிய முடிகிறது. அண்டமே பிண்டம், பிண்டமே அண்டம்

என்னும் தத்துவத்தைக் கண்டனர். கோள்களின் இயக்கத்தை வைத்து இயற்கையின் மாறுதலையும், மனிதனுக்கு ஏற்படப்போகும் வாழ்வுத் துன்பங்களையும், பயன்களையும், ஆயுளையும் கால ஞானத்தின் மூலம் கணித்தனர். வானியல் சாத்திரங்களையும் படைத்தனர்.

சித்த மருத்துவத்தின் சிகரமாய் விளங்கும் கற்ப மருந்துகளைச் செய்து உண்டு நீண்ட நாள் வாழும் கலைக்கு முப்பு மருத்துவ நூல்களையும் அளித்தனர். சித்த மருத்துவத்தில் அகமருந்து, புறமருந்து, ஏக மூலிகைப் பயன்பாடு, கற்ப மூலிகைப் பயன்பாடு போன்றவற்றைக் கண்டுரைத்தனர். தாழ்ந்த உலோகத்தையும் உயர்ந்த உலோகமாக்கும் இரசவாதக் கலையினையும் மக்களுக்கு உணர்த்தியது தெரியவருகிறது.

சித்தர்கள் கடவுள் கொள்கையைப் பற்றி மிகத் தெளிவான கருத்துகளை எடுத்துரைத்துள்ளனர். ஒருசிலர் கடவுள் புறத்திலில்லை தன்னகத்தே உறைந்துள்ளார் என்பதும் ஒருசிலர் ஆலயம் தொழுவது சாலவும் நன்று எனத் தெய்வங்களை வணங்குவதும் அறியவருகிறது; வேத, மந்திரங்களையும், பூசை விதிகளையும், அங்கு உறையும் தெய்வத்தின் தன்மையையும் மனிதனின் குணவியல்போடு ஒப்பிட்டு அதற்கேற்பத் திசைகளை வகுத்துச் சிலைகளை அமைத்தனர்.

ஆன்மிகத்திற்கு வருவோரை நெறிப்படுத்த நல்ல குருபிரான் அமைவதை வலியுறுத்துகின்றனர்; தொட்டுக்காட்டாத வித்தைச் சுட்டுப் போட்டாலும் வராது என்பதற்குச் சான்றாகக் குருவின் அவசியத்தை உணர்த்தியுள்ளனர். இறைவன் வேறு, ஆன்மா வேறு இல்லை எனவும் சீவனே சிவலிங்கமாகவும், அன்பே சிவமாகவும், காணும் சிவத்தத்துவத்தை உணர்த்தினர். அரியும், சிவனும் ஒன்றுதான் என்று சிவவாக்கியர் 'எருதில் ஏறும் ஈசனும் இயங்கு சக்ரத்தானையும் வேறுவேறு பேசுவார். வீழ்வர் விண் நரகிலே' என்பதன்மூலம் இறைவனில் வேற்றுமையில்லை என்று

உணர்த்தினர். திருமூலர் அன்பும் சிவமும் இரண்டல்ல! ஒன்றுதான் என்று வலியுறுத்துகிறார். இதன்வழி உள்ளத்தைக் கோயிலாகவும் ஊன்உடம்பை ஆலயமாகவும் காணவேண்டுவதும் தெளிவாகிறது. ஞானிகள் இறைவனை மூன்று நிலைகளில் உருவமாகவும், அருவமாகவும், ஒளியாகவும் கண்டு வணங்கி முக்திப் பேறடைந்தது இவ்வாய்வின் மூலம் அறியமுடிகிறது.

சித்தர்கள், மனித உடலில் உயிர் எவ்வாறு செயல்படுகிறது என்பதை அறிந்த மெய்ஞ்ஞானிகளாவர். மனித வாழ்வுக்கு உயிர் ஆதாரமாகவும், உயிர் பிரிந்தால் இறப்பு நேரிடும், மீண்டும் பிறவித் தொடர் வரும் என்பதைத் தன் ஞானத்தால் உணர்ந்தனர். பிறவியாகிய பெருங்கடலை நீந்துவதற்கு இறைவன் திருவடியைச் சேரவேண்டும் எனும் வள்ளுவர் வாக்கினைச் சித்தர்கள் மெய்ப்பித்தனர் என்பதை அறியமுடிகிறது.

மனித உடம்பின் உட்கூறுகளை ஆராய்ந்து, மன இயல்புகளைத் தெரிந்து, உடம்பின் தொண்ணூற்றாறு தத்துவங்களின் செயல்பாட்டையும் மக்களுக்குக் கூறினர். பேராசையால் மனம் கெடுவதை நிறுத்தவும், என்றும் சதாசிவ நிலையில் மனம் தழைக்கவும் வழிகாட்டினர். மனிதன் வாழ்நாளை நீட்டிக்க முப்பு கற்பத்தினையும் அதனை உண்ணும் முறைகளையும் அறிவித்தனர். சித்தர்கள் சாகாக்கலை என்னும் உடல் வேதியியலை அறிந்தனர். சாகாக்கால் – வேகாத்தலை – போகாப் புனல் ஆகியன, வாசியோகத்தை அடிப்படையாகக் கொண்டிருப்பதை உணர்த்தினர். கற்பம் உண்ணுவதால் ஏற்படும் பயனையும், பஞ்சபூதத் தத்துவங்களின் இயல்பையும், அதன் செயல்பாடுகளையும் குறித்துக் கூறிய பாடல்கருத்துகள் ஆராயப்பட்டுள்ளன.

நிலையாமைத் தத்துவத்தை உணர்த்திய சித்தர்கள் பற்றற்ற வாழ்வின் மூலம் மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை ஆகியவற்றை

வெறுத்தனர். இவ்வாறு பற்றற்ற துறவிகள் பலர் சித்தர்களைப் பின்பற்றி வாழையடி வாழையாகத் தோன்றினர் என்பதை அறியமுடிகிறது. அவர்கள் வழி நின்ற ஞானிகளில் பெண்களும் அடங்குவர். கானகம் செல்லாமல் இல்லறத்தில் இருந்தவாறே தவச் சீலர்களாக வாழ்ந்ததை ஔவை, காரைக்கால் அம்மையார், வாசுகியார், போன்றவர்கள் அடியொற்றி, 19ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சக்கரையம்மா மற்றும் புதுச்சேரியில் வாழ்ந்த சித்தினிகள் ஆகியோரைப் பற்றியும் ஆய்வு செய்யப்பட்டுள்ளது.

பதினென் சித்தர்கள் குழுவில் இடம்பெறாத சித்தர்களும் சமுதாயக் காவலர்களாக இருந்துள்ளமை விளக்கப்பட்டுள்ளது. சித்தர்கள் ஒரே சமயத்தைச் சேர்ந்தவர்களன்றி, பிறமதத்தினரும் சித்தர்களாக, ஞானிகளாக அவர்களுக்குள் எவ்வித பேதமும் இல்லாமல் வாழ்ந்ததை அறியமுடிகிறது. நீதிநெறிக் கொள்கைகளை உலக மக்களுக்கு உணர்த்திய வள்ளுவர், ஔவை பிராட்டியார், ஆகியோரைப் பற்றியும், இவர்களும் சித்தர்வரிசையில் இடம்பெறுவதையும் அறிஞர்களின் சான்றுகள் மூலம் அறியமுடிகிறது. பதினெட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த வள்ளலாரும் சித்தராகவே ஞான நூல்களும், அறிஞர்களும் குறிப்பிடுவதைக் காணமுடிகிறது.

நிலையற்ற மனித வாழ்வில் நிலையானதான வீடு பேறடைதலைச் சித்தர்களின் சிந்தனை வலியுறுத்துகிறது. சித்தர்களின் இரசவாதக் கலைகளை அறிவியல் நோக்கில் ஆராய்வதன் மூலம், யோகமுறையில் சிந்தையையடக்கித் தவம் செய்வதன் வாயிலாக எல்லா வளமும், நலனும் பெறலாம் என்பது ஆய்வில் தெளிவாக்கப்படுகிறது. எதிர்காலத்தில் சித்தர்கள் குறித்த ஆய்வுகள் மேம்படச் செய்யவும் வாய்ப்புகள் நிறைய உள்ளது. சித்தர் பாடல்களின் கருத்துகள் அடங்கிய நூல்கள் ஆன்றோர்களின் தெளிவுரைகளுடன் வெளிவருமாயின் பாமர மக்களுக்கும், படித்த மக்களுக்கும் பெரிதும் பயன்படும், அதோடு, மொழிமாற்றத்துடன்

பிறமொழி இலக்கியங்களில் தமிழ்ச் சித்தர்களைப் பற்றி அறிவதற்கு வாய்ப்புகள் உருவாகும்.

**மேலாய்வுக் களங்கள்**

யோகம், சோதிடம், மந்திரம், வசியம், மருத்துவம், இரசவாதம், முப்பு, காயகல்பம் போன்றவற்றைப் பற்றித் தனித்தலைப்புகளின்கீழ் ஆய்வுகள் நிகழ்த்தப்பட வேண்டும்.

இன்றும் மக்களிடையே வாழ்ந்து கெண்டிருக்கிற சித்தர்களைப் பற்றி ஆய்வு மேற்கொள்ளப்பட வேண்டும்.

சித்தர்களின் மருத்துவ இயலில் நோயணுகா விதி எனும் பிரிவில் ஆய்வதன் மூலம் நாட்டுமக்கள் எதிர்கொள்கின்ற புதிய நோய்களுக்கானத் தீர்வினை மருத்துவத்தின்வழி காண இயலும்.

## துணை நூற்பட்டியல்


அன்னை சராளாதேவி – திருவாசகம்
சிவபுராணம் விளக்கவுரை
ஆதிசக்தி மெய்ஞான சபை
முதற்பதிப்பு, செப்டம்பர் 2004.

அறிஞர் அண்ணா சித்த மருத்துவக் கல்லூரி வெளியீடு – ஆத்மரட்சாமிந்த வயித்திய சாரசாங்கிரம்
சென்னை, முதற்பதிப்பு 2004.

அருண்குமார், நாகை, சி – கோரக்கச் சித்தரின் பெருமை
குமரி பதிப்பகம், நாகப்பட்டினம்
முதற்பதிப்பு, செப்டம்பர் 2003.

அப்துல்காசிம், எம்.எம் – வாத நோய்கள் ஆராய்ச்சி மையம்
மதுரை
முதற்பதிப்பு, ஆகஸ்ட் 1994

அபிஷிக் தானந்தர் – மறுகரையை நோக்கி
விவிலியம் பப்ளிகேஷன்ஸ்
சென்னை, முதற்பதிப்பு–1989.

அரங்க. இராமலிங்கம் – திருவள்ளுவர் இறைநெறி
அநுராகம் பதிப்பகம்
சென்னை, முதற்பதிப்பு–2007

அரங்க. இராமலிங்கம் – மெய்ப்பொருள்
அநுராகம் பதிப்பகம்
சென்னை, முதற்பதிப்பு–2007.

அரங்க. இராமலிங்கம் – சித்தர் இறைநெறி
அநுராகம் பதிப்பகம்
சென்னை, முதற்பதிப்பு–2007.

ஆனந்தன், ஆனைவாரி – சித்தமருத்துவ வரலாறு
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை, முதற்பதிப்பு 2008.

ஆல்பென்ஸ் நதானியேல், மு., – தமிழர் மருத்துவம்
நேசமணி பதிப்பகம்
நாகர்கோயில்,
முதற்பதிப்பு மார்ச் 2003.

ஆறுமுகநாவலர் – திருமுருகாற்றுப்படை விளக்கம்
முல்லை நிலையம்
சென்னை, இரண்டாம்பதிப்பு 2003.

ஆனந்த அமலதாஸ் – மனிதனின் முழுமை
வைகறை வெளியீடு
திண்டுக்கல், ஆகஸ்ட்–2005

ஆயைவேலாயுதம்பிள்ளை – ஓர் உயிரின் பயணம்
முத்துச்சந்திரா கருப்புச்சாமி
பதிப்பகம் திண்டுக்கல்
முதற்பதிப்பு–2004.

இரமணன். மா.கி., – பட்டினத்தார் தாயன்பு
பிரேமா பதிப்பகம்
சென்னை, முதற்பதிப்பு–2001.

இரமணன். மா.கி., – திருவாசகத்தில் தன்னை உயர்த்தும்
ஆளுமை, ‘வளரும் தமிழ்’
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்.
2005.

இராமச்சந்திரன், எஸ்.பி., (ப.ஆ) – சித்தர்கள் வரலாறு
தாமரை நூலகம்
சென்னை, முதற்பதிப்பு–1999.

இராமச்சந்திரன், எஸ்.பி., (ப.ஆ) – சிவவாக்கியம் ஆயிரம்
தாமரை நூலகம்
சென்னை, முதற்பதிப்பு–2008.

இராமச்சந்திரன், எஸ்.பி., (ப.ஆ.) – சதுரகிரி ஸ்தல புராணம்
தாமரை நூலகம்
சென்னை, நான்காம் பதிப்பு–2005.

இராமச்சந்திரன். எஸ்.பி., (ப.ஆ) – போகர் 700
சத்தகாண்டம்
தாமரை நூலகம்
இரண்டாம் பதிப்பு மார்ச்–1996.

இராதா செல்லப்பன், முனைவர் (ப.ஆ) – விதியை மதியால் வெல்லலாம்
பாரதிதாசன் பல்கலைக் கழகம்
திருச்சி
முதற்பதிப்பு–2008.

இராமலிங்க அடிகள் – திருவருட்பா ஆறாந்திருமுறை
அருட்பெருஞ்சோதி அச்சகம்
இரண்டாம் பதிப்பு–1942
சென்னை.

இசுலாமிய நிறுவன ட்ரஸ்ட் (ப.ஆ.) – திருக்குர்ஆன் மூலம் (தமிழாக்கம்)
I.F.T. வெளியீடு
4ஆம் பதிப்பு ஜுன் 2009
சென்னை.

இராமச்சந்திரன். விளாக்குடி.ந., – நீயார்?
தஞ்சை மாவட்ட சங்க வெளியீடு
வடலூர்
முதல் வெளியீடு–2007.

இராசகோபாலன். பெ.மு., – சித்த மருத்துவ வினாவிடை நூல்
சித்த மருத்துவக் குருகுலம்
மதுரை, நான்காம் பதிப்பு–1997.

இராகவன்.அ., – சித்தர்களின் பிரணவச் சூத்திரம்
குறிஞ்சி பதிப்பகம்
சென்னை, முதற்பதிப்பு–2003.

இளமதி சானகிராமன். க, முனைவர் – சித்தர்களும், சமூகப்பார்வையும்
குறிஞ்சிப் பதிப்பகம்
புதுச்சேரி
முதற்பதிப்பு டிசம்பர்–1991.

இராமநாதன்.அரு. (ப.ஆ) – பெரிய ஞானக்கோவை என வழங்கும்
சித்தர்பாடல்கள்
பிரேமா பிரசுரம்
14ஆம் பதிப்பு–2008
சென்னை.

இரகுநாதன். எஸ்., கவிஞர் – கௌதம புத்தர்
அனுராகம் வெளியீடு
முதற்பதிப்பு–2008
சென்னை.

உத்தமராயன்.க, – 'தோற்றக்கிரம ஆராய்ச்சியும்
சித்தமருத்துவ வரலாறும்'
சித்த மருத்துவக் கல்லூரி
நெல்லை, முதற் பதிப்பு–2002.

உ.வே. குமாரவாடி சே.இராமானுஜாசாரியர் – ஸ்ரீஇராமானுஜர் (வரலாற்றுச்சுருக்கம்)
திருமால் பதிப்பகம்
சென்னை
5ஆம் பதிப்பு 2011.

ஓஷோ – தந்திரா ஆன்மிகமும் பாலுணர்வும்
ஓஷோ தர்மதீர்த்தா சந்நியாச ஆசிரமம்
திருச்சி 4ஆம் பதிப்பு.
ஏப்ரல்–2003.

கணபதி அடிகள் ஏ.ஜி. பிரம்மஸ்ரீ (ப.ஆ) – உடலமைப்புக் கொள்கை
சித்தர் கலைக் கல்லூரி
சென்னை
முதற்பதிப்பு–1982.

கணபதி சுவாமிகள் பிரம்மஸ்ரீ – ஊன் உடம்பு ஆலயம்
சித்த வித்யாலயம்
கோவை
இரண்டாம் பதிப்பு ஏப்ரல்–1988.

கிருட்டினமூர்த்தி, சா. முனைவர்
அழகர் இராமானுசம்,ஜி. முனைவர்
(ப.ஆ) – வேதாத்திரியத்தில் சமூகவியல்
(இறையியல் சிந்தனைகள்)
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை முதற் பதிப்பு–2005.

கிருபானந்த வாரியார் – ஆலயம் ஏன்?
குகஸ்ரீவாரியார் பதிப்பகம்
சென்னை
முதற் பதிப்பு 1988.

கிருபானந்த வாரியார் – காரைக்காலம்மையார்
குகஸ்ரீவாரியார் பதிப்பகம்
சென்னை
முதற் பதிப்பு 1980.

கிருபானந்த வாரியார் சுவாமிகள் – குருநாதர் (அருணகிரியார்)
வாரியார் பதிப்பகம்
சென்னை முதற்பதிப்பு–2004.

கிருஷ்ணமூர்த்தி டி. கவிராஜ் – சித்தமருத்துவ வினாவிடை
முதல் பாகம்
வளர்மதி மெடிக்கல் சென்டர்
பொதக்குடி, முதற்பதிப்பு–1973.

குமரகுருபர சுவாமிகள். ஸ்ரீ, – நீதிநெறி விளக்கம் மூலமும் உரையும்
திருகாசிமடம் வெளியீடு
திருப்பனந்தாள்
முதற்பதிப்பு–18.5.2003.

குணங்குடிமஸ்தான்சாகிபு (பாடல்கள்) – தனலட்சுமி புத்தக நிலையம்
சென்னை
3ஆம் பதிப்பு–1980.

ஞானசோதி சம்பங்கி. ஸ்ரீ., – வியாச கீதை (உரை விளக்கம்)
ஞான தீபம் பதிப்பகம்
திண்டிவனம்
முதற்பதிப்பு–2000.

ஞானசோதி சம்பங்கி. ஸ்ரீ., – அகப்பேய்ச் சித்தர் பாடல்கள்
ஞானதீபம் பதிப்பகம்
திண்டிவனம்
முதற்பதிப்பு–2001.

சந்திரசேகரன். நா., (ப.ஆ) – சித்தர்கள் எளிய வாழ்க்கையின் வெற்றி
முல்லை நிலையம்
முதற்பதிப்பு ஆகஸ்ட்–1999.

சரவணானந்தா – சாகாக் கல்வி (DETH LESS NESS)
சத்திய ஞானக் கோட்டம்
திண்டுக்கல்
இரண்டாம் பதிப்பு–1990.

சத்திய நாராயணன், [illegible] – நீதி நூல்கள் ஏழு
கார்த்திகேயன் பதிப்பகம்
சென்னை
முதற்பதிப்பு–2009.

சயதயாள் கோயந்தகா சுவாமிநாத் (மொ.பெ.ஆ) – ஸ்ரீமத் பகவத் கீதா தத்துவ விவேசனி தமிழ் விரிவுரை
ஈரோடு
முதற்பதிப்பு–2001.

சாந்தா பப்ளிகேஷன்ஸ் (ப.ஆ) – நாலடியார் மூலமும் நல்லுரையும்
சென்னை
முதற்பதிப்பு–1999.

சாந்தா பப்ளிஷர்ஸ் – வாசன் தமிழ் நீதிச் செல்வம்
சென்னை
முதற்பதிப்பு பிப்ரவரி–1995.

| | |
|---|---|
| சிதம்பரனார். சாமி | – சித்தர்கள் கண்ட விஞ்ஞானம் தத்துவம்<br>சென்னைப் பதிப்பகம், சென்னை<br>முதற்பதிப்பு–1949. |
| சிவகாந்தன், கே.ஆர். | – சித்தர் தத்துவமும் யோக நெறிமுறைகளும் பூண்டிமகான் வரலாறு<br>தி.தெ.சை.சி.நூற்பதிப்புக் கழகம் சென்னை<br>முதற்பதிப்பு–2003. |
| சிவஞானம் ம.பொ.சிலம்புச்செல்வர் | – வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு<br>சென்னை. (ஆ.இ.) |
| சிதம்பரதாணுப்பிள்ளை,எஸ்.டாக்டர் | – சித்தமருத்துவ அமுது<br>சித்த மருத்துவ ஆராய்ச்சி நிலையம் சென்னை<br>இரண்டாம் பதிப்பு–1991. |
| சிதம்பரதாணுப்பிள்ளை,எஸ்.டாக்டர் | – சித்தமருத்துவ உடல் தத்துவம்<br>சித்த மருத்துவ ஆராய்ச்சி நிலையம் சென்னை<br>இரண்டாம் பதிப்பு–1999. |
| சிவபெருமான். அ., சோதிடரத்னா | – தமிழரின் வானியல் திறன்<br>அண்ணாமலைப் பல்கலைக்கழகம் சிதம்பரம்<br>முதற்பதிப்பு–1993. |
| சிவானந்த பரமஹம்சர் சுவாமி, | – சித்த வேதம் மோட்ச சூத்திரம்<br>சித்த சமாஜ வெளியீடு<br>கேரளம்<br>பதினோராம் பதிப்பு–2010. |
| சிவானந்த பரமஹம்சர் சுவாமி, | – உலக ஷேமப் பிரகாசிகை<br>சித்த சமாஜம்<br>கேரளம்<br>நான்காம் பதிப்பு–1993. |

சுந்தரமூர்த்தி, மு. கடலூர் – வள்ளலாரின் மரணமிலாப் பெருவாழ்வு உண்மைதானா?
சென்னை
முதற்பதிப்பு–ஆகஸ்ட் 2008.

சுப்பிரமணியன், ச.வே. முனைவர். – சிலப்பதிகாரம்
கங்கை புத்தக நிலையம்
முதற்பதிப்பு–2009.

சுவாமிநாதன், சி.வித்துவான்
முகவை இராஜகோபாலன் – அருள்மங்கையர் எழுவர்
மாதவி பதிப்பகம்
சென்னை
முதற்பதிப்பு–2002.

செகாதா – வாழ்விக்க வந்த சித்தர்கள்
ஸ்ரீ செண்பகா பதிப்பகம்
சென்னை
முதற்பதிப்பு, ஏப்ரல்–2002.

சேதுப்பிள்ளை. ரா.பி. டாக்டர் – திருவள்ளுவர் நூல்நயம்
தி.தெ.சை.சி. நூற்பதிப்புக் கழகம்
சென்னை, ஆறாம் பதிப்பு
சூன்–1984.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் (ப.ஆ) – கைவல்ய நவநீதம்
தத்துவ விளக்கப் படலம்
திருநெல்வேலி
(ப. ஆ. இ.)

சைவ சித்தாந்த பெருமன்றம் (ப.ஆ) – காயசித்தி அல்லது சாகாக்கலை
சென்னை
நான்காம் பதிப்பு
சூலை–2005.

சோமு. மீ.ப., – சித்தர் இலக்கியம்–தொகுதி-I & II
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
அண்ணாமலை நகர்
முதற்பதிப்பு–2004.

தனக்கோடி,புலவர்.காவித்தண்டலம் – திருவள்ளுவர் வாய்மொழி மாண்பு
ஜெயகணபதி நிலையம்
சென்னை (ஆ.இ.)

தவத்திரு கன்னியப்ப சுவாமிகள் – உணர்வின் ஒளியும் உன்னுள் உலகமும்
மெய்கண்ட ஞானசபை வெளியீடு
சென்னை
ஐந்தாம் பதிப்பு–1980.

தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகம் (ப.ஆ) – போகர் வைத்தியம் 7000
தஞ்சை
முதற் பதிப்பு–1985.

தயவு இல்லம் (ப.ஆ) – ஆதார நிராதார விளக்க மேல் நிலை அனுபவம்
திண்டுக்கல்
முதற்பதிப்பு–1985.

தங்கராஜு, பெ. – புதிய சூரியன் உதயமாகிறது
மணிமேகலைப் பிரசுரம்
சென்னை
முதற்பதிப்பு–2001.

தாயுமானவர் – தாயுமான சுவாமிகள் பாடல் (குறிப்புரையுடன்)
காசிமடம் வெளியீடு
மகேஸ்வர பூசை நினைவு மலர்
திருப்பனந்தாள்
முதற்பதிப்பு–1963.

திருமூலர் – திருமந்திரம்
ஸ்ரீகாசிமடம் மணிவிழா வெளியீடு
திருப்பனந்தாள்
முதற்பதிப்பு–1991.

திருவரசு புத்தக நிலையம் (ப.ஆ) – சித்தர் பாடல்கள்
சென்னை
மூன்றாம் பதிப்பு, டிசம்பர்–2007.

திருநாவுக்கரசு, க.தா., – தமிழர் பண்பாடு
உலகத் தமிழாராய்ச்சி நிறுவன வெளியீடு
சென்னை
முதற்பதிப்பு–2009.

திருஞான சம்பந்தன், மா.ந. – சித்தர் ஒரு கண்ணோட்டம்
அரசி பதிப்பகம்
சென்னை
முதற்பதிப்பு–2006.

திருவள்ளுவ நாயனார் – ஞான வெட்டியான்
(ஆ.இ.)

திருப்போரூர் சிதம்பர சுவாமிகள் – ஒழிவிலொடுக்கம்
நிறைமதி வழிபாட்டுச் சங்கம்
திருப்போரூர்
முதற்பதிப்பு–1996.

நஞ்சுண்டராவ், எம்.சி., டாக்டர் – ஸ்ரீ சக்கரை அம்மா அவர்களின்
திவ்ய சரிதம்
(ப.இ.) சென்னை
வெளியீடு – 2002.

நாராயணன். க., முனைவர் – சித்தர் சிவவாக்கியர்
புதுச்சேரி – 2008

நாலாயிரத் திவ்வியப்பிரபந்தம் – தி லிட்டில் பிளவர் கம்பெனி
சென்னை
இரண்டாம் பதிப்பு – 2005

நிர்மலாதேவி. சூ., முனைவர் – கருவூரார் பலதிரட்டு
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை
முதற் பதிப்பு – 2002

பன்னீர்செல்வம், ஏ.டி.எம்., – அருளாளர் அருணகிரிநாதர்
வாழ்க்கைக் குறிப்புகள்
ஸ்ரீசேஷாத்திரி சுவாமிகள் ஆசிரமம்
திருவண்ணாமலை
முதற்பதிப்பு – ஆகஸ்ட் 1992.

பழனிச்சாமி. கா., டாக்டர்
லலிதாபாய், ப., டாக்டர் – சித்தமருத்துவத்தில் வாழ்க்கை நெறிமுறைகள்
செம்பியன் பதிப்பகம்
சென்னை
முதற்பதிப்பு – 2002

பரிமேலழகர் – திருக்குறள் உரை
சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம்
சென்னை
19ஆம் பதிப்பு – 1987

பரஞ்சோதி மகான் – நான் கடவுள்
உலக சமாதான ஆலயம்
சென்னை
11 ஆம் பதிப்பு – 1996

பசும்பொற்கிழார் – நித்தியானந்தரின் பொன்மொழிகள்
சித்தசமாஜ வெளியீடு
இராசபாளையம்
வெளியீடு – 1970

பாலகுருசாமி. என்., – காலாங்கிநாதர்
கொல்லிமலை இரகசியம் என்னும்
மரணம் மாற்றும் மூலிகைகள்
சுந்தர் பப்ளிகேஷன்ஸ்
சென்னை
முதற்பதிப்பு – மார்ச் 1974

பார்வதி அம்மையார்.சிவ.வித்துவான் – புலத்துறை முற்றிய பூவையர்
தஞ்சை மகாலிங்கம் பதிப்பகம்
தஞ்சை
முதற்பதிப்பு – 1959

பாரதியார் கவிதைகள் – பிரேமா பிரசுரம்
சென்னை
எட்டாம் பதிப்பு – 2002

புலியூர்கேசிகன் – தொல்காப்பியம் (முழுவதும்) தெளிவுரை
பாரி நிலையம்
சென்னை
எட்டாம் பதிப்பு – டிசம்பர் 1993

மகாலட்சுமி. தி., முனைவர் – தட்சிணாமூர்த்தி குருமுகம் 100
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை
முதற்பதிப்பு – 2004

மாடசாமி. ச., – பாம்பாட்டிச்சித்தர்
அருவி பதிப்பகம்
மதுரை (ஆ.இ.)

மீனாட்சி சுந்தரம். தெ.பொ., – சித்தர்களைப் பற்றியக் கலைக் களஞ்சியம் (ஆ.இ.)

மீனாட்சி சுந்தர முதலியார் – சோதிட கிரக சிந்தாமணி என்னும் வருசாதி நூல் (ப.இ.)
சென்னை
முதற்பதிப்பு – 1959

முத்துக்குமரன். பி. (ப.ஆ.) – திருஅருட்பா திருஅமுதத்திரட்டு
குமரன் பதிப்பகம்
வடலூர்
ஏழாம் பதிப்பு – 1990

முருகேசன். சி.எஸ்., – நவநாத சித்தர்கள் (வரலாறும் பாடல்களும்)
அழகு பதிப்பகம்
சென்னை
முதற்பதிப்பு – 2003

முருகேசன். சி.எஸ்., – புதுச்சேரி சித்தர்கள்
சங்கர் பதிப்பகம்
சென்னை
முதற்பதிப்பு – 2008

முத்துராமலிங்கம். வடலூர் – வள்ளலார் விஞ்ஞானம்
அருட்பெருஞ்சோதி அருளாட்சி மையம்
சென்னை
இரண்டாம் வெளியீடு – 2009

மெய்யப்பன். ச., (ப.ஆ.) – பாரதியார் கவிதைகள்
மணிவாசகர் பதிப்பகம்
சென்னை
முதற்பதிப்பு – 1994

மோசஸ் மைக்கேல் பாரடே, முனைவர் – தமிழ்ச்சித்தர் பாடல்களும் விவிலியமும் (கடவுட் கொள்கைகள்)
சி.எஸ்.ஐ. சென்னை வெளியீடு
முதற் பதிப்பு – ஏப்ரல் 1999.

ரெங்கராஜ தேசிக சுவாமிகள் – ஜீவகாருண்ய ஒழுக்கம்
ஓங்காரக்குடில் வெளியீடு
திருச்சி
முதற் பதிப்பு – 2008.

வள்ளலார் தெய்வ நிலையம் – திருஅருட்பா பாராயணத் திரட்டு
வடலூர் பதிப்பு
வடலூர் – 1991.

வத்ஸன். ஸ்ரீ – ஆழ்வார்கள் அருளிச்செய்த நாலாயிர திவ்வியப் பிரபந்தம்
தி லிட்டில் ப்ளவர் கம்பெனி
சென்னை
இரண்டாம் பதிப்பு – 2005

வரதராசானர். மு.வ., டாக்டர் – திருக்குறள் தெளிவுரை
தி.தெ.சை.சி. நூற்பதிப்புக்கழகம்
சென்னை
116வது பதிப்பு – 1993.

வித்யாதரன். க.ப.,முனைவர் சோதிடரத்னா – தமிழர் வாழ்வில் சோதிடம்
ஆய்வேடு
சனவரி – 2007

வேங்கடாசலம். தண்.கி., – அப்பர் பெருமான்
தண்டலை இல்லம்
பெங்களூரு
முதற்பதிப்பு – **1966.**

Shanmugavelan. A., - Siddhar's Science of Longevity and
Kalpha Meicine of India,
Shakthi Nilayam
Chennai
First Published - 1963.

Shanthi Bushan Das Gupta. - Obscure
Religion Cult
Delhi - 1960



சித்தர்களில் தலையாயச் சித்தர் சிவபெருமான்.



சதுரகிரி மலைக்குச் செல்லும் வழியில் நீர் ஓடும் பள்ளத்திற்கு எதிர்புறம் அமைந்துள்ள இம்மலையின் நடுப்பகுதியில் குகை ஒன்று உள்ளது. இக்குகையில் சித்தர்கள் வாழ்ந்தார்கள் என்று நம்பப்படுகிறது. சித்தர் பெயர் தெரியவில்லை.





திருவாவடுதுறையில் உள்ள கோமுக்தீஸ்வரர் சன்னதியில் உள்ள திருமூலர் ஜீவசமாதி. இங்கிருந்துதான் ஆண்டுக்கு ஒரு பாடலாக 3000 ஆண்டுகள் வாழ்ந்து 3000 பாடல் கொண்ட திருமந்திரம் எனும் நூலை எழுதியதாக வரலாறு கூறுகிறது.

நன்றி : திரு.க.பழனிச்சாமி

பதினெட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த அருள்ஞான சித்தர்
இராமலிங்க அடிகள் என்று போற்றப்பெறும்
திரு அருட்பிரகாச வள்ளலார். இவருடைய புகைப்படம்
கருவியில் விழவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.





பாறைக்கல்லில் தனது சிறுநீரை விட்டு சிறுநீர் பட்ட இடமெல்லாம் தங்கமாக மாற்றிய வடகரை சிவானந்த பரமஹம்சர். இவரது ஜீவ சமாதி கேரள மாநிலத்தில் வடகரையில் அமைந்துள்ளது. இவர் தன் சீடரின் சமாதியைப்பத்து மாதம் சென்ற பின் தோண்டிச் சரி செய்தவர்.

படம் : சாமியும் அவரது சமாதியும்.



ஏறத்தாழ ஆயிரம் ஆண்டுகளாக திருமேனி கெடாத நிலையில்
திருவரங்கத்தில் காணப்பெறும் உடையவர் ஸ்ரீ இராமானுஜப் பெருமான்.



கோரக்கச் சித்தரின் சீவ சமாதி
வடக்குப் பொய்கை நல்லூர் நாகை மாவட்டம்.



பழனி தண்டாயுதபாணி சுவாமியின் நவ பாடாணச் சிலையை போகரும் அவரது சீடர் புலிப்பாணியும் உருவாக்குதல்.



கஞ்சமலையின் முழுத் தோற்றம்.



# பூண்டி மகான் ஆற்று சுவாமிகள்

இச் சுவாமிகள் பத்து நாட்கள் ஆற்றுக்கு அடியிலிருந்து மீண்டும் பூமிக்கு வந்து பத்தொன்பது ஆண்டுகள் ஒரே திண்ணையில் வாழ்ந்து சமாதி அடைந்தவர். இவரது சமாதி வேலூர் கலசப்பாக்கத்தில் அமைந்துள்ளது



பத்தொன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்து பல்வேறு ஞானப் பாடல்களை வழங்கிய இசுலாமிய ஞானி குணங்குடி மஸ்தான் சாகிபு

இவருடையச் சமாதி சென்னை இராயபுரத்தில் அமைந்துள்ளது



பாலயோகி சுவாமிகள் என்று அனைவராலும் அழைக்கப்படும் இச் சுவாமிகள் பதினேழு ஆண்டுகளாக உணவு தண்ணீர் ஏதுமின்றி வாழ்ந்தவர். இவர் பிறப்பு 23.10.1930. ஆந்திர மாநிலம் கிழக்கு கோதாவரி மாவட்டத்தில் மும்முடிவரம் என்ற கிராமத்தில் ஓர் எளிய குடும்பத்தில் பிறந்து தவத்தை மேற்கொண்டவர். 1962ஆம் ஆண்டு (32வது வயது) இறைநிலை அடைந்தவர்.




மனித உடலில் இயங்கும் ஆறு ஆதார நிலைகளும், சக்கரங்களும்




போக சாதனையின் மூலம் நெற்றிக்கண், பிடரிக்கண்களைத்திறப்பது. ஆதார நிலைகளில் சக்திகளின் வெளிப்பாடு. நட்டக்கல் பேசாத நிலையில் நாதனாகிய இறைவனுடன் பேசும் நிலை.

# ஆன்மா



1



2



3



4



5



6



7

**மெய்ப்பொருள் உபதேசம் பெற்றவர்களின் உயிரின் வளர்ச்சியை குறிக்கும் படம்**

குறிப்பு : இந்த ஆன்மாவின் விளக்கப் படம் சென்னையில் வாழும் ஆத்மஞானி அன்னை சரளாதேவி அவர்களால் ஆன்மீக நிலையில் உணரப்பட்ட விளக்கப்படம் ஆகும்.

ஆன்மா அல்லது ஆத்மா

ஆன்மவை உள்ளம் என்றும், உயிர் என்றும், இருவேறு பெயர்களில் உலகமக்கள் அழைத்தாலும், எல்லாம் செய்யவல்ல கடவுளின் சக்தியை தன்னில் அட்க்கிக் கொண்டிருக்கின்ற சிறியதிலும் சிறியதாய் உள்ள அணுதான் ஆன்மா எனப்படுகிறது. இவ்ஆன்மா உடல் உயிரோடு இருக்கும் நிலையில் உடல் முழுவதும் பரவிப் பிரகாசித்துக் கொண்டிருக்கும்; உயிர், உடலைவிட்டு மறைந்ததும் ஆன்மாவும் மறையும் தன்மையுடையதாகும் என்று சுவாமி சரவணானந்தா குறிப்பிடுகிறார்.

இந்த ஆன்ம அணு ஒரு மனித உடலில் தவ ஆற்றலால் வெளிப்பட்டு விளங்கும்போதுதான் ஆன்மாவின் ஒளியையும், (ஆன்மப்பிரகாசம்) தன் இருப்பயையும் அறிய முடியும். இவ்வான் மாவுக்குள் கடவுள் உண்மை உடல்முழுதும் பரவி இருந்து பிறவிகள் தோறும் சதா வளர்ந்து கொண்டே உள்ளது. ஆன்மாவுக்கு அழிவில்லை, ஆனாலும் தெய்வமாகாது. ஆன்மாவுக்குள் நீக்கமற நிறைந்துள்ள அருளும், ஜோதியும் கொண்ட ஒன்றே கடவுளாகும் என்று மேலும் விளக்குகிறார்.

இராமலிங்க அடிகள் ஆன்மாவுக்கு விளக்கம் தருமிடத்தில், "ஆன்மா–எக்காலத்தும் உள்ளதாய் விளங்கப்பட்டது. அது தோன்றுதலுமில்லை, அழிதலுமில்லை. அதை ஆக்கவும் அழிக்கவும் படாது (முடியாது). தேகமாகிய உடல் அழியும் போது தேகத்தினுள் இருக்கின்ற ஆன்ம விளக்கமும், கடவுள் விளக்கமும் அழியாது" என்று திருவருட்பா ஜீவகாருண்யப் பகுதியில் குறிப்பிடுகிறார்.

மேலும் அடிகள், "ஜீவன் இருக்கின்ற ஸ்தானம்" எனும் தலைப்பில் "இந்த தேகத்தில் ஜீவன் (உயிர்) இருக்கின்ற ஸ்தானம் (இடம்) ஐந்து, அதில் முக்கிய ஸ்தானம் 2 அவை கண்டம், சிரசு ஆகும் சிரத்திலுள்ளது பரமாத்மா என்னும் சாமானிய ஜீவன் இறக்காது. கண்டத்திலுள்ளது ஜீவாத்மா என்னும் விசேஷ ஜீவன் இறந்து விடும் என்கிறார். மேலும் இவ்வுடம்பில் ஆன்மா தனித்திருக்கும்; ஜீவன் மனம் முதலிய அந்தக் கரணக் கூட்டத்தின் மத்தியிலிருக்கும் என்றும் உயிர் (ஜீவன்) உடல், ஆன்மா ஆகியவற்றுக்கு விளக்க்மாகக் குறிப்பிடுகிறார்.

## அகத்தியர் பெயரில் பலர்

1. பொதியமலை அகத்தியர் – (கி.மு.16000)
2. முத்தூர் அகத்தியர் – (கி.மு.14550)
3. வாதாபி அகத்தியர் – (கி.மு.14058)
4. உலோபமுத்திரை அகத்தியர் – (கி.மு.8000)
5. மைத்திரா வருண அகத்தியர் – (கி.மு.8000)
6. மானிய அகத்தியர் (ஆரியர்) காலம் – (கி.மு.8000)
7. கும்ப அகத்தியர் (ஆரியர்) – (ஆ.இ.)
8. ஆவீர்பூ புத்திரர் அகத்தியர் (ஆரியர்) – (ஆ.இ.)
9. கந்தருவன் புத்திரர் அகத்தியர் (ஆரியர்) – (ஆ.இ.)
10. ஏழு இருடிகளுள் ஒருவராகிய அகத்தியர் – (கி.மு.7500)
11. புரோகித அகத்தியர் 1 – (ஆரியர் – கி.மு.7000)
12. தொடித்தோள் செம்பியன் காலத்து அகத்தியர் – (தமிழர் கி.மு.6200)
13. குடகு மலை அகத்தியர் 1 – (தமிழர் – கி.மு.6020)
14. உலோபா முத்திரை அகத்தியர் – (கி.மு.6010)
15. கோசல நாட்டு அகத்தியர் – (ஆரியர் கி.மு.6000)
16. பஞ்சவடி அகத்தியர் – (ஆரியர் கி.மு.6000)
17. மலையமலை அகத்தியர் I – (ஒளியர் கி.மு.6000)
18. குஞ்சரகிரி அகத்தியர் I – (தமிழர் கி.மு.6000)
19. புரோகித அகத்தியர் II – (தமிழர் கி.மு.6000)
20. குஞ்சரகிரி அகத்தியர் II – (ஆரியர் கி.மு.3110)
21. துவராபதி அகத்தியர் – (ஆரியர் கி.மு. 3100)
22. யசோமதி அகத்தியர் (ஆரியர் கி.மு.2000)
23. புரோகித அகத்தியர் II – (ஆரியர் கி.மு.1900)
24. காரைத்தீவு அகத்தியர் – (பௌத்தர் கி.மு.400)
25. போதலகிரி அகத்தியர் – (பௌத்தர் கி.மு.274)
26. திலோத்தமை அகத்தியர் – (பௌத்தர் கி.மு.100)

27. பாவநாச (மலையமலை) அகத்தியர் I – (தமிழர் கி.பி.500)

28. பாவநாச (மலையமலை) அகத்தியர் II – (தமிழர் கி.பி.500)

29. புரோகித அகத்தியர் IV – (ஆரியர் கி.பி.600)

30. குஞ்சரகிரி அகத்தியர் III – (ஆரியர் கி.பி.700)

31. புரோகித அகத்தியர் V – (தமிழர் கி.பி.700)

32. சித்த அகத்தியர் – (தமிழர் கி.பி.1100)

33. தேவார அகத்தியர் – (தமிழர் கி.பி.1300)

34. நூல் எழுதிய அகத்தியர் – (ஆரியர் கி.பி.1300)

35. திருமாலை சிவனாக்கிய அகத்தியர் – (தமிழர் கி.பி.1300)

36. அகத்திய பட்டர் – (ஆரியர் கி.பி.1800)

37. பள்ள அகத்தியர் – (தமிழர் கி.பி.1900)

இவ்வாறு அகத்தியர்கள் 37 பேர் வாழ்ந்துள்ளதை சித்தர் செயல் மக்கள் நல மாத இதழ் மூலம் அறிய முடிகிறது.

குறிப்பு : சித்தர் செயல் மாத இதழ், பிப்ரவரி' 2001, மரு.ஏ.ஜி. கணபதி அடிகள், ப. 45

நூல் ஆதாரம்: ''அகத்தியர் வரலாறு 1964 திருமந்திர மணி, துடிசைக்கிழார் ஆ. சிதம்பரனார் அவர்கள் சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் – அகத்தியர் காலத்தால் பலராவார் என்னும் கருத்தை வலியுறுத்தி அகப்புறச் சான்றுடன் சிறப்பாக ஆய்வு செய்துள்ளார்'' என்று செய்திச் சோலை, சனவரி' 2001 இதழில் குறிப்பிடப்பட்டுள்ளது.

## தன்னைத்தானே எரித்துக்கொண்ட சீக்கியச் சாது

சித்தர்களும், சாதுக்களும் உலகியல் வாழ்வு முடிவுற்றது என்பதை அறிந்ததும் அடக்கத்தை மேற்கொள்வார்கள். அதில் பல்வேறு யோக முறைகளின் மூலம் உயிரடக்கம் என்னும் பஞ்ச பூதத்துடன் கலக்கும் முறைகளான; பூமிக்குள் சமாதியடைவது, ஆகாயத்தில் மறைவது, நெருப்புடன் (சோதி) ஒன்று கலப்பது, நீரில் சமாதி (ஜலசமாதி), காற்றுடன் கற்பூரம் போல் கரைவது ஆகிய முறைகளில் ஒன்றிணைந்து இறைநிலை அடைவர்.

1970 ஆம் ஆண்டு சீக்கிய மத சாது ஒருவர் (சாதுசிங்) ஹெட்டா மாவட்டம் சஞ்சுடூட்டுவாரா என்னும் நகரத்தில், (இது உத்திரபிரதேசம் லக்னோவில் உள்ளது) காவல்துறை அதிகாரிகள், டாக்டர்கள், விஞ்ஞானிகள், நீதிபதிகள் ஆகியோர்கள் காணும் விதத்தில் காலை 10.00 மணி முதல் பிற்பகல் 3.00 மணிக்குள் (ஆறு மணி நேரத்தில்) முற்றிலுமாக தன்னை எரித்துக் கொண்டார்; எரிபொருட்களான விறகு, மண்ணெண்ணெய், பெட்ரோல், ஆகிய பொருட்கள் ஏதுமின்றி எரித்துக்கொண்டதை காவல்துறை அதிகாரியான டி.பி.சர்மா என்பவரும், மாவட்ட குற்றவியல் நீதிபதி வல்வர்சிங் ஆகிய இருவரும் கண்டனர். எவ்விதமான துர்நாற்றமும், உடல் எரிந்த தடயமும் இல்லாதிருந்ததையும் அறிந்தனர். இந்நிகழ்ச்சி நவம்பர் ஆறாம் நாள் கோகுலாஷ்டமி திதியில் நிகழ்ந்திருப்பதாகவும், மெழுகு எரிவதைப் போன்று அக்காட்சியிருந்ததாகவும், நறுமணம் வீசியதாகவும் உணர்ந்தனர். 'இந்து' நாளிதழின் நிருபர் நிகழ்வுபற்றி ஊர் மக்களையும், அதிகாரிகளையும் பேட்டி கண்டு நவம்பர் 27ந்தேதி 1970ம் ஆண்டு ஆங்கில இதழான 'இந்து' நாளிதழில் வெளியிட்டுள்ளதை ஆதார பூர்வமாக ''உயிர்உறவு'' என்னும் (அரசு விருது பெற்றது) நூலின் ஆசிரியர் கூ. சங்கரய்யா அவர்கள் குறிப்பிட்டுள்ளார்.

ஞானிகள், இறுதி காலங்களில் எந்த விதத்திலேனும் தன்னை மறைத்துக் கொள்வர் என்பதற்கும், 1874இல் வள்ளலார் இராமலிங்க சுவாமிகள் தன்னை பூட்டிய அறையில் வைத்து மறைத்துக்கொண்ட நிகழ்வும் இங்கு ஒப்பிடத் தக்கதாகும்.



சித்தர்களால் பூசிக்கப்பட்ட சதுரகிரி இரட்டை மகாலிங்கம்



கொல்லிமலையில் சித்தர்களுக்கு காவல் தெய்வமாக விளங்கும் கொல்லிப்பாவை தெய்வம்.



ஸ்ரீமத் சிதம்பர சிவஞான சுவாமிகள்.

மதுரை மீனாட்சி அம்மையின் அருளால் ‘மீனாட்சியம்மைக்கலிவெண்பா’ பாடி அங்கயற்கண்ணி ஆணையிட சமரபுரி, யுத்தபுரி, போரூர், சமரப்பதி, போரி, போரியூர், என வழங்கப்படும் திருப்போரூர் கந்தசுவாமியை பெண்பனையின் வேர் புற்றிடங் கொண்ட சுவாமி சிலையை 400 ஆண்டுகளுக்கு முன்பு கண்டெடுத்து திருக்கோயில் அமைந்தவர். இவர் தங்கியிருக்கும் ஆசிரமத்திற்கும், திருக்கோயிலுக்கும் சுரங்கப்பாதை அமைத்து தினமும் பூசை செய்து சுரங்கத்தின்உள்ளே சமாதி அடைந்தவர் என்று கருதப்படுகிறது. இன்றும் மடத்தின் பாதை வழி மூடி வைக்கப்பட்ட நிலையில் சமாதி அமைந்துள்ளது.




சில நூறாண்டுகளுக்கு முன்பு வாழ்ந்து பல அதிசயங்களையும் மக்களின் வாழ்வியல் துன்பங்களையும் பிணிகளையும் நீக்கிய மகான். சுரக்காய் சித்தர் இவரது ஜீவ சமாதி ஆந்திர மாநிலம் புத்தூர் நாராயண வனத்தில் அமைந்துள்ளது. எப்போதும் இரண்டு நாய்களையும் சுரைக்குடுக்கையையும் தன்னுடன் வைத்திருப்பவர். அதன் காரணமாக சுரக்காய் சுவாமி என்ற அடைமொழியோடு அழைக்கப்படுபவர்.



பேரானந்த நிலையில் ஒரு ஞானியுடன் வன விலங்குகள் ஆனந்த கூத்தாடுவது
ஸ்ரீ சைதன்ய மகாபிரபு

படம்: காஞ்சங்காடு குகை ஆசிரமம், சுவாமியின் திருவுருவப்படம்





கேரளாவில் காஞ்சங்காடு ஆசிரமத்தை ஏற்படுத்தி ஒரே செம்பாறை மலையில் 44 குகைகளைச் செதுக்கி சீடர்கள் தவம் இருப்பதற்காக ஏற்படுத்திய நித்தியானந்த சுவாமிகள். பல அற்புதங்களை நிகழ்த்தி பம்பாய் கணேஷ்புரியில் இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு ஜீவசமாதி அடைந்தவர்.

# நடந்து வந்த பாதை

போட்டித் தேர்வுக்கு தயாராகும் மாணவ-மாணவிகள் பயன்பெறும் வகையில் 'நாட்குறிப்பு' பகுதியில் முக்கிய நிகழ்வுகளின் தொகுப்பு இடம் பெற்று வருகிறது. இம்மாதம் 4-ம் தேதி முதல் 10-ம் தேதி வரை நடைபெற்ற முக்கிய சம்பவங்களின் தொகுப்பு இங்கே இடம் பெற்றுள்ளது.

மே 4:- நாடு முழுவதும் பட்டம் மற்றும் பட்டமேற்படிப்புகளுக்கான கல்வி கட்டணத்தை அதிகரிப்பது குறித்து பரிசீலிக்க தனி கமிட்டிகளை அமைப்பதாக பல்கலைக் கழக மானியக் குழு அறிவித்தது.

❖ சில மாதங்களுக்கு முன்பு செவ்வாய் கிரகத்தில் மனித உருவம் இருப்பது போன்று படம் வெளியாகி பரபரப்பை ஏற்படுத்தியது. அதே போன்று மெக்சிகோ நாட்டின் நியூவோலியோன் மலைப்பகுதியில், பறக்கும் பெண் போன்ற மனித உருவம் நடமாடுவதாக தகவல்கள் பரவின. வானில் உள்ள மர்மப் பொருட்களை படம் பிடிக்கும் வானியல் ஆய்வாளர்கள், தாவி பறந்து செல்லும் அந்த மர்ம உருவத்தை கண்டுபிடித்தனர். இது குறித்து அன்னா லூசியா என்ற வானியல் ஆய்வாளர் கூறும்போது, "மலை பகுதியில் பறக்கும் உருவம் நடமாடுவது உண்மை. கிடைத்துள்ள வீடியோ பட ஆதாரங்கள் இதை உறுதி செய்துள்ளது. ஆனால் அதன் தோற்றம் தெளிவாக பதிவாகவில்லை. புகை போன்ற உருவத்தில் பெண் வடிவில் அந்த தோற்றம் காணப்படுகிறது," என்றார். இந்த மர்ம உருவம் குறித்து வானியல் விஞ்ஞான உலகில் திடீரென்று பரபரப்பு விவாதம் தோன்றியது.





❖ அமெரிக்காவின் பயங்கரவாதிகள் பட்டியலில் தென் ஆப்பிரிக்கா தலைவர், நெல்சன் மண்டேலா பெயர் தொடர்ந்து இருந்து வருகிறது. இதனால் அவர் அமெரிக்கா செல்வது என்றால் சிறப்பு அனுமதி பெறும் நிலை உள்ளது என்பது தெரிய வந்தது.

மே 5:- டெல்லியில் நடந்த விழாவில் மத்திய மந்திரி பிரணாப் முகர்ஜி, கிரிக்கெட் வீரர் சச்சின் தெண்டுல்கர் உள்பட 5 பேருக்கு பத்ம விபூஷன் விருதுகளையும், எச்.சி.எல். கம்ப்யூட்டர் நிறுவன தலைவர் ஷிவ் நாடார் உள்பட 14 பேருக்கு பத்ம பூஷன் விருதுகளையும், தினத்தந்தி அதிபர் பா.சிவந்தி ஆதித்தன் உள்பட 37 பேருக்கு பத்மஸ்ரீ விருதுகளையும் ஜனாதிபதி பிரதீபா பட்டீல் வழங்கினார்.

❖ தென் மாவட்டங்களில் ரூ.50 கோடிக்குமேல் முதலீடு செய்யும் தொழில்நிறுவனங்களுக்கு சிறப்பு சலுகைகள் அளிக்கப்படும் என்று அமைச்சர் மு.க.ஸ்டாலின் அறிவித்தார்.

❖ எதிர்க்கட்சி தலைவர் அத்வானி மற்றும் மக்களவை முனைவர் பிரணாப் முகர்ஜி ஆகியோர் வேண்டுகோளை ஏற்று, 32 எம்.பி.க்களுக்கு அனுப்பப்பட்ட நோட்டீசுகளை திரும்ப பெறுவதாக சபாநாயகர் சோம்நாத் சட்டர்ஜி அறிவித்தார்.

❖ சூரியனை ஆராய்வதற்காக அமெரிக்காவின் விண்வெளி ஆய்வு நிறுவனமான நாசா 2015-ம் ஆண்டில் விண்கலம் அனுப்புகிறது. பூமியில் இருந்து சூரியன் வெகு தொலைவில் அமைந்திருப்பதாலும், அங்கு நிலவும் வெப்ப சூழ்நிலை காரணமாக இதுவரை எந்தவொரு நாடும் விண்கலம் அனுப்பியதில்லை. ஆனால் 2600 டிகிரி பாரன்ஹீட் வெப்பத்தை தாங்கும் விதத்திலான தகடுகள் பொருத்தப்பட்டு, இதற்காக பிரத்யேக விண்கலத்தை அமெரிக்க விஞ்ஞானிகள் தயாரிக்கிறார்கள். சுமார் ரூ.3 ஆயிரம் கோடி செலவில் இந்த விண்வெளி திட்டம் செயல்படுத்தப்பட உள்ளது.

மே 6:- டெல்லி மேல்-சபையில் பலத்த கூச்சல் அமளிக்கு இடையே பெண்கள் இடஒதுக்கீடு மசோதா

செவ்வாய் கிரகத்திலும், மெக்கிகோ நாட்டின் மலைப் பகுதிகளிலும் மர்ம உருவங்கள் தாவிப் பறந்து செல்வதையும், புகைபோன்ற பெண் வடிவிலான ஒரு தோற்றம் காணப்படுவதையும் விஞ்ஞானிகளுக்கும் புரியாத புதிராக இருப்பதை இப்படமும், செய்தியும் தெரிவிக்கிறது. சித்தர்கள் வானில் பறப்பதும், புகைபோன்று அவர்கள் ஓரிடத்திலிருந்து வேறிடத்திற்கு செல்வதையும் இதன் மூலம் அறிய முடிகிறது.

மாவட்டம்



கருப்பு உருவத்தில் சித்தர் பறக்கும் காட்சி.

## திருவண்ணாமலையில்

# சித்தர் வானில் பறந்தாரா?

## செல்போனில் பரவும் காட்சிகள்

திருவண்ணாமலை,
பிப். 22–

திருவண்ணாமலையில் செல்போன்களில் பரவும் ஒரு வீடியோ காட்சியால் பரபரப்பு ஏற்பட்டுள்ளது.

அந்த காட்சியில் முதலில் அடர்ந்த காட்டு பகுதி வருகிறது. அங்கு 2 மரங்கள் இடையே ஒரு மனித உருவம் நிற்கிறது.

திடீரென்று அந்த உருவம் மேலே பறக்கிறது. இந்த காட்சியை சிலர் செல்போனில் எடுத்து பரவ விட்டிருக்கிறார். திருவண்ணாமலையில் மாணவர்கள், இளைஞர்கள், பெண்கள் என பலரது செல் போன்களில் வலம் வருகிறது. இதை அவர்கள் நண்பர்கள், உறவினர்களுக்கு அனுப்பி வருகிறார்கள்.

**சித்தர்?**

இந்தவீடியோ காட்சி குறித்து [illegible] சேர்ந்த சிலர் கூறுகையில், திருவண்ணாமலை பகுதி சித்தர்கள் வாழ்ந்த பகுதியாகும். தற்போது சித்தர்கள் காட்டு பகுதியில் வாழ்ந்து வரு வதாக நம்பப்படுகிறது.

செல்போனில் பரவுவது சித்தர் உருவ மாகத்தான் இருக்கும் என்று மெய்சிலிர்த்து கூறினர்.

மேலும் சிலர் கூறுகையில் அந்த உருவம் ஆவியாக இருக்கலாம் என்றும், யாரோ விஷமிகள் கிராபிக்ஸ் செய்து உலாவ விட்டி ருக்கலாம் என்றும் கூறுகின்றனர்.

**சேலம் வாலிபர்**

இதே போல் சேலத்தை சேர்ந்த சீனி வாசன் என்பவர் விருதுநகர் மாவட்டம வத்திராயிருப்பு மகாலிங்க உருவத்தை [illegible]

நான் விருதுநகர் மாவட்டம வத்தாராயிருப்பு அருகே உள்ள சதுரகிரி மலையில் உள்ள மகாலிங்க சாமி கோவிலுக்கு நண்பர்களுடன் சென்றேன். காட்டு பகுதியில் சென்றபோது புகைப்படம் எடுத்தேன் அந்த படத்தில் 'டியூப்லைட்' வெளிச்சம் போல ஒரு ஒளிவட்டம், பறவை வடிவில் தெரிந்தது. இதேபோல நிலா போன்ற வட்ட வடிவ பொருள் கறுப்பு நிறத்தில் தெரிந்தது.

இன்னொரு இடத்தில் மனித உருவம் அசையாமல் நிற்பது போல இருந்தது. அதை கோவில் பூசாரிகளிடம் காட்டியபோது அந்த உருவம் சித்தர் என்று [illegible]

திருவண்ணாமலையில் சித்தர்கள் இருப்பதும் அவர்கள் அம்மலைப்பகுதியில் உருவம் இன்றி உலா வருவதும் நிழல் போன்று நடமாடுவதையும் மேலே பறப்பதையும் (கருப்பு உருவம் இரண்டு மரங்களுக்கு நடுவில்) இப்படம் விளக்குகிறது. இதே போன்று சதுரகிரி மலையிலும் ஒளி வடிவிலும் வட்டவடிமாக கருப்பு நிறத்திலும் சித்தர்கள் வந்து போவதை இந்தப் படம் தெளிவுறுத்துகிறது.



ஸ்ரீ சக்கரையம்மா அவர்களின் திருவுருவப் படம்



ஸ்ரீ சக்கரையம்மா அவர்களின் சீவ சமாதி

சென்னை திருவான்மியூர்.



உலகம் முழுவதும் நிலவிவரும் நாக வழிபாடுகள் (மருத்துவம் பிறந்தது தொடங்கி கிரேக்க, இத்தாலி நாடுகள் முதல்) பாம்புக்கும் மனிதனுக்கும் ஒற்றுமை நிலவுவதையும், குறிப்பாக பாரத மண்ணில் தெய்வங்களுடன் நாகத்தின் தொடர்புகளையும் சற்று மிகுதியாகக் காண முடிகிறது.

சித்தர்களின் ஜீவ சமாதிகளையும், அவர்கள் இருக்கின்ற குகைகளிலும், கோயில்களிலும், அவர்கள் வைத்துச் சென்றுள்ள புதையல்களையும் இராஜ நாகங்கள் காவல் செய்து வருவதை அறிகிறோம். இன்றும் கூட கேரள மாநிலம் பத்மநாப சுவாமி ஆலயத்தின் பொக்கிஷங்கள் அடங்கிய அறைகளில் பாம்புகள் காவல் காப்பதாகவும் அதைத்திறந்தால் ஆபத்துவரும் என்பதையும் அறிய முடிகிறது.

சோதிடத்துறையில், நாகத்திற்கு துன்பம் இழைத்தவரின் வாழ்வில் நாகதோடமான (ராகு, கேது குற்றங்கள்) பெரிதும் பேசப்படுகின்றன. அதற்குப் பரிகாரங்களும் கூறப்படுகிறது. ஆவ்வாறான நாகவகையில் ஒருவகையான ஐந்து தலையுடைய நாகம் இதுவாகும்.



சித்தர்களின் வாழ்வியல் கலைகளில் சிற்றின்பக் கலையைக் கூறும் கோயில் சிற்பம்.
சித்தர் கண்ட சிற்றின்பக்கலை (பரியங்கயோகம்)

## சித்தர் கண்ட சிற்றின்பக்கலை (ப ரியங்கயோகம்)

சித்தர்கள் ஞானத்தின் மூலம் எத்தனையோ அரிய கலைகளைக் கண்டறிந்து மக்களுக்கு எடுத்துரைத்தனர். சித்தர்கள் என்றால் அவர்களுக்கும், பெண்களுக்கும் எவ்விதமான உறவுகளும் இல்லையெனவும், அவர்கள் மனைவியர்கள் இல்லாதவர்கள் என்றும், அனைத்திலும் விலகியவர்கள் என்றும் கருதுவது அறியாமையாகும். அவர்களும் மனைவியுடன் வாழ்ந்து பிள்ளைகள் பெற்றுள்ளமை சிலச்சான்றுகள் வாயிலாக வெளிப்படுகிறது.

சித்தர்கள் நாட்டு மக்களுக்கு வாழ்வியல் கருத்துகளும், ஞானஉபதேசங்களும் கூறிய போதிலும், கணவன், மனைவி வாழும் முறைப் பற்றியும், சிற்றின்பத்துறையில் எவ்வாறு அவர்கள் ஈடுபட வேண்டும் என்பதையும் நூல்கள் வாயிலாகவும், கோவில் சிற்பங்கள் வாயிலாகவும் வெளிப்படுத்தினர். அவ்வாறு வெளிப்படுத்தியவர்களில் கோக்கோக முனிவர் "கோக்கோக சாஸ்திரம்' என்னும் இரதி ரகசிய நூலை தந்துள்ளார்கள். இந்நூல் கி.பி.12 ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டது என்று கருதப்படுகிறது. இந்நூல் பெண்களின் வகைப்பாடாக பத்மினி, சித்தினி, சங்கினி, அத்தினி என நான்கு வகையாய் பிரிக்கிறது. ஒவ்வொரு வகைப் பெண்களுக்கும் ஒவ்வொரு விதமான அங்கக் கூறுகளையும்; அதே போன்று ஆண்களில் முயல் வகை, மான்வகை, ரிஷப வகை (காளை) அசுவ வகை (குதிரை) என்று குணங்களின் வேறுபாட்டையும், அவர்கள் குருதியின் தன்மைக் கேற்றவாறு புணர்ச்சியும் அமையும் என்பதையும் எடுத்துரைத்தனர்.

நால்வகைப் பெண்களை மருவும் ஆண்குறி, பெண்குறியின் வகைகளையும், புணர்ச்சியின் வகைகள் ஒன்பதெனவும் பிரித்துள்ளனர். இந்நூல் காமத்தையே முன்னிருத்திக் காமச்சுவையை அனுபவிக்கும் கலைகளை வெளிப்படுத்துகிறது.

இவ்வாறு புணர்ச்சி செய்வதற்கு கால நேரத்தையும், புணர்ச்சிக்கு அடித்தளமாக விளங்கும் பெண் பூப்படையும் பருவம், எந்தமாதத்தில் (தமிழ் மாதங்கள்) பருவமடைந்தால் அவளது குடும்ப வாழ்வும், இல்லற இன்பம் சுவைக்கும் என்றும் சித்தர்கள் கணித்துள்ளனர்.

ஊதாரணமாக சித்திரையில் பூப்பெய்தினால் மோக வெறி கொண்டவளாகவும், வைகாசியில் எய்தியவள் அன்பு கொண்டவள் என்றும், புரட்டாசியில் எய்தியவள் நோயில் துன்புறுவாள் என்றும், மார்கழியில் பூப்பெய்தியவள் தெய்வ பக்தி கொண்டவள் என்றும் பூப்பெய்திய பெண்களின் எதிர்கால நிலையை எடுத்துரைக்கின்றனர்.

இவையெல்லாம் கூறுவதற்குக் காரணம், ஒரு பெண்தான் ஒரு சந்ததியைத் தோற்றுவிப்பவள். அந்த பெண்ணின் யோனியின் மூலம் உருவாகும் கலவி இன்பமும், பிள்ளைப் பேறும் நல்ல முறையில் அமைய வேண்டும். இதற்கு சோதிடத்தில் விலங்குகளை அடிப்படையாக வைத்து 5 ஆம் பொருத்தமான யோனிப் பொருத்தம் பார்க்கப்படுகிறது. கருவுற்றிருக்கும் பெண்ணின் இயக்கங்களையும், மார்பக அமைப்புகளைக் கொண்டும் பிறக்கப்போகும் குழந்தை ஆணா ? பெண்ணா ? என்பதும் அறியப்பட்டிருக்கிறது.

பெண்களுக்கு எட்டுவிதமான இலட்சுணங்களாக காந்தி, குமாரத்வம், லாவண்யம், விலாசம், நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு ஆகிய உடற்கூறுத் தன்மைகளையும் விளக்கப்பட்டிருக்கிறது.

ஆதலால் சித்தர்கள் மனித வாழ்வியலுக்கு அடித்தளமாய் விளங்கும் பெண்ணின்பத்தையும், அதனை அடையும் ஆணின் தன்மையையும் கூறியுள்ளனர். சித்தர்கள் ஞானமாகிய பேரின்பத்தை அடைவதற்குச் சின்றின்பத்தையும் ஒரு யோகமாகவே (பரியங்கயோகம்) சித்தர்கள் மக்களுக்குத் தெளிவிப்பதை அறிய முடிகிறது.